# "சித்தர் இலக்கியங்களில் மனித விழுமியங்கள்"

திருவள்ளுவர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**இர.தேன்மொழி**

முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்)

முதுகலை (ம) தமிழாய்வுத்துறை

அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி

செய்யாறு – 604 407

நெறியாளர்

**முனைவர் க.மாலா,** எம்.ஏ., எம்.எட்., எம்.ஃ.பில்., பிஎச்.டி.,
இணைப் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்
முதுகலை (ம) தமிழாய்வுத்துறை
அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி
செய்யாறு – 604 407





## திருவள்ளுவர் பல்கலைக்கழகம்
வேலூர், தமிழ்நாடு
இந்தியா

பிப்ரவரி 2016

**முனைவர் க.மாலா, எம்.ஏ., எம்.எட்., எம்.ஃபில்., பி.எச்.டி.,**
இணைப் பேராசிரியர் & தமிழ்த்துறைத் தலைவர்,
முதுகலை (ம) தமிழாய்வுத்துறை,
அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி
செய்யாறு - 604 407.

## <u>நெறியாளர் சான்றிதழ்</u>

''சித்தர் இலக்கியங்களில் மனித விழுமியங்கள்'' என்னும் தலைப்பில் திருமதி.இர.தேன்மொழி என்பவர் மேற்கொண்ட இவ்வாய்வேடு என் மேற்பார்வையில் திருவள்ளுவர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக ஆய்வாளரின் சொந்த முயற்சியில் உருவாக்கப்பட்டது என்றும்; இந்த ஆய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் சான்றிளிக்கின்றேன்.

**தமிழ்த்துறைத் தலைவர்** **நெறியாளர்,**

**முதல்வர்**

**இடம் : செய்யாறு.**

**நாள்:**

**இர.தேன்மொழி, எம்.ஏ., எம்.ஃ.பில்., பி.எட்.,**
முனைவர் பட்ட ஆய்வாளர் (பகுதி நேரம்)
முதுகலை (ம) தமிழாய்வுத்துறை
அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி
செய்யாறு – 604 407.

## ஆய்வாளர் உறுதிமொழி

செய்யாறு அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி, தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் க.மாலா, எம்.ஏ., எம்.எட்., எம்.ஃ.பில்., பி.எச்.டி., அவர்களின் மேற்பார்வையின் கீழ் ''சித்தர் இலக்கியங்களில் மனித விழுமியங்கள்'' என்னும் தலைப்பில் திருவள்ளுவர் பல்கலைக்கழக முனைவர் (பி.எச்.டி) பட்டத்திற்காக அளிக்கப்பெறும் இவ்வாய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும்; இந்த ஆய்வேடு இதற்கு முன் வேறெந்த ஆய்வுப்பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**ஆய்வாளர்,**

**இடம்: செய்யாறு,**
**நாள்:**

# நன்றியுரை

''சித்தர் இலக்கியங்களில் மனித விழுமியங்கள்'' என்னும் தலைப்பில் ஆய்வு நிகழ்த்த அனுமதி வழங்கிய திருவள்ளுவர் பல்கலைக்கழக துணைவேந்தர் அவர்களுக்கும், பதிவாளர் அவர்களுக்கும், தேர்வுக்கட்டுப்பாட்டு அலுவலர் அவர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

செய்யாறு, அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரியில், முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள அனுமதி வழங்கிய கல்லூரி முதல்வர் (பொறுப்பு) முனைவர் ஆ.மூர்த்தி, எம்.காம்; எம்.ஃ.பில்., பி.எட்., பி.எச்டி., அவர்களுக்கும் என் நன்றியை சமர்ப்பிக்கிறேன்.

ஆய்வு நெறியாளராக அமைந்து ஆய்வுப் பணியைச் செம்மைபெற நிகழ்த்துவதற்கு என்னை நெறிப்படுத்தி, ஊக்கமூட்டி நல்வழிப்படுத்திய செய்யாறு, அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர், தமிழ் இணைப்பேராசிரியர் முனைவர் க.மாலா, எம்.ஏ., எம்.எட்., எம்.ஃ.பில்., பி.எச்டி., அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

என்னுடைய ஆய்வுப்பணியை விரைந்து முடிக்குமாறு ஊக்கப்படுத்திய பேராசிரியர்கள் முனைவர் கு.கண்ணன் அவர்களுக்கும், முனைவர் கை.சங்கர் அவர்களுக்கும் மனம்நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என்னுடைய ஆசிரியப்பணியோடு ஆய்வுப்பணியை நிகழ்த்துவதற்கு அனுமதியும், ஆசியும் வழங்கிய தமிழ்நாடு பள்ளிக் கல்வி இணை இயக்குநர் அவர்களுக்கும், திருவண்ணாமலை மாவட்ட முதன்மைக் கல்வி அலுவலர் அவர்களுக்கும், செய்யாறு, மாவட்ட கல்வி அலுவலர் அவர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வுக்கு உடனிருந்து வழிநடத்திய செய்யாறு இந்தோ அமெரிக்கன் கல்லூரி முன்னாள் தமிழ் விரிவுரையாளர் முனைவர் மீரா.ஏழுமலை அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னைப் பல்கலைக்கழக தமிழ் வளர்ச்சிக் கழகம் பேராசிரியர் திரு. அர்த்தநாரீஸ்வரர் (பணி நிறைவு) அவர்களுக்கும், சென்னைப் பல்கலைக்கழக அஞ்சல் வழிக் கல்வி தமிழ்த்துறைத் தலைவர் திரு.அரங்க இராமலிங்கம் (பணி

நிறைவு) அவர்களுக்கும், என் மனம்நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். சென்னைப் பல்கலைக்கழக பி.பி.ஏ. பிரிவு அலுவலா் திருமதி. ஏ.கலாவதி இளங்கோவன் அவர்களுக்கும், என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேடு சிறப்புற அமைய சிறந்த கருத்துக்களை வழங்கிய செய்யாறு அறிஞா் அண்ணா அரசு கலைக்கல்லூரி தமிழ்த்துறை பேராசிரியர்கள் அனைவருக்கும் என் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்;

இவ்வாய்வேடு சிறப்புற அமைய அனைத்து உதவிகளையும் உடனிருந்து உதவி புரிந்த எனது துணைவர். எஸ் திருநாவுக்கரசு தலைமை ஆசிரியா் அவர்களுக்கும், சிறந்த ஆலோசனைகளை வழங்கிய எனது தந்தை சி.இரத்தினம் ஒய்வு பெற்ற தமிழாசிரியா் அவர்களுக்கும், என் தாய் குப்பாபாய் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வுக்குத் தேவையான நூல்களையும், ஆய்வேடுகளையும் வழங்கி உதவிய சென்னைப் பல்கலைக்கழக நூலகர், சென்னைப் பல்கலைக்கழக இணைய நூலகர், சென்னை கன்னி மாரா நூலகர், வேலூர் மைய நூலகர், ஆரணி கிளை நூலகர், செய்யாறு அறிஞர் அண்ணா அரசு கலைக்கல்லூரி நூலகர், குண்ணத்தூர் ஸ்ரீபாரதி மகளிர் கல்லூரி நூலகர், குண்ணத்தூர் அரசினா் மேல்நிலைப் பள்ளி நூலகர் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

குறிப்பிட்ட கால அளவிற்குள்ளாகக் கணினி வழியே தட்டச்சு செய்து வழங்கிய எம். டி. நெட். சிட்டி, ஆரணி, உரிமையாளா் திரு எம். மகேஷ் பி.இ., எம்.இ., பி.எச்டி., அவர்களுக்கும் மற்றும் உதவியாளா் அவர்களுக்கும், நண்பர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| புறம் | - | புறநானூறு |
| திருமந் | - | திருமந்திரம் |
| கலி | - | கலித்தொகை |
| குறள் | - | திருக்குறள் |
| திருவரு | - | திருவருட்பா |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நன் | - | நன்னூல் |
| திரு | - | திருவாசகம் |
| கொ.வே | - | கொன்றை வேந்தன் |
| ந.வ | - | நல்வழி |
| தே.ப | - | தேவாரப்பதிகங்கள் |
| மு.வ | - | மு.வரதராசனார் |
| சித் | - | சித்தர்கள் |
| திரு.வி.க | - | திரு.வி.கலியாண சுந்தரனார் |

| | | |
|---|---|---|
| வள்ளுவர் | - | திருவள்ளுவர் |
| மேகலை | - | மணிமேகலை |
| சிந்தாமணி | - | சீவக சிந்தாமணி |
| நாவுக்கரசர் | - | திருநாவுக்கரசர் |
| மணிவாசகர் | - | மாணிக்கவாசகர் |
| சம்பந்தர் | - | திருஞானசம்பந்தர் |
| அ.ச.ஞா | - | அ.ச. ஞானசம்பந்தன் |

## பொருளடக்கம்

# சித்தர் இலக்கியங்களில் மனித விழுமியங்கள்

## முன்னுரை

# சித்தர் இலக்கியங்களில் மனித விழுமியங்கள்

## முன்னுரை

மனிதப் பிறவி என்பது ஒரு அரிய பிறவி. இந்தப் பிறவி மற்ற பிறவிகளைவிடச் சிறப்பு வாய்ந்தது. 'மன உணர்வு' என்னும் ஆறாவது அறிவு மனித இனத்திற்கு மட்டுமே உரியது.

ஒருவனுடைய மனம் சிறந்த தன்மைகளையும், இயல்புகளையும் பெற்று நிலைபேறுடைய விழுமியங்களாக அமையும் போது அம்மனிதன் சமூகத்தில் தனக்கென ஒரு இடத்தையும் சிறப்பையும் பெறுகிறான்.

இத்தகைய சிறந்த நிலைபேறுடைய விழுமியங்களைத் தந்த சான்றோர்கள் பலருண்டு. சாதிமத வேறுபாடுகளைக் கடந்து மனித இனம் பண்பாட்டுடன் உயர்ந்தோங்கி வளரவேண்டும் என எண்ணிய உத்தமர்கள் பலருண்டு. அவர்களில் உயர்ந்த அறங்களை எடுத்துரைப்பதில் சித்தர்களுக்குத் தனி இடம் உண்டு.

### 01. ஆய்வுத் தலைப்புத் தேர்வு:

**"சித்தர் இலக்கியங்களில் மனித விழுமியங்கள்"** என்பது இந்த ஆய்வின் தலைப்பாகும்.

ஒரு மனிதனை, மற்ற மனிதனிடமிருந்து வேறுபடுத்திக் காட்டுவது, அவனிடம் காணப்படும் நற்பண்புகளே. இவை கொடை, அன்பு, அருள், விருந்தோம்பல், நட்பு, உண்மை, மனிதநேயம் போன்ற விழுமியங்கள் தான். இத்தகைய மனித விழுமியங்கள் சித்தர் இலக்கியங்களில் காணப்படுகின்றன.

சித்தர் நூல்களைப் பயிலும் போது நம் மனதிலுள்ள மாயைகள் அகன்று உண்மை ஒளி தோன்றும். அந்த ஒளியே நம் வாழ்வில் உயர்வதற்கு வழிகாட்டும். சித்தர்களைப் பற்றியும் சித்தர் இலக்கியங்கள் பற்றியும் யோக நித்திரையின் நன்மைகள், சித்தர்கள் காட்டிய மருத்துவம் போன்ற பல துறைகளில் ஆய்வுகள் நிகழ்த்தப்பெற்றுள்ளன. ஆனால் சித்தர் இலக்கியங்களில் காணப்படும் மனித விழுமியங்கள் பற்றித் தனியாக ஆய்வுகள் வெளிவரவில்லை. எனவே, சித்தர் இலக்கியங்களில் மனித விழுமியங்கள் என்பது ஆய்வுத் தலைப்பாகத் தேர்வு செய்யப் பெற்றுள்ளது.

## 0.2 ஆய்வு நோக்கம்:

இன்றைய சமுதாயம் மனித விழுமியங்களைத் தொலைத்து விட்டுத் தடுமாறி நிற்கின்றது. ஆதலால் இன்றைய சமூகத்திற்கு இவற்றைக் கற்பிக்க வேண்டும். மக்கள் நல்ல நற்பண்புகளைப் பேணி ஒழுக வேண்டும். ஒற்றுமை அமைதி நிலவவேண்டும். இவையெல்லாம் வேண்டுமானால் சித்தர்களின் இலக்கியங்களைப் படிக்க வேண்டும்.

சித்தர்களின் கொள்கையும், தத்துவமும், நாட்டில் பரவினால் மக்களுக்குள் அன்பும் ஒற்றுமையும் வளரும், மனிதநேயம் மாண்புறும். சமத்துவம் மலரும் சகோதரத்துவம் வளரும், உலகம் நிலைத்து நிற்கும் என்ற உயரிய நோக்கத்தோடு இந்த ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## 0.3 ஆய்வு மூலங்கள்:

இந்த ஆய்வுக்குத் தேவையான மூலங்கள் இரண்டு வகைகளாகத் திரட்டப்பட்டுள்ளன.

அவை:

1. முதன்மைச் சான்றுகள்
2. துணைமைச் சான்றுகள்

என்பவையாகும்.

### 1. முதன்மைச் சான்றுகள்:

இவ்வாய்வின் முதன்மைச் சான்றுகளாக இடம் பெறுவது திருமூலர், பட்டினத்தார், சிவவாக்கியர். அழுகணிச்சித்தர், குதம்பைச் சித்தர் போன்ற சித்தர்களின் பாடல்கள் ஆகும்.

### 2. துணைமைச் சான்றுகள்:

சங்க காலம் முதல் இக்காலம் வரை எடுத்துக் காட்டப்பட்ட வாழ்க்கை நெறி பற்றிய குறிப்புகள், விழுமியங்கள் பற்றி அகராதி சுட்டும் பொருள், சித்தர் இலக்கியங்கள் பற்றி வெளிவந்துள்ள திறனாய்வு நூல்கள், கட்டுரைகள் சித்தர்களைப் பற்றிய கருத்தரங்கங்கள் ஆகியவை துணை ஆதாரங்களாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**04. ஆய்வு எல்லை**

திருமூலா் திருமந்திரம் சிவவாக்கியர் பாடல்கள், பட்டினத்தார் பாடல்கள் போன்றவை ஆய்வு எல்லைகளாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

**05. ஆய்வின் அணுகுமுறைகள்:**

இந்த ஆய்வு சித்தா் இலக்கியங்களில் உள்ள வாழ்வியல் நெறிகளின் சிறப்பு நோக்கி சமூகவியல் அணுகுமுறை, விளக்கமுறை, மதிப்பீட்டு முறை ஆகிய அணுகுமுறைகளைக் கொண்டுள்ளது.

**06. ஆய்வேட்டின் அமைப்பு:**

இவ்வாய்வேடு கீழ்க்கண்ட நிலையில் அமைக்கப்பட்டுள்ளது.

முன்னுரை

1. இலக்கியங்களில் மனித விழுமியங்கள்
2. சித்தர்கள் - ஒரு பார்வை
3. சித்தர்களின் பார்வையில் மனிதனும் அறமும்
4. சித்தர்கள் காட்டும் ஒழுக்க நெறிகள்
5. சித்தர்கள் பார்வையில் இறைமை

முடிவுரை

துணை நூற்பட்டியல்

பின்னிணைப்புகள்

என்ற முறையில் அமைந்துள்ளது.

**முன்னுரை:**

முன்னுரையில் ஆய்வுத் தலைப்புத் தேர்வு, ஆய்வின் நோக்கம், ஆய்வு மூலங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வேட்டின் அமைப்பு, துணை நூற்பட்டியல், பின்னிணைப்புகள் பற்றி விளக்கப்பட்டுள்ளது.

**07 இயல் - 1: இலக்கியங்களில் மனித விழுமியங்கள்:**

இலக்கியங்களில் மனித விழுமியங்கள் என்பது முதல் இயலாக அமைந்துள்ளது.

இவ்வியலில் விழுமியம் என்பதற்கான பொருள், நிலைபேறுடைய விழுமியங்கள் பற்றியும், தனிமனித ஒழுக்கமான அன்பு, நல்லறிவு, சான்றாண்மை, பெருமை, பண்புடைமை, நாணுடைமை போன்றவற்றைப் பற்றியும் கூறப்பட்டுள்ளது.

சங்க இலக்கியங்களான கலித்தொகை, புறநானூறு போன்ற நூல்களில் காணப்படும் மனித நேயக் கூறுகள், போரில் கடைபிடிக்கப்படும் அறம் தழுவிய நெறிமுறைகள், பசிப்பிணி போக்கும் மாண்பு, கொடை மடம் படுதல், போன்றவை பற்றியும், புலவர்களிடம் காண்பபடும் மனித நேயம் பற்றியும் ஆராயப்படுகிறது.

சமயங்களின் நோக்கம், சமய இலக்கியங்களான தேவாரம், இரட்சணிய யாத்திரிகம், சீறாப்புராணம், நீலகேசி, மணிமேகலை போன்ற நூல்களில் கூறப்பட்டுள்ள அறக் கருத்துகள் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன. மனித குலம் ஒன்று என்பதே பொது நீதி. சமயங்களின் ஒருமித்த குரல் அன்பு காட்டு, உதவி செய், பகையை மற, பண்பு பாராட்டு, அன்புப் புனலால் மாற்றார் மனத்தைக் குளிப்பாட்டு, மகிழ்ச்சியோடு இறைவனின் திருப்பாதங்களை வணங்குங்கள் என்பன பற்றி கூறப்பட்டுள்ளது.

நாலடியாரில் இடம் பெற்றுள்ள மேன்மக்கள் பற்றிய செய்தியும், அருமையான பெரியோர்களின் தொடர்பால் ஏற்படும் நன்மைகள் பற்றியும் எடுத்துக் கூறப் பெற்றுள்ளன.

திருக்குறள் காட்டும் விருந்தோம்பலின் சிறப்பு, செய்நன்றியறிதல், ஏழைகளுக்கு ஈதல், உயிர்களிடம் இரக்கம் காட்டுதல், எவ்வுயிரையும் கொலை செய்யா திருத்தல், இரப்பவர்க்கு உதவுதல் போன்ற கருத்துகள் இடம் பெற்றிருக்கின்றன. ஆசாரக்கோவையில், பெருவாயின் முள்ளியார் கூறும் அடிப்படைப் பண்புகளான நன்றியறிதல், பொறையுடைமை, இன்சொல், துன்பம் செய்யாமை, கல்வி, ஒப்புரவறிதல், அறிவுடைமை, நட்பு போன்ற எட்டு பண்புகள் பற்றி விளக்கப்பட்டுள்ளன.

சிலப்பதிகாரத்தில், இடம்பெறும் மூன்று பெரும் உண்மைகள், கற்பு எனும் அறமதிப்பு விருந்தோம்பும் பண்பு, ஈகை குணம் பற்றிக் கூறப்படுகின்றன.

மணிமேகலையில் இடம் பெறும் ஈகை என்னும் பேரறம் பற்றி எடுத்துக்காட்டப்படுகின்றது.

சீவகசிந்தாமணியில் ஈகை பற்றியும், ஈயாமையின் அவலத்தன்மை பற்றியும் கூறப்படுகின்றது.

வளையாபதியில் கூறப்பட்டுள்ள நிலையாமைக் கருத்துகள், எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

குண்டலகேசி காட்டும் இளமை நிலையாமை பற்றிய கருத்துகள் இடம் பெற்றுள்ளன.

இராமலிங்க அடிகள் பாடல்களில் காணப்படும் உயிரிரக்கம், புலால் வெறுத்தல் பற்றிய செய்திகள், பாரதியார் பாடல்களில் காணப்படும் நாட்டுப்பற்று, சாதிக்கொடுமை, பெண் விடுதலை, ஒற்றுமை உணர்வு பாரதிதாசன் பாடல்களில் காணப்படும் பெண்ணடிமை வீர முழக்கம், இன உணர்வு, சமுதாய உணர்வு, கல்வியின் இன்றியமையாமை, கவிமணியின் பாடல்களில் இடம் பெறும் கோவில் வழிபாடு பற்றிய இறைமைச் செய்திகள் பற்றியும் கூறப்படுகின்றன.

தமிழ் இலக்கியத்தில் இடம் பெறும் பொருள், அறிதல், நெறியியல், விருப்பங்கள், நெறிமுறைகள், சட்டம், போன்ற உளவியல் கூறுகள் சுட்டிக் காட்டப்பெறுகின்றது.

**08- இயல் 2:**

**‘சித்தர்கள் - ஒரு பார்வை’** என்னும் இவ்வியலில் ‘சித்தர்’ என்னும் சொல்லின் பொருள் ஆராயப்படுகிறது. அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் எட்டு வகையான சித்துக்கள் பற்றிக் கூறப்படுகின்றன.

சித்தர்களிடம் காணப்படும் கூடுவிட்டு கூடு பாய்தல் போன்ற சிறந்த ஆற்றல்கள், அவர்கள் பல்லாயிரம் ஆண்டுகள் வாழும் கலையைப் பெற்றிருந்தார்கள் என்பது பற்றியும், அவர்கள் மக்களுக்குக் கூறும் தியானம், யோகம் போன்ற அறிவுரைகள் இடம்பெறுகின்றன.

குதம்பைச் சித்தர், திருமூலர், போகர், சிவவாக்கியர் போன்றோர் பாடல்களில் காணப்படும் சித்தர்களின் தன்மைகள் சுட்டிக்காட்டப்படுகின்றது.

சித்தர்களின் எண்ணிக்கை பற்றியும், பலர் பல்வெறு எண்ணிக்கையில் கூறும் சித்தர்களின் பெயர்கள் பற்றியும் இவ்வியலில் கூறப்படுகின்றன.

பதினெண் சித்தர்களின் தோற்றம் பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன.

**09 இயல் 3:**

**‘சித்தர்கள் பார்வையில் மனிதனும் அறமும்’** என்னும் இவ்வியலில் நிலையாமை பற்றிய கருத்துகள் இடம் பெறுகின்றன.

உடல் நிலையில்லாதது, தோன்றி நின்றழிவது, உடலைப் பாதுகாப்பதிலேயே வாழ் நாட்களைச் செலவிடக்கூடாது என்பதைப் பற்றியும், திருமூலர், சிவவாக்கியர், அழுகணிச் சித்தர், பட்டினத்தடிகள் போன்றோர் பாடல்களில் காணப்படும் யாக்கை நிலையாமை பற்றிய பாடல் கருத்துகள் இடம் பெறுகின்றன.

செல்வத்தைத் தேடுவதிலேயே வாழ்நாளை வீணாக்காமல் செல்வம் நிலையற்றது என்று கருதி அதனை விட்டு நிலையான இறைவனை வணங்குமாறு அறிவுறுத்துதல், திருமூலர், பட்டினத்தடிகள் பாடல்களில் இடம் பெற்றுள்ள செல்வம் நிலையாமை பற்றிய கருத்துகள் கூறப்படுகின்றன.

இளமை நிலையில்லாதது. இளமை நிலைத்திருக்கும் போதே அருமையான நற்செயல்களைச் செய்ய வேண்டும். இறைவனைப் போற்றி வணங்க வெண்டும். திருமூலர், பட்டினத்தடிகள் போன்றோர் பாடல்களில் இடம் பெறும் இளமை நிலையாமை பற்றிய கருத்துகள் கூறப்படுகின்றன.

நிலையில்லாத உயிர் இருக்கும் போதே இறைவனை அறிந்து போற்ற வேண்டும். பொறாமை, பிறர் பொருள் கவர நினைத்தல் போன்றவை கூறப்படுகின்றன.

தானம் செய்வதின் சிறப்பு, தானம் பெறத் தக்கார், தகாதார். இரத்தலால் ஏற்படும் இழிவு போன்ற கருத்துகள் இடம்பெறுகின்றன.

வறுமை கூடாதது. பொருளில்லாதவர் அடையும் இன்னல்களை எண்ணிப்பார்த்து திருந்த வேண்டும்.

திருமூலர் கூறும் ‘அன்பே சிவம்’ என்னும் கருத்து இடம்பெறுகிறது.

சித்தர்கள் கல்வி என்று குறிப்பிடுவது இறைவனைப் பற்றிய செய்தியாகும்.

எல்லா நற்பண்புகளையும் உடைய பெரியோர்களைத் துணையாகக் கொள்ள வேண்டும்.

சித்தர்கள் சாதி சமய வேறுபாடுகளைக் கடந்து சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்திட்டனர்.

இத்தகைய செய்திகள் இவ்வியலில் இடம் பெறுகின்றன.

**0.10 இயல் 4:**

'சித்தர்கள் காட்டும் ஒழுக்க நெறிகள்' என்னும் இவ்வியலில் ஒழுக்கத்தை உயிரை விட சிறந்ததாகக் கருதிப் போற்ற வேண்டும் என்று கூறப்படுகின்றது.

சித்தர்களின் பாடல்களில் காணப்படும் ஐம்பெரும்பாவங்கள் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன.

பிற உயிர்களைக் கொல்வதினால் ஏற்படும் தீமை பற்றிக் கூறப்படுகிறது. கொல்லாமை என்பது சிவயோக நெறிகளுள் முதன்மையானது என்று திருமூலர் கூறுகிறார்.

கொல்லாமைக்கு அடிப்படையாக அமைவது புலால் மறுத்தல் ஆகும். புலால் உண்போர் நரகிடைச் சென்று துன்புறுவர்.

பொய்யாமை எல்லாவித அறங்களையும் தரும். பட்டினத்தார் கடுவெளிச்சித்தர் பாடல்களில் காணப்படும் பொய்யாமை பற்றிய கருத்துகள், உள்ளத்தால் பிறர் பொருளை கவர எண்ணுதல் தீமையான செயலாகும் கள்ளுண்போர் விலங்குகளைவிட இழிந்தோராவர் என்னும் கருத்துடைய கடுவெளிச்சித்தர் பாடல்கள் இடம் பெறுகின்றன.

உலக ஆசைகள் பலவற்றுள்ளும் கொடுமையானது பெண்ணாசை. இவ்வாசை முற்றும் துறந்த முனிவர்களைக் கூட ஆட்டிப்படைக்கிறது. திருமூலர் கூறும் மாதராசையின் இழிவு பற்றிய கருத்து விளக்கப்படுகின்றது.

நாம் செய்யும் நல்வினை தீவினைக்கேற்பவே பிறவி அமைகிறது. சிவவாக்கியர், குதம்பைச்சித்தர், கம்பளிச்சட்டைமுனி, திருமூலர், பட்டினத்தடிகள் போன்றோர் கூறும் வினைப்பயன் பற்றிய கருத்துகள் இடம் பெறுகின்றன.

பட்டினத்தடிகள் கூறும் பொல்லாதவர்களின் இலக்கணம் திருமூலர் கூறும் அருஞ்செயல்கள், கடுவெளிச்சித்தர் பாடலில் காணப்படும் நல்லறிவுரைகள்,

அழுகணிச் சித்தர், பட்டினத்தார் பாடல்களில் காணப்படும் பசித்துன்பம் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன.

**0.11 இயல் - 5:**

'சித்தர்கள் கண்ட இறைமை' என்னும் இவ்வியலில் இறைமை பற்றிய செய்திகள் இடம்பெறுகின்றன.

இறைவனை அன்பினால் ஆட்கொள்ளலாம். இறைமை என்பது இளமையிலேயே பின்பற்றப்பட வேண்டிய ஒரு கொள்கை என்பது சித்தர்களின் வாதம்.

திருமூலர் பாடல்களில் இறைவனைப் பற்றிய செய்திகள் நிறைய இடம் பெறுகின்றன. முழு முதற்கடவுளான விநாயகர் பற்றியும். அவரின் பெருமை, அவர் புரியும் ஐந்தொழில்கள் பற்றியும் கூறுகிறார். இறைவனே எல்லார்க்கும் அருள் வழங்குகிறான். அவனே குருவாக வந்து ஞானத்தை ஊட்டுகிறான். மேலும், திருக்கோயிலை இழிவு செய்வதால் ஏற்படும் தீமைகள், உள்ளமே இறைவன் வீற்றிருக்கும் பெருங்கோயில், 'சிவாய நம' என்னும் ஐந்தெழுத்தை ஓதுவதால் நாம் செய்த தீவினைகள் கெட்டு ஒழியும் என்று கூறும் திருமூலரின் பாடல் கருத்துகள் இடம் பெறுகின்றன.

கோயிலும் குளங்களும் மனத்தின் உள்ளே இருக்கின்றன. இறைவன் யாராலும் அறியமுடியாத தன்மையுடையவன். அவனை மனத்துள் வைத்து தியானித்தால் பிறவிப்பிணி நீங்கும். ஐந்தெழுத்து மந்திரத்தின் பெருமை, முதலிய கருத்துகள் அடங்கிய சிவவாக்கியரின் பாடல்கள் எடுத்துக்காட்டப் பெறுகின்றன.

பட்டினத்தடிகள் பாடல்களில் இறைவன் ஒருவனே, அவனே அடியார்களின் பசியைப் போக்குவான், தீவினை செய்வதால் ஏற்படும் கேடு, சிவதரிசனம் செய்தல் போன்ற கருத்துகள் இடம் பெற்றுள்ளன.

சிந்தையில் விளங்கும் சோதிதான் இறைவன் உலகிலுள்ள அனைத்துப் பொருள்களுக்கும் மூலமானவன் இறைவன். ஐம்பெரும் பூதங்களாகவும் இருப்பவன் இறைவன் போன்ற கருத்துகள் குதம்பைச் சித்தர் பாடல்களில் இடம்பெறுகின்றன.

இறைவன் எப்பொழுதும் மாயையாக உள்ளான். மோருக்குள் மறைந்திருக்கிற வெண்ணெய் போல் இவ்வுலகத்திற்குள் இறைவன் உள்ளான். எங்கும் பரவி உள்ளவன் இறைவன் என்று அழுகணிச்சித்தர் கூறுகிறார்.

எட்டு வகை யோகங்களின் பலன்கள் பற்றிய கல்லுளிச் சித்தரின் பாடல் கருத்துகள் இடம் பெறுகின்றன. திருமூலர் கூறும் அட்டாங்க யோகம். அட்டாங்க யோகத்தால் அடையக் கூடிய நன்மைகள் முதலிய செய்திகள் இவ்வியலில் இடம் பெறுகின்றன.

முடிவுரையில் இவ்வாய்வில் கண்டெடுக்கப்பட்ட முடிவுகள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன.

**0.12 துணைநூற்பட்டியல்:**

துணைநூற்பட்டியலில் இவ்வாய்விற்கு உதவிய முதன்மை மற்றும் துணைமை ஆதாரங்கள் அகர வரிசையில் வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

**0.13 பின்னிணைப்புகள்:**

1. சித்தர் பாடல்களில் அடிக்கடி பயன்படுத்துகிற சொற்கள் - விளக்கம்
2. பதினெட்டு சித்தர்கள்

ஆகியவை பின்னிணைப்புகளாகத் தரப் பெற்றுள்ளன.

# இயல் - ஒன்று

## இலக்கியங்களில் மனித விழுமியங்கள்

1.1 ‘விழுமியம்’ – ஒரு கண்ணோட்டம்

1.2 நிலைபேறுடைய விழுமியங்கள்

1.3 சங்க இலக்கியங்களில் மனித விழுமியங்கள்

1.4 சமயங்கள் காட்டும் மனித விழுமியங்கள்

1.5 நீதிநூல்களில் மனித விழுமியங்கள்

1.6 காப்பியங்களில் மனித விழுமியங்கள்

1.7 இக்கால இலக்கியங்களில் மனித விழுமியங்கள்

1.8 தமிழ் இலக்கியத்தில் உளவியல் பார்வை.

# இயல் - ஒன்று

## இலக்கியங்களில் மனித விழுமியங்கள்

தமிழ் இலக்கியங்கள் உலக இலக்கியங்களில் முதன்மை பெற்றதாய் விளங்குகின்றன. மனித தேவைக்கான அனைத்துச் சிறப்புகளும் மனித விழுமியங்களாக, தமிழ் இலக்கியங்களில் பொதிந்து கிடக்கின்றன.

### 1.1 ‘விழுமியம்’ - ஒரு கண்ணோட்டம்

விழுமியம் என்பது உயிரினும் சிறந்ததாகக் கருதப்படும் ஒழுக்க நெறியில் நின்று அதனால் கிட்டும் சிறப்பையும், மதிப்பையும் குறிக்கும் எனலாம். விழுமியம் என்ற சொல்லுக்குச் சிறந்த, மேன்மையான, மதிப்புமிக்க என்பன போன்ற பொருட்களை அகராதிகள் சுட்டிக் காட்டுகின்றன.

மேலும், இலக்கை இயம்புகின்ற இலக்கியங்கள் விழுமியங்களால் நிறைந்துள்ளன. பொய் கூறாமை, அறம் உணர்தல், பொறை, மானம், பழிக்கு அஞ்சுதல், மன்னிக்கும் மனப்போக்கு, ஈகை, பெரியோரை மதித்தல், சமூக நலனில் அக்கறை போன்ற எண்ணற்ற குணங்களை, மனித மதிப்புகளை “விழுமியங்கள்” என்று இலக்கியங்கள் சுட்டுகின்றன. காலந்தோறும் வளர்ந்து வரும் இலக்கியங்கள் மனிதர்களின் பண்பட்ட நாகரிகம், பண்பட்ட சமூகம் போன்றவற்றை வழுவாமல் காத்து வருகின்றன.

**வாழ்க்கை நெறி:**

வாழ்க்கை என்பது மனிதன் பிறந்தது முதல் இறப்பு வரை அவன் எதிர் கொள்கின்ற செயல்பாடுகளை அடிப்படையாகக் கொண்டது. உணவு, உடை, இருப்பிடம், கல்வி, பொருளாதாரம், நாகரீகம், பண்பாடு முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டது வாழ்க்கை. குழந்தை பிறந்தவுடன் வளர்ப்பு முறையில் பலவேறுபாடுகள் உண்டு.

நன்னெறியைப் புகட்டி வளர்க்கிற குழந்தை நல்லவராகவும், தீய பழக்க வழக்கத்தின் நடுவே வளர்கிற குழந்தை தீயவராகவும் மாறுகிறது. பஞ்சம், பசி பட்டினி இவற்றுக்கிடையே வளரும் குழந்தை கூட நன்னெறியால் வளர்க்கப்படுமானால் அக்குழந்தை நல்லவராகவே இறுதி வரை வாழ்கிறது.

நல்ல பொருளாதாரம், சமூக அரவணைப்பு முதலிய செல்வாக்குப் பெற்ற குழந்தை கூட சற்று தீய நெறியில் வாழும் போது தீயவராக மாறி விடுகிறது.

தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் என்பதற்கிணங்க குழந்தை பிறப்பு முதல் நன்னெறியையும், நல்லொழுக்கத்தையும் புகட்டி வளர்த்தால் சான்றோனாகவும் அறிவிற் சிறந்தவனாகவும் வளரும்.

வாழ்க்கை என்பது வீட்டிற்கு வீடு, தெருவிற்குத் தெரு, கிராமத்திற்கு கிராமம், நகரத்திற்கு நகரம், நாட்டிற்கு நாடு, மொழிக்கு மொழி, சாதிக்கு சாதி மதத்திற்கு மதம், பல வகையான வேறுபாடுகளுடன் திகழ்கின்றன. கற்றவர் வாழ்க்கை நெறி வேறு, கல்லாதவரின் வாழ்க்கை நெறி வேறு. செல்வந்தரின் வாழ்க்கை நெறி வேறு, ஏழை எளியோரின் வாழ்க்கை நெறி வேறு.

அரசியல் நெறியில் உள்ளவர்களின் வாழ்க்கை நெறி வேறு, அதிகாரிகளின் வாழ்க்கை நெறிவேறு, முதலாளியின் வாழ்க்கை நெறிவேறு, இல்லற வாழ்க்கை நெறிவேறு, துறவற வாழ்க்கை நெறிவேறு, மாணவர் பருவத்தில் வாழும் வாழ்க்கைக்கும் பேராசிரியராக வாழும்போது வாழுகிற வாழ்க்கைக்கும் வேறுபாடு உண்டு. ஆன்மீக வாழ்க்கை நெறி பக்குவ நிலையைக் காட்டும்.

அறத்தை பின்பற்றி வாழும் வாழ்க்கை நெறி மனசாட்சியை நிலைநிறுத்தும். கடமை உணா்ந்து வாழும் நெறி வாழ்க்கையை மேம்படுத்தும். அடக்கத்தோடு வாழும் வாழ்க்கை மேலும் மேலும் உயர்வைத் தரும். இதைத் தான் வள்ளுவர் ‘அடக்கம் அமரருள் உய்க்கும்’ என்று சுட்டிக் காட்டினார். இரக்கம்’ காட்டும் வாழ்க்கை ஏற்றத்தைத் தரும். பிறந்தது முதல் இறப்பு வரை வாழும் காலகட்டத்தில் உணவுக்கும் உடைக்கும் வழி தேடி பல்வெறு தொழில்களை செய்கின்றனர்.

வாழ்க்கையில் எல்லாத் தொழிலுக்கும் அடிப்படை உழவுத்தொழில். அடுத்தது நெசவுத்தொழில். எந்தவாழ்க்கை வாழ்ந்தாலும் உண்ண உணவும், உடுக்க உடையும், உறையுளும் அடிப்படைத் தேவைகள். வாழ்க்கை என்பது தனக்கும் தன்னைச் சார்ந்தவருக்கும் உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றை வருவாய்க்கு ஏற்ற வகையில் அமைத்துக் கொள்ளுதல் ஆகும்.

இம்மூன்று அடிப்படைத் தேவைகளுக்காகத் துன்பப்படும் பொதுமக்களுக்குத் தன்னால் இயன்ற எண்ணம், சொல், செயல் ஆகியவற்றில் ஏதாவது ஒன்றின் மூலம் உதவுவதும், வாழ்க்கைக்குத்தேவையான கல்வியைக் கற்பதும், கல்வி அறிவு இன்மையால் இடர்ப்படுவோர்க்கு கல்வி பெற முழுமையான வழிகாட்டுவதும், எல்லா நேரங்களிலும் எல்லாமக்களிடத்தும் அன்பாய் இருத்தலும், வாழ்க்கையின் மூலநெறி.

எக்காரணத்தைக் கொண்டும் பிறர் மனம் புண்படாமல் வாழ்வது சிறந்த வாழ்க்கை. எப்பொழுதும் உண்மையே பேசுவது வாழ்வின் அடிப்படை. மனித வாழ்க்கையில் மூன்று வகையினர் உள்ளனர். தான் துன்பப்பட்டாலும் பிறர் வாழ வேண்டும் என்று நினைப்பவர் முதல் வகையினர். தானும் வாழ வேண்டும் பிறரும் வாழ வேண்டும் என்று நினைப்பவர் இரண்டாம் வகையினர். பிறரைக் கெடுத்து தான் மட்டுமே வாழ வேண்டும் என்று நினைப்பவர்கள் மூன்றாம் வகையினர்.

துறவிகளுக்கு முதல் வகை வாழ்க்கை பொருந்தும். இல்லறத்தில் உள்ளவர்களுக்கு இரண்டாம் வகை வாழ்க்கைப் பொருந்தும். மூன்றாம் வகை வாழ்க்கை வாழாமலிருந்தால் அனைவருக்கும் நல்லது. அறவழியில் பொருள் ஈட்டுவது வாழ்க்கையின் உச்சநிலை. செல்வம் நிலையானது இல்லை. எனவே, அறத்தின் வழியில் ஈட்டுகிற செல்வம்தான் குறிப்பிட்ட காலத்திற்காவது நிலைத்து நிற்கும்.

இளமை, உடல் வனப்பு, செல்வம், உயிர்ப்பற்று இவையெல்லாம் நிலையானது அல்ல. இவற்றின் மூலம் பெறப்படுகிற சிற்றின்பத்திற்கு ஆட்படாமல் அறநெறியைப் பின்பற்றி வாழ்வது சிறந்தது. உயர்வான வாழ்க்கைநெறியில் உயிர்க்கொலை கூடாது. நிலையற்ற உடலுக்காக உயிர்களைக் கொன்று தின்னும் வாழ்க்கை துன்பத்தையும், பாவத்தையும் தரும்.

பண்பட்ட வாழ்க்கை நெறியில் மதுப்பழக்கம் கூடாது. மதுவால் மனம் மயங்கினால் வாழ்க்கை தெளிந்த தன்மையாக அமையாது. மானிட வாழ்வு வெற்றிடத்தில் தோன்றி வெற்றிடத்தில் முடிவது. இல்லாத ஒன்று தோன்றி இறுதியில் அது இல்லாது போய் விடும். இடைப்பட்ட காலத்தில் வாழுகிற நாடக வாழ்க்கை பக்குவப்பட்டதாகவும், அறத்தையும் அன்பையும் பின்பற்றுவதாகவும் அமைய வேண்டும்.

நேர்மையான முறையில் வாழ்தல், நேர்மையான முறையில் உதவுதல், மன்னித்தல், அனுசரித்து செல்லுதல் ஆன்மீக நெறியோடு வாழ்தல் இவையனைத்தும் வாழ்க்கையின் உயிர்மூச்சு. வாழ்க்கை பல்வெறு நிலையில் அமைந்தாலும் சித்தர்கள் வரையறுத்துக் காட்டுகிற வாழ்க்கைநெறிபற்றி இவ்வாராய்ச்சி மேற்கொள்ளப்படுகிறது.

1.2 **நிலைபேறுடைய விழுமியங்கள்:**

**அறம்:**

''அறம்'' என்னும் சொல்லிற்கு கடமை, நோன்பு, தருமம், கற்பு, இல்லறம், துறவறம், நல்வினை, **"அறநூல், அறகடவுள், தருமதேவதை என்று பல்வேறு பொருள் உண்டு"** -1.

மனித இனத்தின் நலத்திற்காகவும், முன்னேற்றத்திற்காகவும், மனித சமுதாயம் வரையறுத்துக் கொண்ட ஒழுக்க நெறி அறம். அறம் ஒரு வகை வாழ்க்கை நெறி, மனித வாழ்க்கை செம்மையுடையதாகவும், அமைதியுடையதாகவும் பயனுடையதாகவும் அமைவதற்கு ஆன்றோர்கள் காட்டிய, அன்றாட வாழ்க்கையில் பின்பற்றப்படுவதற்குரிய மெய்ம்மை நெறி.

தனிமனிதன் உணர்ச்சி வெளிப்பாடுகளில் எழுவன முரண்பாடுகள், அம்முரண்பாடுகளின், முனைப்பை மழுங்கச் செய்வதற்கும், மாற்றுவதற்கும் போக்குவதற்கும் அனுபவக் கனிவு மிக்க சான்றோர்கள் வகுத்துக் கொடுத்த வாழ்க்கை நெறி, அறம் எனப்படும்.

கூடி வாழும் விலங்கான மனிதன் பிறரோடு தொடர்புகொள்ளும் பொழுது உண்டாகும் முரண்பாடுகளைத் தவிர்ப்பதற்கும் வேகத்தைக் குறைப்பதற்கும் சான்றோரால் வரையறுக்கப்பட்ட வாழ்க்கைநெறி அறம் எனப்படும்.

முதலில் அறவுணர்வு மனிதனின் அச்ச உணர்வு அடிப்படையில் அரும்பியது. மனித நாகரீக வளர்ச்சியில் அறஉணர்வு முதலில் தோன்றியது. அடுத்துத் தோன்றிய அற உணர்வை வழக்காற்று ஒழுக்கநெறியாக மாறியது. இவ்வழக்காற்று ஒழுக்க நெறி பெரும்பாலும் சமுதாயத்தில் மேல்தட்டில் வாழ்கின்ற மக்களின் நன்மையைக் கருத்தில் கொண்டு போற்றப்பட்டது. தொல்காப்பியர் வழக்கு என்பதற்கு,

**''வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே**

**நிகழ்ச்சி அவர்கட்கு ஆகலான"** - 2.

என விளக்கம் அளிக்கிறார்.

இந்த வழக்காற்று ஒழுக்கநெறி காலத்திற்கும் இடத்திற்கும் ஏற்ப மாறுகிறது. விதவைகளுக்குத் திருமணம் செய்யக் கூடாது என்று இருந்த ஒழுக்கநெறி இன்று மாறியுள்ளது. உயர்ந்ததும் சிறந்ததுமான அறவுணர்வுமனத்தின் தூய்மையை மனச் சான்றினை அடிப்படையாகக் கொண்டது. திருவள்ளுவர் இந்த உயர்நிலை அறத்தையே,

**"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்து அறன்"**

என்று எடுத்துக் காட்டுகிறார்.

**அறவியல் அணுகுமுறை:**

மனித சமுதாயத்தின் அறவியல் கோட்பாடுகளை, நீதிநெறிகளை மையமாகக் கொண்டு அவற்றின் அடிப்படையில் இலக்கியங்களை ஆராய்வது அறவியல் அணுகுமுறை. இலக்கியத்தின் நோக்கம் அறம் உணர்த்துதலாக இருத்தல் வேண்டும். அவ்விலக்கியம் அறத்திற்கு மாறாக இருக்குமானால் அது நல்ல இலக்கியம் அல்ல.

அறவியலின் அடிப்படையில் இலக்கியங்களை மதிப்பிடுவதும், குறிப்பிட்ட இலக்கியங்களை அறவியல் எவ்வாறு வழிநடத்திச் செல்கிறது என்று காண்பதும், இலக்கியங்களிலுள்ள அறவியல் பண்புகள், ஆற்றல்கள் ஆகியவற்றைக் காண்பதும் அறவியல் அணுகுமுறையின் நோக்கம்.

இலக்கியத்தில் இடம் பெறும் கருத்துகள் யாவும் போற்றிப் பின்பற்றத்தக்க அறவியல் கருத்துகளாகவும், வெறுத்து ஒதுக்கத் தக்க தீய செயல்களின் எடுத்துக் காட்டுகளாகவும் அமைகின்றன. இக்கருத்துகள் இலக்கியத்தை மேம்படுத்துகின்றன. இக்கண்ணோட்டத்தில் இலக்கியத்தை நோக்குவதும், மதிப்பீடு செய்வதும் அறவியல் அணுகுமுறை எனப்படும்.

**அறவியலும் சமுதாயமும்:**

அறவியல் ஒரு வகையில் சமுதாயவியல் திறனாய்வின் ஒரு பகுதியாகக் கொள்ளப்படும். சமுதாயவியல், ஒரு சமுதாயப்பிரிவு தங்களுக்கு ஏற்புடையதென்று பல காலமாக அங்கீகரிக்கும் ஒழுக்க முறையை சமுதாய மதிப்பு எனக் கொள்கிறது.

அதுபோல அறவியலும் மனிதாபிமான உணர்வும், பிறர்க்கு நன்மை தரும் நடத்தையும் கொண்ட விழுமியத்தை ‘அறம்’ என்று விளக்குகிறது. அறவியல் கருத்தமைவு சமுதாய அமைப்போடு சார்ந்திருப்பதாகலின் சமுதாயவியல் நெறியோடு அறவியல் நெருங்கிய தொடர்புடையதாக அமைகிறது.

**தனிமனித ஒழுக்கம்:**

எந்நிலையிலும் தன்நிலை மாறாது தனித்துவத்தோடு பிறர்க்குப் பயன்படுமாறு தன் கடமையைச் செய்தலே தனிமனித ஒழுக்கமாகும்.

நாட்டிலுள்ள ஒவ்வொருவரும் அவரவர் கடமைகளை உணர்ந்து அவற்றைக் கடமைக்காக செய்யாது அவரவர் கடமையாகவே நினைத்துச் செய்யும் போது வீட்டிலும் நாட்டிலும் எவ்வித வேறுபாடும் ஏற்பட இடமிருக்காது.

**அன்பு:**

மனிதனின் பண்புகளில் மனித நேயமாகிய அன்பே தலையாயது. அன்பு என்பது தேர்ந்தவிதை என்றால் அதன் வளர்ந்த மரமும் கிளையும், கொப்பும் பூவும், காயும் கனியும் எல்லாமே மனித நேயமாகும். அன்பு வேற்றுமையில் ஒற்றுமையைக் காணும். அன்பற்ற இதயம் ஒற்றுமையில் வேற்றுமையைத் தேடும்.

அன்பு துன்ப நோய்க்கு மருந்தாகவும் இருக்கிறது, இன்ப விளைவுக்கு ஊற்றுக்கண்ணாகவும் இருக்கிறது. அன்பு தன்னைக் கொண்டவனையும் மகிழ்விக்கிறது. சார்ந்தோனையும் மகிழ்விக்கிறது. ஏன் எல்லாம் வல்ல இறைவனையும் கூட அன்பே மகிழ்விக்கிறது; அன்பு அவனைப் பைத்தியமாக்கி விடுகிறது. ஆண்டவனாகிய அவன் அன்பிற்கு அடிமையாகின்றான்; இரப்பாரைக் காப்பவன் இரப்பவனாக மாறுகின்றான்.

**நல்லறிவு:**

மனித மனம் அறிவின் வழிச் செல்லாது ஆசைவழிச் சென்று அல்லற்படுவது இயற்கையாகும். வாழும் நெறிமுறைகள் இவை எனத் தெரிந்தும் ஆசை மனம் அவற்றை மறைத்து மறுத்து அறநெறியை மீறிச் செல்கிறது. திருடுவது, பொய் சொல்லுவது, ஏமாற்றுவது போன்ற குற்றங்களில் எவ்வளவு திறமையாக கயவர்கள் செயல்பட்டாலும் அவை அறிவின் செயலன்று ஆசையின் செயல்களே.

**“சென்ற இடத்தால் செலவிடாது தீதுஓரீஇ**

**நன்றின் பாலுய்ப்பது அறிவு” – 3.**

நம்மைத் தீமைகளிலிருந்து விலக்கி நல்லவைகளிடத்துச் செலுத்துவது அந்நல்லறிவே ஆகும். அத்தகைய நல்லறிவைக் கொண்ட மனிதனால் மட்டுமே நல்ல செயல்களைச் செய்ய முடியும்.

**சான்றாண்மை:**

நல்லவை என்பது சான்றோரிடத்தில் காணப்படும் நற்குணமேயாகும். நலன்கள்

**“அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையொடு**

**ஐந்துசால்பு ஊன்றிய தூண்” – 4.**

நம்மைச் சார்ந்தவரிடத்தில் கொள்ளும் அன்பு, பழி பாவங்களுக்கு நானும் நாணம், எல்லோருக்கும் உதவியாக ஒழுகும் ஒப்புரவு, பழகியவரிடத்துச் செலுத்தும் கண்ணோட்டம், உள்ளொன்று புறமொன்று இல்லாத உண்மை ஆகிய இந்த ஐந்து பண்புகளும் சால்பு என்பதைத் தாங்கும் தூண்களாகும்.

**பெருமை:**

எல்லா உயிர்க்கும் பிறப்பியல்பு ஒத்திருக்கிறது. பிறப்பால் பெருமை, சிறுமை இல்லை. செய்கின்ற தொழில் வேறுபாடுகளால் சிறப்பியல்பு ஒத்திருப்பதில்லை. நல்ல தொழில் செய்கின்றவர்கள் குற்றமான தொழில் செய்கின்றவர்களைவிட மேலானவர்கள். அரிய பெரிய தொழில் செய்கின்றவர்கள் சிறுசிறு தொழில் செய்கின்றவர்களைவிட மேலானவர்கள். இதனால் இவர்களுக்குப் பெருமை கிடைக்கிறது.

**“பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா**

**செய்தொழில் வேற்றுமை யான்” – 5.**

என்கிறார் வள்ளுவர்.

**பண்புடைமை:**

மக்கட்பண்பு என்பது நீதியையும், அறத்தையும் விரும்பும் தன்மையாகும். இவற்றை விரும்புகின்றவர்களே உலகத்திற்குப் பயன்படுவார்கள். அவர்களுடைய பண்பையே உலகம் பாராட்டும்.

பண்புடையவர்கள் இருப்பதால்தான் உலக வாழ்க்கை உண்டு என்று சொல்லக் கூடியதாய் நடைபெறுகின்றது. இல்லையானால் உலகம் வெறும் மண்ணாய் நின்று அழியக் கூடியதாகும்.

**“பண்புடையார் பட்டுண்டு உலகம் அதுவின்றேல்**

**மண்புக்கு மாய்வது மன்” – 6.**

என்கிறது குறள்.

**நாணுடைமை:**

பொது வாழ்க்கையில் தகாதன செய்வது குற்றமாகும். அதனால் பலருக்குத் துன்பம் நேரிடும். ஆகையால் தகாதன செய்ய நாணுகின்ற தன்மை இயல்பாகவே அமைய வேண்டும்.

மனம், மொழி, மெய் என்பவை ஒடுங்குவதால் வரும் நாணம் வேறு. இது பெண்களுக்கு இயல்பாக வரும் நாணம் ஆகும். தகாத செயல் செய்ய முடியாதவாறு தடுக்கும் நாணம் வேறு. இது நன் மக்கள் பொதுவாழ்வில் கொள்ளவேண்டிய நாணம். இந்த நாணமே சான்றோர்க்கு அணிகலன். பொது வாழ்க்கையில் தமக்கு வரும் பழிக்கு மட்டும் நாணுவதால் பயன் இல்லை. பிறர் பழிக்காகவும் நாணுதல் வேண்டும். இவ்வாறு பிறர்பழியும் தம்பழியும் ஒப்ப மதித்து நாணுகின்றவர்களே நாணத்திற்கு உறைவிடம் என்று உலகம் மதிக்கும்.

**ஈகை:**

தனி மனித வாழ்வில் இரத்தல் என்பது இழிவாகக் கருதப்படுகிறது. ஆனால் சமூக வாழ்வில் ஈகை உயர்ந்த அறமாகக் கருதப்படுகிறது.

மக்கள் யாவர்க்கும் கைம்மாறு கருதாமல் உதவி செய்தல் வேண்டும். இந்த உதவி உணவாலும் ஏனைப்பொருளாலும் நிகழ்த்தப் பெறும். ஆதலின் இவ்விருவகை உதவிகளையும் தானம் எனக்கொள்ளலாம்.

செல்விருந்து ஓம்பி வருவிருந்து காண்பதே சிறப்புடையது. பொருளை வழங்காமல் சேமித்து வைத்தலால் ஏதும் பயனில்லை. தானமே மனிதசமுதாயத்தை மனநிறைவுடன் வாழச் செய்யும்.

**"ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வாறு**

**ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும் - ஏற்றவர்க்கு**

**நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தார் ஆனாலும்**

**இல்லையென மாட்டார் இசைந்து" – 7.**

ஆற்றில் வெள்ளம் வற்றிப்போய் மணலானது வெயிலினாலே காய்ந்து நடப்பவருடைய அடியைச் சுடுகின்ற அக்காலத்திலும் அந்த ஆறானது ஊற்றுநீர்ப் பெருக்கினால் உலகத்தாரை உண்பிக்கும். அதுபோல நல்ல குடியில் பிறந்தவர் வறுமையுடையவரானாலும் இரந்தவர்க்கு மனமிசைந்து இல்லை என்று சொல்லமாட்டார். இயன்றதைக் கொடுப்பர் என்கிறார் ஔவையார்.

**"ஆர்க்கும் இடுமின் அவரிவர் எண்ணன்மின்**

**பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்" - 8**

என்று ஈகையின் சிறப்பைத் திருமூலர் தம் பாடல் மூலம் போற்றுகின்றார்.

**பாவச்செயல்:**

மனமே! உயிர்களைத் துன்புறுத்தும் பாவமான செயல்களைச் செய்யாதே. அப்படிப்பட்ட பாவமான செயலைச் செய்வாயானால் இயமன் உன்மீது கோபங் கொண்டு உயிரைக் கொன்று சென்று விடுவான் என்பதை

**"பாபஞ்செய் யாதிரு மனமே – நாளைக்**

**கோபஞ் செய்தே யமன் கொண்டோடிப் போவான்" – 9.**

என்றபாடலில் பாவச் செயல்களால் விளையும் தீமைகளைக் கூறுகிறார் கடுவெளிச்சித்தர்.

**வறுமை:**

வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. வறுமை வரக் கூடாதது. பொருளில்லாதவர் படுகின்ற இன்னல்களைப் பார்த்து நாம் திருந்துவது கடமை ஆகும்.

**"ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்**

**இருநாளுக்கு ஏலென்றால் ஏலாய்" – 10.**

என்று வயிற்றின் பசிக்கொடுமையை ஔவையார் எடுத்துக்காட்டுகின்றார்.

வயிற்றை தூர்க்க முடியாத குழி என்கிறார் திருமூலர்.

**"கற்குழி தூரக் கனகமுந் தேடுவர்**

**அக்குழி தூர்க்கை யாவர்க்கும் அரியது" – 11.**

என்று பாடுகிறார்.

இவ்வாறு நிலைபேறுடைய விழுமியங்களான அன்பு, அறம், நல்லறிவு, சான்றாண்மை, பெருமை, பண்புடைமை, நாணுடைமை, ஈகை, பாவச் செயல், வறுமை முதலியவை தனிமனித ஒழுக்கமாகக் கருதப்படுகிறது.

**1.4 இலக்கியமும் அறம் உணர்த்துதலும்:**

இலக்கியம் மனித சிந்தனைகளையும், உள்ளப் போக்குகளையும் பிரதிபலிப்பது இலக்கியம் மனிதருடைய பண்புகளைப் பண்படுத்தும் ஆற்றல் உடையதாக இருத்தல் வேண்டும். டி.எஸ்.எலியட் இலக்கியம் அளிக்கும் இன்பம் நிலை பேறுடையதாக இருக்க வேண்டுமானால், மனித வாழ்க்கையை மேம்படுத்தும் அறநெறிக் கருத்துகளும் அனுபவ உண்மைகளும் அதில் இடம் பெற்றுத் தான் ஆக வேண்டும். அப்பொழுதுதான் அதுவாழும் இலக்கியமாக விளங்க முடியும்

என்று எடுத்துக்காட்டுகிறார். அறநெறி இயல்புகள் அதிகம் இருப்பதால் தமிழ் இலக்கியங்கள் நிலைத்து நிற்கின்றன.

**தமிழ் இலக்கியத்தின் பயன் மதிப்புகள்:**

தமிழ் இலக்கியங்களில் இடம் பெறும் பயன் மதிப்புகள் அறம், பொருள் இன்பம் என்ற முப்பொருள் நிலையில் அமைந்துள்ளன. தொல்காப்பியர்,

**"அந்நிலை மருங்கின் அறமுத லாகிய**

**மும்முதற் பொருளும் உரிய என்ப" – 12.**

என்றும்,

**"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**

**அன்புடன் புணர்ந்த ஐந்திணை மருங்கின்" – 13.**

என்றும் முப்பொருள்களைக் எடுத்துக் காட்டுகிறார். இப்போக்கு திருவள்ளுவர் காலம் வரை இருந்தது. அவர்தம் நூலை முப்பாலாக வகுத்திருப்பது இதற்குச் சான்று.

**"அறம் பொருள் இன்பம் உயிரச்சம்" -14.**

என்றும்,

**"அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து**

**தீதின்றி வந்த பொருள்" – 15.**

என்றும் திருவள்ளுவர் முப்பொருளை விளக்கிக் காட்டகிறார்.

காலப்போக்கில் சமயங்களின் தாக்கத்தால் முப்பொருள் நாற்பொருளாக விரிவடைந்து. சிலப்பதிகாரம்,

**"வீடுகண்டார் போல் மெய்ந்நெறி விரும்பிய" – 16.**

என்று விளக்குகிறது. வீடுபேற்றின் தன்மையை மணிமேகலை,

**“குற்றமும், விளையும், பயனும், துன்பமும்,**

**பெற்ற தோற்றப் பெற்றிகள் நிலையா;**

**எப்பொருளுக்கும் ஆன்மா இல்லை என**

**இப்படி உணரும் இவை வீட்டு இயல்பாம்” -17.**

என எடுத்துக் காட்டுகிறது. வீடு, பேறு, பக்தி, இயக்க காலத்தில் முதன்மை இடத்தைப் பெற்றது. கி.பி.12-ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியைச் சேர்ந்த இலக்கண நூலான நன்னூல்,

**“அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே” -18.**

என எடுத்துக்காட்டுகிறது. தமிழ் இலக்கியங்களுக்கு உரியதாக வலியுறுத்தப்பட்டுள்ள நாற் பொருள்களுள் அறம் முதன்மையானது.

**1.3 சங்க இலக்கியங்களில் மனித விழுமியங்கள்**

மனிதநேயம் என்பது ஓர் உயரிய பண்பாடு. அது நாடு, இனம், மொழி என்ற எல்லைகளைக் கடந்து நிற்பது. இத்தகைய மனிதநேயம் சங்க இலக்கியங்களில் நிறைய காணப்படுகிறது.

**கலித்தொகை:**

கலித்தொகையில் நெய்தற்கலியில் நல்லந்துவனார் பாடலில் அழகான மனித நேயத்தைக் காணலாம்.

**“ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல்**

**போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை**

**பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்**

**அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை**

**அறிவெனப் படுவது பேதையர் சொல் நோன்றல்**

"செறிவெனப் படுவது கூறியது மறாஅமை

நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை

முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வௌவல்

பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்" - 19.

'இல்லறம் நடத்துதல்' என்பது வறுமையில் வாழுபவர்க்கு உதவுதல். போற்றுதல் என்பது நட்பு கொண்டவரை பிரியாதிருத்தல். 'பண்பு' என்பது உலகநடையை அறிந்து ஒழுகுதல். 'அன்பு' என்பது தன் சுற்றத்தாரைக் கெடாது சினம் கொள்ளாது வாழச் செய்தல். 'அறிவு' என்பது அறிவில்லாதவர்களின் சொல்லைப் பொறுத்துக் கொள்ளுதல். 'செறிவு' என்பது உயர்ந்த பண்பு, கூறியதை மறவாமல் இருத்தல். நிறை என்பது மறைக்கக்கூடிய செயலை பிறர் அறியாமல் காத்தல். 'முறை' அதாவது 'அரசு நீதி' என்பது பாரபட்சம் பார்க்காது தீர்ப்பு அளித்தல். பொறை எனப்படுவது பழிப்பவரைப் பொறுத்துக் கொள்ளுதல். இவ்வாறு ஒட்டு மொத்த மனித நேயத்தையும் ஒரே பாடலில் தந்துவிட்டுச் சென்றுள்ளார் நல்லந்துவனார்.

**புறநானூறு:**

புறநானூற்றுப் பாடல்கள் பலவற்றில் மனித விழுமியங்கள் நிறைந்து காணப்படுகின்றது.

**போரில் மனிதநேயம்:**

சங்ககால மன்னர்கள் போரிடும் போது ஒரு ஒழுங்கு முறையைக் கையாண்டார்கள். இந்த முறையில் தான் போரிட வேண்டும் என்று வரம்பு அமைத்துக் கொண்டார்கள். அறமுறையில் போர்செய்து மனித நேயத்தைக் காத்தார்கள்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி மனித நேயத்தை மதித்து போர் செய்ய விரும்பினான் என்பதனை,

**“ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்**

**பெண்டிரும் பிணியுடையீரும் பேணித்**

**தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்**

**பொன்போல் புதல்வர் பெறாஅ தீரும்**

**எம்அம்பு கடிவிடுதும் நும்அரண் சேர்மின் என**

**அறத்தாறு நுவலும் பூட்கை” – 20.**

என்று புறநானுறு உயர்ந்த கொள்கையை அறிவுறுத்துகிறது. முற்காலத்தில் நேருக்குநேர் நின்று போர் செய்யும் முறையே இருந்தது. போருக்குச் செல்ல முடியாதவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் நிலை இருந்தது என்ற மனிதநேய உணர்வை இப்பாடல்வழி அறிய முடிகிறது.

பழந்தமிழ்நாட்டில் இடையறாது போர்கள் நடைபெற்றன. போர்ச்சமுதாயத்தில் ஒவ்வொருவரின் தலையாய கடமைகள் இன்னின்ன என்பதை பொன் முடியார் என்னும் புலவர் கூறுகிறார்.

**“ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே**

**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே**

**வேல் வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே**

**நல்நடை நல்கல் வேந்தர்க்குக் கடனே**

**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**

**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே” – 21.**

என்று அவர்வர்களுக்குரிய கடமைகளை வரையறுத்துக் காட்டுகிறார் பொன்முடியார்.

**போர்நெறி:**

இரு பெரு வேந்தர்கள் போர் செய்யக் கருதினால் ஒருவர், ஒருவர் நாட்டு வாழும் குருக்கண்மராகிய அந்தணரும், பெண்டிரும், பிணியுழந்தோரும், மணம் புரிந்து மகப்பெறாதோரும் என்னும் இவர்களுக்கும் ஆனினங்கட்கும் துன்பம் உண்டாகாதவாறு போர் செய்யத் தொடங்குவர். மேலும் போர்க்களத்திலும் முதற்கண் அடிப்பட்டோரும், படையிழந்தோரும் முதலாயினரை கொல்லாமல் விட்டுவிடுவர். எனவே மன்னுயிர் காக்கும் அன்புடைய வேந்தர்களுக்கு போர்க்களத்திலும் அறமே நிகழும் என்பர்.

**பசிப்பிணிநீக்கிய மனித நேயம்**

சங்கப் புலவரான பெருஞ்சித்திரனார் என்பவர் குமணவள்ளல் கொடுத்தப் பரிசினைத் தான் மட்டும் உண்ணாது தன்னைப் போன்று பசியினால் வாடும் மற்றவர்களுக்கும் கொடுத்து உதவு என்று தன் மனைவியிடம் கூறும் பாடல் மனித நேயமிக்கதாகத் திகழ்கிறது.

**“நின்நயந்து உறைநர்க்கும் நீநயந்து உறைநர்க்கும்**

**பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும்**

**கரும்பின் கடும்பசி தீர யாழநின்**

**நெடுங்குறி எதிர்ப்பை நல்கியோர்க்கும்**

**இன்னோர்க்கு என்னாது என்னொடும் சூழாது**

**வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்**

**எல்லோர்க்கும் கொடுமதி” -22.**

புலவர்கள் வறுமையில் வாழ்ந்தாலும் வள்ளன்மையில் சிறந்து விளங்கினர் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது.

தம் பசிப்பிணி நீக்கிய குமணவள்ளலைப் போல் தான் மற்றவரின் பசிப்பிணி நீக்க நினைத்தப் புலவரின் மனித நேயம் இங்கு மளிர்கிறது.

**கொடைமடம்படுதல்:**

மனிதனின் துன்பம் கண்டு வாடிய உள்ளம் அஃறிணை உயிர்களிடத்திலும் பற்று கொள்கிறது. ‘வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடும் உள்ளமாக மாறுகிறது. உதவி செய்யத் துடிக்கிறது. அந்த உதவியை அது ஏற்றுக்கொள்ளுமா என்று எண்ணாமல் செய்கிறது. இதனை கொடைமடம் படுதல் என்பர்.

**“வரையா மரபின் மாரி போலக்**

**கடாஅ யானைக் கழற்கால் பேகன்**

**கொடைமடம் படுதலல்லது**

**படைமடம் படான் பிறர் படைமயக் குறினே”** – 23.

என்ற பாடலில் பேகன் மயிலுக்குப் போர்வைக் கொடுத்த செய்தியைத்தான் புலவர் கொடைமடம் படுதல் என்கிறார். இதில் பேகனின் மனிதநேயம் புலப்படுகிறது.

இதேபோன்று பாரிவள்ளல் மலைவளம் காணச் சென்ற போது கொழுகொம்பின்றித் தவித்த முல்லைக் கொடிக்குத் தன் தேரையே கொடுத்துத் தான் நடந்து சென்றான். தன் அருள் உள்ளத்தால் தன் தேரையே ஈன்றான் பாரி. இதனைக் கபிலர்,

**“கறங்கு மணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த**

**பரந்தோர் நகுசிறப்பிற் பாரி மகளிர்”** – 24.

என்று பாடியுள்ளார். இப்பாடல்களின் மூலமாக வள்ளல்களின் மனிதநேயமிக்க உணர்வினை அறிய முடிகிறது.

**புலவர்கள் போற்றிய மனித நேயம்:**

ஆட்சி செய்யும் முறைபற்றி நாடாளும் மன்னர்க்குப் புலவர் அறிவுறுத்திப் பாடிய பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன. மோசிகீரனார், “ஒரு நாட்டு மக்களுக்கு நெல்லும் உயிரன்று; நீரும் உயிரன்று; மன்னனே உயிர் போன்றவன்.

இதை உணர்ந்து தன் நாட்டு மக்களுக்கு எத்துன்பமும் நேராமல் அவர்களைப் பாதுகாத்துத் திறம்பட ஆட்சி செய்வதே மன்னன் கடமையாகும் என்பதை

**“நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே**

**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்**

**அதனால், யான்உயிர் என்பது அறிகை**

**வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே” – 25.**

என்ற பாடலில் கூறுகிறார்.

கணியன் பூங்குன்றனாரின்,

**“யாதும் ஊரே; யாவரும் கேளிர்;**

**தீதும் நன்றும் பிறர்தர வாரா;**

**நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன;**

**சாதலும் புதுவது அன்றே; வாழ்தல்**

**இனிது என மகிழ்ந்தன்றும் இலமே; முனிவின்;**

**இன்னா தென்றலும் இலமே; மின்னோடு**

**வானம் தண்துளி தலைஇ, ஆனாது**

**கல்பொருது இரங்கும் மல்லற் பேர்யாற்று**

**நீர்வழிப் படூஉம் புணைபோல், ஆருயிர்**

**முறைவழிப் படூஉம்’ என்பது திறவோர்’**

**காட்சியின் தெளிந்தனம் ஆகலின், மாட்சியின்**

**பெரியோரை வியத்தலும் இலமே;**

**சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே” -26.**

என்ற பாடல் உலகக் கோட்பாட்டினை விளக்குகிறது.

எவ்வூராயினும் அ∴து எம் ஊரே! யாவராயினும் அவா் எம் உறவினரே! தீதும் நன்றும், நோதலும் தணிதலும் பிறரால் வருவதன்று; எம்மாலேயே விளைவதாம், சாதலோ இவ்வுலகிலே புதிய செய்தியன்று, வாழ்தலே இனிது என மகிழ்வதும், வெறுத்து அதனை இன்னாதென ஒதுக்குதலும் இல்லோம். பேரியாற்று நீரிலே செல்லும் மிதவை போல எம் அரிய உயிரானது முறையாகச் சென்று கரைசேரும் என்பதனைத் துறவுடையோா் காட்சியினால் தெளிந்தோம். எனவே, செல்வத்தாற் பெரியவரை மதித்தலும் செய்யோம்; சிறியோரை இகழ்தலும் செய்யோம். அவரவா் நல்லுள்ளப் பான்மை ஒன்றையே யாம் கருதுவோம்.

தனிமனிதன் திருந்தினால் தான் சமுதாயம் திருந்தும். எனவே, தனிமனிதரைப் பண்படுத்த வல்ல சிந்தனையை வற்புறுத்தினா் புலவா்கள்.

**“நல்லது செய்த லாற்றீ ராயினும்**

**அல்லது செய்த லோம் புமி னதுதான்” – 27.**

என்ற பாடல் மனித நேயக் கேபாட்பாட்டை வலியுறுத்தும் விதமாக அமைந்துள்ளது. வலிமை வாய்ந்த எமன் உம் உயிா் கவர வரும் போது நீா் வருந்துவீா். அப்போது வருந்திப் பயனில்லை. உயிருடன் வாழும் போதே நல்லது செய்யுங்கள். அ∴து இயலாதாயின் தீயதைச் செய்தலையாவது கைவிடுங்கள். அதுவே எல்லோரும் விரும்புவது. இதுவே மறுமையில் உம்மை நற்கதி சோ்க்கும் வழியுமாகும்.

### 1.4 சமயங்கள் காட்டும் மனித விழுமியங்கள்

மனித உள்ளங்களை இன்ப அன்பின் விளை நிலமாகத் தகுதிப்படுத்திப் பக்குவப் படுத்தும் தத்துவத்திற்கு, வாழ்க்கை முறைக்குச் சமயம் என்பது பெயா். மனித வாழ்க்கையைச் சமைத்துப் பக்குவப்படுத்துவது சமயத்தின் நோக்கம் ஆகும்.

**சமயங்களின் நோக்கம்:**

பரந்த நிலவுலகத்தின் கண், தோன்றியுள்ள சமயங்கள் பலப்பல. சமயங்கள் பலப்பலவாயினும் அவையனைத்திற்கும் நோக்கம் ஒன்றே ஆகும். ஓா் இசையரங்கில் பலா் பல வாத்தியங்களை இயக்கி இசையெழுப்புகின்றனா். அங்ஙனம் எழுப்பும் இசையொலி வேறு வேறு ஒலியமைப்புடையன ஆயினும்,

சுருதி, பண், தாளம் மாறுபடாது என்பதை நினைவில் கொள்ளல் வேண்டும். அதுபோலவே, சமயங்கள் மொழியால் மாறுபடலாம். காட்டும் கடவுளின் பெயர், வடிவம் மாறுபடலாம். ஆயினும் மனித குலம் ஒன்றே என்ற சுருதியில் மாறுபாடுகள் இல்லை. ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்பது சமய நியதி; நீதி.

**முதற்கடன்:**

உலகத்தில் வாழும் மனிதர்கள் அனைவரும், ஏன் மற்றைய உயிரினங்களும் கூட இறைவனுடைய அன்பிற்குரியவை. இந்த உயிரினங்களைப் பேணிப்பாதுகாப்பதையே இறைவன் தன்னுடைய குறிக்கோளாகக் கொண்டுள்ளான். உயிரினங்கள் துன்பத்தினின்று நீங்கி, ஆரா இன்ப அன்பினில் திளைத்து மகிழ வேண்டும் என்பதை இறைவனின் திருவுள்ளம். ஆனால், உயிர்கள் நிலைத்த இன்பத்தில் மகிழ வேண்டுமாயின் இன்பம் வழங்குதலைவிட, துன்பம் நீக்கம் செய்வதே முதற்கடன்.

**இந்து சமயம்:**

‘‘இந்து சமயத்தில் வேதங்கள் அன்பினையே மையமாகக் கொண்டு வாழ்க்கை நெறியை விளக்குகின்றன. இந்து வேதங்களுள் மிகவும் பழமையாகிய ரிக் வேதம் பின்வருமாறு கூறுகிறது.

‘‘எல்லா மாந்தரும் இணக்கமாய் வாழ்ந்து வருவார்களாக; எல்லோரும் அன்புடன் உரையாட்டும்; அனைவர் உள்ளங்களிலும் ஒற்றுமை உணர்வு நிலவட்டும். நீங்கள் எல்லோரும் ஒருவர் மற்றவர்க்கு உதவி செய்து வாழ்வீர்களாக’’ என்று வழிநடத்துகிறது’’. – 28.

**‘‘நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்**

**நரகத்தி லிடர்ப்படோம் நடலை யல்லோம்**

**ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்**

**இன்பமே யெந்நாளும் துன்ப மில்லை**

**தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான**

**சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்**

**கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்**

**கோய்ம் மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே”-29**

என்று அப்பர் பெருமான் தன்னம்பிக்கையும் பெருமிதமும் வெளிப்பட இப்பாடலைப் பாடியுள்ளார். நாம் எவர்க்கும் கீழ்பட்ட குடியினர் அல்லோம்; எமனுக்கும் அஞ்சமாட்டோம் யாருக்கும் எந்நேரத்திலும் தீவினை செய்யாமையால், நரகத்திற்குச் சென்று துன்பப்படமாட்டோம் பொய் கூறமாட்டோம்; என்றும் மகிழ்ச்சியோடு வாழ்வோம். எந்நாளுமே எமக்கு இன்பமே தவிர துன்பம் இல்லை மீளாத அடிமை ஆனோம்.

யாருக்கும் அடிமைப்படாதவனும், காதில் வெண் சங்குக் குழை அணிந்த தலைவனாகிய சங்கரனுக்கே நாம் மீளாத அடிமை ஆனோம். அச்சிவ பெருமானின் மலரணிந்த திருவடிகளைச் சென்றடைந்து அடைக்கலம் ஆனோம்.

இப்பாடல் இறைவன் ஒருவனைத் தவிர வேறு யாருக்கும் அடிமைப்படவோ, அஞ்சவோ மாட்டோம் என்ற வீரமொழிகளை எடுத்துரைக்கிறது.

**கிறித்துவசமயம்:**

‘‘உலகினில் பாவத்தை தமது செந்நீரால் கழுவிய ஏசுபெருமான் அன்பின் திருவுருவம். அவரருளிய மலைச் சொற்பொழிவு அன்புப் பொழிவு; ஒருவரை ஒருவர் அன்பு கொண்டு ஒழுகுங்கள்; பகைமை பாராட்டாதீர்கள். மன்னிக்கும் குணத்தினைப் பெறுங்கள்; எல்லோருக்கும் எப்பொழுதும் அன்பு காட்டுங்கள் என்கிறார் இயேசு’’ - 30.

**“மூவாத முதல்வனை முதுசுருதி மொழிப் பொருளை**

**ஓவாத பெருங்குணத்த வுத்தமனை யுலகனைத்தும்**

**சாவாத படிகாக்கத் தநுவெடுத்துத் துசங்கட்டுந்**

**தேவாதி தேவனையான் சிலுவமிசைக் கண்டேன்”.**-31.

என்று பாடுகிறார் எச்.ஏ.கிருஷ்ணப்பிள்ளை

இயேசு பெருமான், தேவர்களுக்குத் தேவனாய் இருப்பவர். அவர் அழிவில்லாப் பரம் பொருளாய் இருப்பவர். பழமை வாய்ந்த மறை கூறும் பொருளாய் இருப்பவர் தம்மை விட்டு நீங்காத சிறந்த பண்புகளைக் கொண்டவர். கைம்மாறு கருதாது பிறருக்கு உதவுபவர்.

உலக மக்களைத் துன்பத்திலிருந்து காப்பதற்கு மனித உருகொண்டு விடாப்பிடியாய் முன்னின்று வழிநடத்திச் செல்பவர் என்று இயேசு பெருமானின் பெருமைகளைக் எச்.ஏ.கிருஷ்ணப்பிள்ளை. இரட்சணிய மனோகரம் என்னும் நூலில் கூறுகிறார்.

இப்பாடல் இறைவனின் தன்மைகளை எடுத்து இயம்புகிறது.

**இசுலாம் சமயம்:**

‘‘முகமது சாகேபின் அருள்வாக்கு: பிறர் அன்பு பாராட்டாமலும் பிறர் அன்புக்குப் பாத்திரமாகாமலும் இருப்பவனிடம் நற்குணங்கள் இரா’’. கடவுள் படைப்பிலுள்ள மக்கள் அனைவரையும் தம் பிள்ளைகள் போல் கருதி அனைவர் இன்பதுன்பங்களையும் ஒருவன் எப்பொழுது தனதாகக் கொள்கிறானோ அப்பொழுதே அவன் ஸீபி ஆவான். மாந்தர்குலம் ஒன்றே என்பதும் அவர்கள் அனைவரும் ஒரு குலமாக வாழ் கடமைப்பட்டிருக்கின்றனர் என்பதே புனித குர் ஆனின் உபதேசம்’’-32.

**‘‘கவியா லுரைத்தபுகழ் பெறுவார் மிகுத்தகவி**

**யடைவார் கலக்க மறவே**

**செவியார மெய்ப்பொருளை யறிவார் மனத்தினுறு**

**செயல்கே டகற்றி விடுவார்**

**புவியார மொய்த்தநெறி மறைநாலி னுக்குமொரு**

**பொறியா யுதித்த வடிவார்**

**நவியார் சுவர்க்கபதி நயினார் பதத்துணையை**

**நடுநாவில் வைத்தவர்களே''.** 33

நபிகள் நாயகம் உலகில் அமைதி பரவிட, நிறைந்த சன்மார்க்க நெறிகள் கொண்ட மறைகளாகிய நான்கினுக்கும் விளக்கம் செய்யவல்ல ஓர் ஒளிப்பிழம்பாய்த் தோன்றியவர். அவர், அழகு பொருந்திச் சிறப்புற்றோங்க பொன்னுலகினுக்குத் தலைவர் ஆவார். அவர்களின் ஈருலக வாழ்வினுக்குப் பற்றுக்கோடான வேதச் சொல்லினைச் சிந்தித்து நடுவுநிலைமையோடு நாவால் உச்சரித்து ஏற்றவர்கள். புலவர்களால் புகழ்ந்து பாடப்படும் சிறப்பினையும் மிகுந்த ஞானத்தையும் அடைவார்கள்; மனக்குழப்பம் நீங்கிட; காது குளிர, உண்மைப் பொருளான கடவுளைக் பற்றிக் கேட்டுத் தெளிந்திடுவார்கள்; மனத்தினில் தோன்றும் தீய செயல்களுக்கான கெட்ட எண்ணங்களை நீக்கிடுவார்கள்.

இவ்வாறு நபிகள் பெருமானை வணங்குபவர்கள் அடையும் நற்பயன்களை எடுத்துரைக்கிறார் உமறுப்புலவர்.

**பௌத்த சமயம்**

''சித்தார்த்தரைப் புத்தராக்கியது அன்பு நெறி. புத்தரின் அன்புநெறி கிறித்துப் பிறப்பிற்கும் முன்பே போரில்லா அமைதி நெறியை வையகத்துக்ககுத் தந்தது. புத்தன் அன்பின் வடிவமாகவே வாழ்ந்தார். அவர் மனித குலத்துக்கு உய்யும் நெறியாகக் காட்டியது அன்பு நெறியேயாம். புத்த சமய வேதமாகிய திரிபீடகம் கூறுவது; தாய் தன் உயிருக்கு ஆபத்து வருவதையும் கருதாது, தன் ஒரே பிள்ளையைப் பாதுகாப்பது போல மனிதன் எல்லா உயிர்களிடமும் எல்லையற்ற அன்பு கொண்டிருக்க வேண்டும் என்றும், தங்கு தடையின்றிப் பகையோ, விரோதமோ இல்லாமல் மனிதர் தமக்கு மேலும் கீழும், அங்கும் இங்கும், அகில உலகினிடமும் எல்லையற்ற அன்பு கொண்டு வாழ வேண்டும் என்றும் புத்த சமய வேதமாகிய திரிபீடகம் கூறுகிறது'' -34.

**''அருள்வீற் றிருந்த தருநிழல் போதி**

**முழுதுணர் முனிவநிற் பரவுதும் தொழுதக**

**ஒரு மனம் எய்தி இருவினைப் பிணிகெட**

**முப்பகை கடந்து நால்வகைப் பொருணர்ந்(து)**

**ஓங்குநீர் உலகிடை யாவரும்**

**நீங்கா இன்பமொடு நீடுவாழ் கெனவே.”** -35

என்கிறது வீரசோழியம் மேற்கோள் பாடல்.

அருள்கொண்ட போதிமரத்தின் அழகிய நிழலில் வீற்றிருக்கும் புத்த பெருமானே!

எல்லா உண்மைகளையும் அறிந்த உங்களை நாங்கள் தொழுகின்றோம்.

கடல் சூழ்ந்த உலகில் வாழும் மக்கள் அனைவரும் வணங்கத்தக்க வகையில் ஒன்றுபட்டு வாழ்வார்களாக.

நல்வினை, தீவினை ஆகிய இரு வினைகளும் நீங்கி வாழ்வார்களாக!

காமம், வெகுளி, மயக்கம் என்னும் முப்பகையினையும் வென்று வாழ்வார்களாக!

அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நால்வகைப் பொருளையும் உணர்ந்து, நீங்காத இன்பத்தோடு நெடுங்காலம் வாழ்வார்களாக! என்கிறார் புத்தமித்திரர்.

இப்பாடல் அருமையான மனித விழுமியங்களை எடுத்து இயம்புகின்றன.

**சமண சமயம்:**

“சமண சமயத்தின் புராணங்கள் தயையே தர்மத்தின் வேர் என்று வற்புறுத்துகின்றன. ஜினேந்திரதேவன் தர்மத்தின் இறுதி எல்லையாயிருப்பது கருணை என்று கூறியிருக்கிறார். கருணையில்லாத மனிதரிடம் தர்மம் இம்மியளவும் இராது என்றும் கூறுகின்றது.

மகாவீரர் பகைவனோ, நண்பனோ விரோதியோ வேண்டியவனோ எல்லா உயிர்களையும் எல்லா மனிதர்களையும் ஒன்றுபோல் மதித்து எல்லோரையும் தாமாகக் கருதுதலே அகிம்சை என்று அருளிச் செய்துள்ளார்” – 36.

இங்ஙனம் உலகிடை நிலவும் எல்லாச் சமயங்களும் மனிதகுலத்தை இன்ப அன்பு கலந்த அணைப்பில் ஒரு குலமாக்க முயலுகின்றன. மனிதகுலம், ஒன்று என்பதே பொது நீதி; இடையில் நிலவும் வேறுபாடுகள் வேடிக்கை மனிதரின் விளையாட்டு அமைப்புகளே அகும். சமயங்களின் ஒருமித்த குரல் அன்பு காட்டு; உதவி செய்; பகையைமற; பண்பு பாராட்டு; அன்புப் புனலால் தனது மாற்றார் மனம் ஆகியவைகளைக் குளிப்பாட்டு; உயிர் வர்க்கத்தின் மகிழ்ச்சிப் புனலால் எல்லாம் வல்ல இறைவனின் திருப்பாதங்களைக் குளிப்பாட்டுங்கள் என்பதாகும்.

## 1.2 நீதி நூல்களில் மனித விழுமியங்கள்:

மனிதனை நல்வழிப்படுத்தி சமூகத்தில் மனிதன் மனிதனாக வாழ நம்முடைய தமிழ்மொழி இலக்கியங்கள் பெரிதும் உதவிபுரிந்துள்ளன. அறம் பொருள் இன்பம் வீடுபேறு என்பதனை மையப்படுத்தி இலக்கியங்கள் படைக்கப்பட்டிருப்பினும் நல்லொழுக்க வாழ்க்கையே முதன்மைப்படுத்தப் பட்டிருப்பதனைக் காண இயலும்.

**நாலடியார்:**

சமண முனிவர்கள் அருளிய நாலடியார் பாடல்கள் அறம், பொருள், இன்பம் ஆகிய மனிதவாழ்வுக்கும் தேவையானவற்றை விளக்குகின்றன.

**மேன்மக்கள்:**

சிங்கமானது பசித்துன்பம் மிகுதியாக வந்தபோதும் அருகம்புல்லைத் தின்னாது. அதுபோல, உடல்மெலிந்து வறுமையுற்றபோதும் உயர்ந்த குடியில் பிறந்தவர்கள் சிறந்த ஒழுக்கங்களிலிருந்து சிறிதும் குறையமாட்டார் என்று நாலடியார் கூறுகிறது.

**"இடுக்கண் தலைவந்த கண்ணும் அரிமா**

**கொடிப்புல் கறிக்குமோ மற்று" – 37.**

நரம்புகள் மேலே தோன்றி உடல் மெலிந்து வறுமையுற்ற போதும் மேன்மக்கள் நல்லொழுக்கத்திலிருந்து மாறமாட்டார்கள். பிறரிடம் இரக்கமாட்டார்கள். தம்மிடம் உள்ள பொருள்களுக்கு ஏற்ப நற்செயல்களைச் செய்வர்.

**"நரம்பெழுந்து நல்கூர்ந்தார் ஆயினும் சான்றோர்**

**குரம்பெழுந்து குற்றம் கொண்டு ஏறார்" – 38.**

என்னும் வரியில் மேன்மக்கள் எவ்வளவு துன்பம் வந்தபோதிலும் இரத்தல் தொழிலைச் செய்யமாட்டார் என்பது புலப்படுகிறது.

குற்றமற்ற மேன் மக்கள் திருடமாட்டார்கள். கள் அருந்தார் தீயனவற்றை விலக்கி தூயவராவார். பொய் கூறமாட்டார். ஊழ்வினையால் வறுமையுற்றாலும் வருத்தமடைய மாட்டார் என்று நாலடியார் கூறுகிறது.

**"கள்ளார், கள் உண்ணார் கடிவு கடிந்தொரீஇ**

**எள்ளிப் பிறரை இகழ்ந்துரையார் - தள்ளியும்**

**வாயிற் பொய் கூறார் வருவது காட்சியார்**

**சாயின் பரிவ திலர்" – 39.**

என்ற பாடல் மூலம் மேன்மக்களின் நற்குணங்கள் புலப்படுகிறது.

**பெரியாரைப் பிழையாமை:**

அருமையான பெரியோர் தொடர்பு கிடைக்க வாய்ப்பிருந்தும் அவரைக் கொண்டு நன்மை பெறாமல் காலம் கழிக்கும் வீணர்கள் உள்ளனர்.

**"பொன்னே கொடுத்தும் புணர்தற்க அரியாரைக்**

**கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும்" -40.**

என்ற பாடலில் பொன்னைக் கொடுத்தாலும் நெருங்குதற்கு அரியோர் பெரியோர் ஆவர் என்பதனை உணரவைக்கிறது. ஊரில் உள்ள சாக்கடைநீர், கடல் நீரைச் சேர்ந்தால் அதன் தன்மை மாறுபடும். அதுபோல கீழ்க்குலத்தோர் பெருமைமிக்க பெரியாரோடு சேர்ந்தால் மலைபோல உயர்ந்து நிற்பர்.

**"ஊரங் கணநீர் உரவுநீர் சேர்ந்தக் கால்**

**பேரும் பிறிதாகித் தீர்த்தமாம்" – 41.**

என்ற பாடல் வரிகள் மூலம் மக்கள் மேம்பட உணர்த்துகிறது நாலடியார். பாலோடு கலந்த தண்ணீரும் பால்போல் தோன்றும். அதுபோல் சிறியோர், பெரியாரோடு சேர்ந்து விட்டால் சிறியோரின் சிறுமைக்குணம் தோன்றாது என்று நாலடியார் பெரியோரின் சிறப்பினை எடுத்துரைக்கிறது.

**திருக்குறள்:**

மக்கள் வாழும் வாழ்க்கை சிறப்புற்று நிற்பதற்குக் காரணம் மனம் என்னும் சிறந்த கருவியைப் பெற்று அதைப் பயன்படுத்தவும் வல்லவர்களாக அவர்கள் விளங்குவதே காரணமாகும்.

மக்கள் வாழ்க்கை மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்புலன்களைக் கொண்டு வாழும் வாழ்வு மட்டும் அன்று. இவையுமாய் இவற்றிற்கு அப்பாலுமாய் உணர்ந்து அறிந்து மனத்தால் வாழும் வாழ்க்கையுமாகும். இந்த மனம் பண்படும் இடம் காதல் வாழ்க்கை; மனம் வாழும் இடமே தனிவாழ்க்கை.

திருவள்ளுவர் காமத்துப்பாலில் காதல் வாழ்க்கையை விளக்கி காதல் கொண்டவரிடம் கலந்தும் கரைந்தும் மனம் பண்படும் வகையைக் கூறியுள்ளார்.

பொருட்பாலில் பொதுவாழ்க்கையை விளக்கி, அறிவின் வழி இயங்கிப் பொதுக்கடமையைச் செய்து மனம் பயன்படும் வகையைக் கூறியுள்ளார்.

அறத்துப்பாலில் தனிவாழ்க்கையை விளக்கி அன்பை வளர்த்து அறத்தைப் போற்றி மனத்தூய்மைப் பெற்று வாழும் வகையைக் கூறியுள்ளார்.

இவ்வாறு திருக்குறள் முழுமையுமே மனிதவிழுமியங்களைத்தான் எடுத்துரைக்கிறது.

**விருந்தினரைப் பேணுதல்:**

**“விருந்து புறத்ததாத்தான் உண்டல் சாவா**

**மருந்தெனினும் வேண்டற்பாற்று அன்று” -42.**

என விருந்தோம்பலின் சிறப்பை நன்கு விளக்குகிறது திருக்குறள். உண்ணப்படும் பொருள் சாவா மருந்தே ஆனாலும் விருந்தினரை வீட்டுக்கு வெளியே வைத்து

விட்டு தான் மட்டும் உள்ளிருந்து தனித்து உண்ணுதல் விரும்பத்தக்கதன்று. அதேபோல் நாள்தோறும் தன்னை நோக்கி வருகின்ற விருந்தினரைப் பேணுகின்றவனது இல்வாழ்க்கை வறுமையால் துன்புற்றுக்கெடுவதில்லை. மேலும் முகமலர்ச்சியோடு நல்ல விருந்தினரைப் பேணுகின்றவனது வீட்டில் திருமகள் மனமகிழ்ந்து நிலையாகத் தங்குவாள். மனிதநேயத்துடன் விருந்தினரைப் பேணி அவர்க்குச் சிறந்த உணவு படைத்தலாகிய கேள்வியை மேற்கொள்ளாதவர். அவ்வறத்திற்குப் பயன்பட வேண்டிய பொருளை நிலையானது என்று மயங்கி வருந்திப் பாதுகாத்தும் பின்பு இழந்து விட்டதனால் ஆதரவு அற்றோம் என வருந்துவர். எனவே மனித நேயமிக்க விருந்தோம்பலின் பயன் இவ்வளவு என்று அளவிட்டுச் சொல்லத்தக்கதன்று. விருந்தினரின் தகுதி அளவே அதன் அளவாம்.

**செய்நன்றியறிதலில் மனிதநேயம்:**

**"செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்**

**வானகமும் ஆற்றல் அரிது". -43.**

என்று குறளின்படி தான் ஓர் உதவியும் செய்யாத நிலையில் ஒருவன் தனக்குச் செய்த உதவிக்கு மண்ணுலகத்தையும், விண்ணுலகத்தையும் கைமாறாகக் கொடுத்தாலும் ஈடாகாது. நெருக்கடியான நேரத்தில் ஒருவன் மனித நேயத்துடன் செய்த செயலானது உலகத்தை விட மிகப் பெரியதாகும். ஒருவன் திணையளவாகிய சிறு உதவியையே செய்தானாயினும், அதன் பலனை அறிந்தவர் அதனைப் பனையளவான பேருதவியாகக் கருதுவர். கைம்மாறாகச் செய்யும் உதவி முன்பு தான்பெற்ற உதவியின் அளவை உடையதன்று. அவ்வுதவியை ஏற்றுக் கொண்டவரது மேன்மையின் அளவை உடையதாம். நன்றியுடையவன் தங்கள் துன்பத்தைப் போக்கியவருடைய நட்பினை ஏழேழு பிறவியிலும் நினைப்பர். இது மனிதநேயத்திற்குச் சிறந்த சான்றாகும். மனிதநேயமிக்க ஒருவன் குற்றமற்றவரின் உறவை மறக்கலாகாது. துன்பக் காலத்தில் துணையானவரின் நட்பையும் விடலாகாது எனத் திருவள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

**ஏழைகளுக்கு ஈதல்:**

**"வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற் றெல்லாம்**

**குறியெதிர்ப்பை நீர துடைத்து" -44.**

என்ற குறளின்படி ஏழைகளுக்கு அவர் வேண்டியதொன்றைக் கொடுப்பதே ஈகை என்னும் அறச்செயலாம். மற்றவர்களுக்கு கொடுப்பதெலாம் கடன் கொடுக்கும் தன்மையை உடையது. செல்வத்தின் பயன் பிறருக்கு ஈதலே. அவ்வாறு ஈதலினும் வறியவர்க்கு ஈதல் அதனினும் நன்று. ஒருவன் பசியால் வாடும்போது தம் செல்வத்தைப் பசிபோக்கும் பொருட்டு உணவு கொடுத்து ஈதலே ஈகையாகும். இந்த அறச்செயல் மனிதநேயச் செயல்களில் முதன்மையானதாகும். பிறரோடு பகிர்ந்துண்டு பழகியவனைப் பசி என்று சொல்லப்படும் கொடிய நோய் தாக்குவதில்லை. தேடிய உணவை பிறர்க்கு ஈயாமல் தாமே தனித்து உண்ணுதல், திண்ணமாக இரத்தலை விடத்தீயதாகும்.

**உயிர்களிடமும் இரக்கம் காட்டுதல்:**

மேன்மக்களிடத்தில் மட்டுமே உள்ள அருளாகிய செல்வமே செல்வங்கள் எல்லாவற்றிலும் சிறந்தது. முற்றப் பொருளாகிய செல்வங்கள் கீழ் மக்களிடத்திலும் உள்ளன.

இதனை வள்ளுவர்,

**"அருட்செல்வம் செல்வத்துள் செல்வம் பொருட்செல்வம்**

**பூரியார் கண்ணும் உள"-45.**

என்றார். மற்ற உயிர்களைப் பேணி அவற்றிடம் அருள் பூண்பவனுக்கு தன்னுயிரின் பொருட்டு அஞ்சி வாழும் தீவினைகள் இல்லை என்று கூறுவர் அறிந்தோர், உயிர்களிடத்து அருள் செய்யாமல் அதற்கு மாறான கொடுமைகளைச் செய்து வாழ்பவர், உறுதிப்பொருளாகிய அறத்திலிருந்து நீங்கித் தம் கடமையை மறந்தவர் என்பர்.

**எவ்வுயிரையும் கொலை செய்யாதிருத்தல்:**

நமது செல்லப் பிராணிகளிடத்தில் அன்பு செலுத்துவது போல பிற அனைத்து உயிர்களிடத்தும் அன்பு செலுத்துதல் வேண்டும். தம் உயிர்போல் எண்ணி, அவைகளை வதை செய்வதோ அல்லது பலியிடுதல் போன்ற

செயல்களில் ஈடுபடுவதையோ, முற்றிலுமாக அறவே ஒழிக்க முனைய வேண்டும். இக்கொடிய செயல் போக்கி அனைத்து உயிர்களும் தம் உயிர்போல் காத்து வாழ்வது தலைசிறந்த பண்பாகக் கருதப்படும்.

**"அறவினை யாதெனின் கொல்லாமை கோறல்**

**பிறவினை எல்லாம் தரும்"-46.**

கொல்லாமையே மிகச்சிறந்த தருமம். கொல்லும் செயல் பல பாவங்களுக்குக் காரணமாகும் எனத் திருவள்ளுவர் விளக்குகின்றார்.

**இரப்பவருக்கு உதவுதல்:**

இரப்பவர், இரக்கத்தக்க ஈகையாளரைக் கண்டால் அவரிடம் இரக்கலாம். அவர் இல்லை என்று ஒளித்தாராயின் அது அவர்க்கு அவதூறேயன்றி இரந்தவர்க்கு அவதூறன்று.

இதனை,

**"இரக்க இரத்தக்கார்க் காணின் கரப்பின்**

**அவர்பழி தம்பழி அன்று" – 47.**

என்ற குறளின் வழி அறியலாம்.

**ஆசாரக் கோவை:**

பெருவாயின் முள்ளியார் தனிமனிதனுக்கான ஒழுக்கத்தை ஆசாரக் கோவையில் குறிப்பிடுகிறார்.

**அடிப்படைப் பண்புகள்:**

பிறர் தனக்கு செய்த நன்றியை மறவாமை, பொறுமை, இனியசொல், எவ்வுயிர்க்கும் துன்பம் செய்யாமை, கல்வி, ஒப்புரவறிதல், அறிவுடைமை நல்ல இனத்தாரோடு நட்பு என்ற எட்டு பண்புகளும் நல்லொழுக்க முடையவர்களுக்கு அடிப்படைப் பண்புகளாகும் என்கிறார் பெருவாயின் முள்ளியார்.

**“நன்றியறிதல் பொறையுடைமை இன்சொல்லொடு**

**இன்னாத எவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியொடு**

**ஒப்புர வாற்ற லறிதல் அறிவுடைமை**

**நல்லினத்தாரோடு நட்டல் இவையெட்டும்**

**சொல்லிய ஆசார வித்து” – 48.**

என்ற பாடலில் கூறியுள்ள பண்புகள் அனைத்தும் எக்காலத்துக்கும் பொருந்தக் கூடியதாக அமைந்துள்ளன.

நம்முடைய தந்தையும் தாயும் நாம் கண்முன்னே காணும் தெய்வங்களாவர். தேய்வங்களைத் தொழுவதைப் போன்று தந்தையையும், தாயையும் தொழுத எந்த ஒரு செயலையும் செய்தால் அச்செயல் நன்மையாய் முடியும் என்பதை

**“தந்தையும்   தாயும் தொழுதெழுக என்பதே**

**முந்தையோர் கண்ட முறை” -49.**

என்ற பாடல் வரிகளில் எடுத்துரைக்கின்றார்.

இதனையே ‘இருமுது மக்களைக் கண்டு எழுதல் காலை இனிது’ என்று இனியவை நாற்பதும் வலியுறுத்துகிறது.

**ஈகை:**

மனிதர்களுக்கு மட்டுமின்றி பசு, பறவைகளுக்கும் கூட தான் உணவிட்டு உண்ண வேண்டும் என்று சிறப்பாக கூறுகிறது. ஆசாரக்கோவைப் பாடல்.

**“விருந்தினர் மூத்தோர் பசுசிறை பிள்ளை**

**இவர்க்கூன் கொடுத்தல்லால் உண்ணாரே” – 50.**

என்று எடுத்துரைக்கிறார்.

**கூடா ஒழுக்கம்:**

''பிறன்மனை நோக்கா பேராண்மை'' என்ற வள்ளுவரின் கருத்திற்கிணங்க ஆசாரக்கோவையில் பிறருடைய மனைவியை விரும்புவதும், கள் குடிப்பது களவு. செய்வதும், சூதாடுவதும், கொலை செய்வதும், போன்றவை அறஒழுக்கத்தைப் பேணுபவர் மனதால் கூட நினைக்காத செயல் என்று கூறுகிறார்.

> **“தினிலரென்று**
>
> **எள்ளப் படுவதூஉ மன்றி நிரயத்துச்**
>
> **செல்வுழி யுய்த் திடுத லால்” – 51.**

என்று எடுத்துரைக்கிறார். அறவொழுக்கம் பேணாதவர்கள் நரகம் அடைவர் என்று எச்சரிக்கை விடுக்கிறார்.

**எண்ணக் கூடாதவை:**

பொய் பேசக்கூடாது. அடுத்தவரைப் பற்றி கோள் சொல்லக்கூடாது. பிறர் பொருளைத் திருடக்கூடாது. பொறாமை படக் கூடாது என்னும் நான்கு கருத்துக் களையும் ஐயமறக் கற்றுணர்ந்த அறிவுடையோர் பின்பற்றி வாழ்வர். இதிலிருந்து பிறழ்ந்து வாழ்வதை மனதாலும் எண்ண மாட்டார் என்பதை

> **“பொய் குறளை வௌவல் அழுக்கா றிவைநான்கும்**
>
> **ஐயந்தீர் காட்சியார் சிந்தியார்” -52.**

என்ற பாடலில் எடுத்துரைத்துள்ளார். இந்நான்கையும் நினைப்பவர்கள் இப்பிறவியில் பிச்சையெடுக்கும் நிலை உருவாகும். மறுமையில் நரகத்தை சென்றடைவர். மேலும், ஒருபடி மேலே சென்று தெய்வமும் அழிந்து விடும் என்ற இறை நம்பிக்கையின் வழி வலியுறுத்துகிறார் பெருவாயின் முள்ளியார்.

இவ்வாறு நீதிநூல்கள் ஒரு தனி மனிதன் பெற்றிருக்க வேண்டிய ஒழுக்கம், நீக்க வேண்டியவை, போற்ற வேண்டியவை, ஒழுக்கத்தைக் கடைப்பிடிப்பவர் அடையும் நன்மைகள், ஒழுக்கத்தில் பிறழும் போது ஏற்படும் தீமைகள் ஆகிய மனித விழுமியங்களை எடுத்துரைக்கின்றன.

## 1.6 காப்பியங்களில் மனித விழுமியங்கள்:

நீதிநூல்களுக்குப் பிறகு தோன்றியதெனக் கருதப்படும் காப்பியங்களிலும் அறத்தின தாக்கம் மிகுதியாகக் காணப்படுகிறது. நீதிநூல்களில் அறத்தை விளக்கவும் அறிவுறுத்தவும் நூல்கள் தோன்றின. அவை அறத்தின் கூறுகளை மட்டும் வெளிப்படுத்தின. ஆனால் நீதிகளைக் கதைகளோடு கூறும் முறையில் காப்பியம் பிறந்தது.

காப்பியங்கள் ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள் எனவும், மேலும் சிற்சில காப்பியங்களும் தமிழில் தோன்றின. இதில் ஐம்பெருங்காப்பியங்கள் பல அறமதிப்புகளை கையில் எடுத்துக்கொண்டு அவற்றை வலியுறுத்திப் பேசுபவையாக அமைகின்றன.

**சிலப்பதிகாரம்:**

முப்பெரும் உண்மைகளைக் கதைகளோடு புனைந்து கூறும் முகமாகச் சிலப்பதிகாரம் தோன்றியது எனில் சாலப் பொருந்தும்.

**"அரசியல் பிழைத்தோர்க்கு அறங் கூற் றாவதும்**

**உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்தலும்**

**ஊழ்வினை உறுத்துவந்து ஊட்டும் என்பதும்"** - 53.

என்கிறது சிலம்பு.

முதலில் மக்களுக்கு அரணாக இருக்க வேண்டிய அரசு பிழைபடுமானால், அறமே கூற்றுவனாக உருவெடுத்து உரிய தண்டனையைத் தரும் என்ற பேருண்மை விளக்கப்படுகிறது. இரண்டாவதாகக் கற்பு சிறந்த அறமதிப்பாகக் காப்பியம் விளம்புகிறது. கடைசியில், அவரவர் நற்செயல், தீச்செயல் அடிப்படையில் அவரவரின் வாழ்க்கை அமைகிறது எனும் கருத்துகள் சிலம்பில் சுட்டிக்காட்டப் பெறுகிறது.

**"இன்றுனை மகளிர்க் கின்றி யமை யாக்**

**கற்புக்கடம் பூண்ட இத்தெய்வ மல்லது**

**பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலமால்" -54.**

எனக் கண்ணகியின் கற்பு எனும் அறமதிப்பை உயர்த்திப் பேசுகிறது.

ஈகை என்னும் விழுமியம் பற்றி பேசும் போது

**"அறவோர்க் களித்தலும் அந்தணர் ஒம்பலும்**

**துறவோர்க் கெதிர்த்தலும் தொல்லோர் சிறப்பின்**

**விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை" – 55.**

என்னும் அடிகளில் விருந்தோம்பல் என்னும் அறம் பற்றிக் கூறுகிறது.

**"அறம்பயன் விளைதலும் மறப்பயன் விளைதலும்"**

என்னும் அடியில் ஈகை அறமும் சிறப்பித்துப் பேசப்படுகிறது.

**மணிமேகலை:**

மணிமேகலை ஈகை அறத்தைப் பற்றிக் கூறும் பாடல்

**"அறமெனப் படுவது யாதெனக் கேட்பின்**

**மறவாது இதுகேள்; மன்னுயிர்க் கெல்லாம்**

**உண்டியும் உடையும் உறையுளும் அல்லது**

**கண்டது இல்லெனக் காவலன் உரைக்கும்**

**என்னாட் டாயினும் பிறர்நாட் டாயினும்**

**நன்னுதல்! ஊரைத்த நல்லறம் செய்கேன்" -56.**

என்னும் தொடரில் உண்டியும், உடையும், உறையுளும் பிறருக்கு வேண்டியபோது கொடுத்து உதவும் ஈகை எனும் அறமே பேரறமாகக் கருதப்படுகிறது.

**"இளமையும் நில்லா; யாக்கையும் நில்லா;**

**வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா;**

புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்

மிக்க அறமே விழுத்துணை ஆவது”. -57.

என்னும் அடிகளில் நிலையாமை கருத்துகள் இடம்பெறுகின்றன.

**சீவகசிந்தமணி:**

சீவகசிந்தாமணியும் ஈகையைப் பற்றியும், ஈயாமையின் அவலத்தன்மையையும் எடுத்தியம்புகிறது.

**“மாசித் திங்கள் மாசின. சின்னத் துணி முள்ளின்**

**ஊசித் துன்ன மூசிய வடை யுடையாகப்**

**பேசிப் பாவாய் பிச்சை யெனக்கை யகலேந்திக்**

**கூசிக் கூசி நிற்பார் கொடுத்துண்ட றியாதார்” – 58.**

என்னும் பாடலில் தானும் உண்ணாமல், பிறர்க்கும் அளிக்காமல் இருக்கும் நிலை பற்றித் தெரிவிக்கிறது. இங்கு ஈயாமை என்னும் எதிர்மதிப்பின் அவலத் தன்மை சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

**வளையாபதி:**

வளையாபதியில் நிலையாமைக் கருத்துகள் இடம் பெற்றுள்ளன.

**“வேற்கண் மடவார் விழைவொழிய யாம் விழையக்**

**கோற்கண் நெறிகாட்டக் கொல் கூற் றுழையதா**

**நாற்பதிகந்தாம் நரைத்தூ தும் வந்ததினி**

**நீத்தல் துணிவாம் நிலையா திளமையே” -59.**

என இளமை நிலையாமையை வளையாபதி விளக்குகிறது.

மேலும்,

**“பொய்யான் பிற்புறங் கூறான்பின் யாரையும்**

**வையன் மின்வடி வல்லன சொல்லி நீ்ர**

**உய்யன் மன்னுயிர் கொன்றுண்டு வாழுநாட**

**செய்யன் மின் சிறி யாரொடு தீயமின்” – 6.**

என்று பொய்சொல்லல், புறங்கூறுதல், பிறரை வைதல் உயிர்களைக் கொன்று உண்ணுதல், எளியவரைத் துன்புறுத்தல் ஆகியவற்றைச் செய்தல் கூடாது எனவும் வாய்மை, புறங்கூறாமை, இனியவை கூறல், புலால் உண்ணாமை, இன்னா செய்யாமை போன்றவற்றையும் காப்பியங்கள் விளக்குகின்றன.

**குண்டலகேசி:**

**“பாளையாந் தன்மை செத்தும் பாலனாந் தன்மை செத்தும்**

**காளையாந் தன்மை செத்தும் காமுறு மிளமை செத்தும்**

**மீளுமிவ் வியல்பு மின்னே மேல்வரு மூப்புமாகி**

**நாளுநாட் சாகின் ராமால் நமக்குநா மழாத தென்னே” – 61.**

என மாயையில் சிக்கியிருக்கும் மனிதனை வெளிச்சத்திற்குக் கொண்டு வருவதற்காகவும். தன்னுடைய நிலைக்காக வருந்தாமல் பிறருடைய நிலை கண்டு வருந்துபவர்களுக்கு இது ஒரு சிறந்த எச்சரிக்கை யாகவும் அமையும் படியாக இளமை நிலையாமை என்னும் விழுமியத்தை எடுத்தியம்புகிறது.

இவ்வாறு காப்பியங்களில் குறிப்பாக ஐம்பெருங்காப்பியங்களில் எண்ணற்ற மானிட விழுமியங்கள் நிறைந்துள்ளன.

## 1.7 இக்கால இலக்கியங்களில் மனித விழுமியங்கள்

**வள்ளலாரின் உயிரிரக்கம்:**

வள்ளலார் உயிர்கள்மீது இரக்கம் கொண்டவர். இவருடைய பாடல்கள் ‘திருவருட்பா’ என்னும் பெயரில் வழங்கப் பெறுகின்றன.

உலகத்திலுள்ள அனைத்து வகையான உயிர்களும் எப்போதும் எவ்வகையிலும் வருத்தமுறக் கூடாது என்பதனை தம்பாடல் மூலம் வலியுறுத்துகிறார்

**“வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம்**

**வாடினேன் பசியினால் இளைத்தே**

**வீடுதோ றிரந்தும் பசியறாது அயர்ந்த**

**வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்**

**நீடிய பிணியால் வருந்துகின் றோரென்**

**நேருறக் கண்டு உளம் துடித்தேன்.**

**ஈடின மானிகளாய் ஏழைகளாய் நெஞ்**

**சிளைத்தவர் தமைக்கண்டே இளைத்தேன்” -62.**

மனிதன் மனிதனிடத்தும் காட்டும் இரக்க உணர்வு அவனை மனித நிலையிலிருந்து உயர்வுபடுத்துகின்றது என்கிறார் வள்ளலார்.

‘‘அந்நிய உயிர்களுக்கு இம்சை உண்டாக்காது நடத்தலே ஜீவகாருணியம். இதுதான் முக்தி அடைவதற்கும், சித்தி அடைவதற்கும் முதற்படியாய் இருக்கின்றது’’.

**“ஜீவகாருணியம் விளங்கும்போது அறிவும் அன்பும் உடனாக நின்று விளங்கும். அதனால் உபகாரசத்தி விளங்கும். இந்த உபகார சக்தியால் எல்லா நன்மைகளும் தோன்றும்” -5.**

என்ற வள்ளல் பெருமானின் வாக்குவழி, உரியவனை உயர்த்துவதும் அதன் வழி உலக உயிர்களின் இன்ப உய்விற்கும் மூலமாக இருப்பது உயிரிரக்கமே என்பதனை உணர வேண்டும்.

புலால் வெறுத்தல்

இராமலிங்க அடிகளின் சுத்தசன்மார்க்கக் கொள்கைகளில் உயிர்க் கொலை புரியாமையும், புலால் உண்ணாமையும் வற்புறுத்தப்படுகின்றன.

பண்டையகாலத் தமிழர்கள் புலால் உண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர்.

**“புலால் உண்ணும் வழக்கத்தை வெறுத்தப் பழங்காலப் புலவர்களுள் வள்ளுவர் தவிர வேறெவரும் புலால்வெறுத்தல் பற்றி பாடவில்லை”** -64.

திருக்குறளில் புலால் மறுத்தல் என்னும் அதிகாரத்தில்

**“அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன்**

**உயிர்செகுத்து உண்ணாமை நன்று” – 65.**

என்ற குறள்வழி, ஆவுதிப்பொருட்கள் பல இட்டு ஆகமம் வழிபெறும் பேற்றைவிட ஓர் உயிரைக் கொன்று உண்ணாதிருத்தல் நல்லது என்கிறார். இதுபோலவே தன்னுடலை வளர்க்க வேறோர் உயிரின் உடலைத் திண்பது ஒவ்வாது என்பதனை

**“தன் ஊன் பெருக்கற்குத் தான் பிறிது உண்பான்**

**எங்ஙனம் ஆளும் அருள்’ -66.**

என்ற குறள் வழிகூறுகின்றார்.

இராமலிங்க அடிகளாரும் தன் சன்மார்க்க நெறியின் தலையாயக் கொள்கையாக வலியுறுத்துவது புலால் வெறுத்தலையும், புலாலுக்காக உயிர்க்கொலைப் புரிவதையும் தம் பாடல்கள் வழிச் சாடுகின்றார்.

**“துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத்**

**தொடங்கிய போதெல்லாம் பயந்தேன்**

**கண்ணிலால் ஐயோ பிறஉயிர் பதைக்கக்**

**கண்டகா லத்திலும் பதைத்தேன்” – 67.**

என்னும் பாடல்வழி உயிர்க்கொலைப் புரிந்து ஊண் உண்ணும் கொடிய வழக்கத்தைக் கண்டிக்கிறார் இராமலிங்க அடிகள்.

**பாரதியார் பாடல்களில் விழுமியங்கள்:**

நாட்டுப்பற்று, மொழிப்பற்று, இறையுணர்வு, காதல், வீரம் என்ற உயர்ந்த கருத்துகளைக் கொண்டவை பாரதியார் பாடல்கள்.

நாட்டு மக்கள் சாதிச்சிக்கலால் நலிவுறுவதைக் கண்ட கவிஞர்

**"ஏழை என்றும் அடிமை என்றும்**

**எவரும் இல்லை சாதியில்" – 68.**

என்று பாடினார்.

**"மாதர் தம்மை இழிவு செய்யும்**

**மடமையைக் கொளுத்துவோம்" -69.**

என்று பெண்விடுதலையைப் பற்றித் பேசத் தொடங்கினார்.

**"தனியொருவனுக்கு உணவில்லை யெனில்**

**ஜகத்தினை யழித்திடுவோம்".**

என்று வீரமுழக்கம் செய்தார்.

**"எல்லாரும் ஓர் குலம் எல்லாரும் ஓரினம்**

**எல்லாரும் இந்திய மக்கள்**

**எல்லாரும் ஓர் நிரை எல்லாரும் ஓர்விலை**

**எல்லாரும் இந்நாட்டு மன்னர்" – 70.**

என்ற பாடலில் ஒற்றுமை உணர்வை வெளிப்படுத்துகிறார்.

**பாரதிதாசன் பாடல்களில் விழுமியங்கள்:**

பாரதிதாசன் பாடல்களில் உலகப்பொதுமை, சமத்துவம், பொதுவுடைமை, புரட்சி, பெண்கள் முன்னேற்றம், தமிழ், தமிழர், இயற்கை முதலிய கருத்துகள் பொதிந்திருக்கும்.

**"பெண்ணடிமை தீரும்மட்டும் பேசும் திருநாட்டில்**

**மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்போ" – 71.**

என்று பெண்ணடிமைப் பற்றிப் பேசுகிறார்.

**"நமதடா இந்நாடு! நாமிந் நாட்டின் வேந்தர்!**

**சமம் இந்நாட்டு மக்கள் என்றே, தாக்கடா**

**வெற்றி முரசை" -72.**

என்று வீரமுழக்கம் இடுகிறார்.

சாதிக் கொடுமைகளை, சமயப் புரட்சிகளை, மூடக்கோட்பாடுகளைச் சாடி எறிகின்றார்.

**"எங்கள் பகைவர் எங்கோ மறைந்தார்**

**இங்குள்ள தமிழர்கள் ஒன்றாதல் கண்டே" – 73.**

என்ற பாடலில் அவருடைய இன உணர்வு வெளிப்படுகிறது.

**உறுதி! உறுதி! ஒன்றே சமூகம்**

**என்று எண்ணார்க்கு இறுதி! இறுதி!**

என்று சமுதாய உணர்வுமிக்கப் பாடலையும் பாடியுள்ளார்.

இவர் என்னரும் தமிழ்நாட்டின் கண் எல்லாருங் கல்வி கற்க வேண்டும் என்று விழைகிறார்.

**“எல்லோர்க்கும் எல்லாம் என்று இருப்பதான**

**இடம் நோக்கி நடக்கின்றது இந்த வையம்**

**கல்லாரைக் காணுங்கால் கல்வி நல்காக்**

**கசடர்க்குத் தூக்குமரம் அங்கே உண்டாம்”**

என்று எச்சரிக்கை செய்கிறார்.

**“எளிமையினால் ஒருதமிழன்**

**படிப்பில்லை என்றால் இங்குள்ள**

**எல்லாரும் நாணிடவும் வேண்டும்”.**

என்று பாடி, கல்வி கற்றுக்கொடுக்க வேண்டியதன் இன்றியமையாமையை உணர்த்துகின்றார்.

**கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை:**

இவருடைய கவிதைகளில் மென்மையும், பெண்மையும் தவழும். நகைச்சுவை ததும்பும். வெண்பாவில் இவர் மிகச்சிறந்த கவிதைகளை இயற்றினார்.

இவருடைய ‘மலரும் மாலையும்’ என்னும் நூலில் கோவில் வழிபாடு என்ற பகுதியில் இறைவனைப் பற்றிக் கூறுகிறார்.

**“கண்ணுக்கினிய கண்டு – மனத்தைக்**

**காட்டில் அலையவிட்டு,**

**பண்ணிடும் பூசையாலே – தோழி!**

**பயனொன் றில்லையடி!**

**உள்ளத்தில் உள்ளானடி – அதுநீ**

**உணர வெண்டுமடி!**

**உள்ளத்தில் காண்பாயெனில் - கோவில்**

**உள்ளேயும் காண்பாயடி!” -74.**

என்ற பாடலில் இறைவன் நம் உள்ளத்தில் உள்ளான் என்ற கருத்தினைப் பதிய வைக்கிறார்.

## 1.8 தமிழ் இலக்கியத்தில் உளவியல் பார்வை

சமுதாய வழக்கங்கள் உள்ளத்தின் இயல்பை மிகுதியாகப் பாதிக்கும், ஆற்றல் கொண்டவை. நெடுங்காலமாகச் சமுதாயத்தில் பழக்கமாக இருப்பவை மனத்தை அழுத்தமாகப் பற்றிப் பிடித்து இயற்கையான மன உணர்வு போன்று விளக்கும். கணவனைத் தெய்வமாகக் கொண்டாடும் சமுதாயத்தில் தெய்வம் தொழாள் கொழுநன் தொழுதெழுவாள் என்பது சமுதாயக் கொள்கையின் இறுக்கத்தில் ஏற்பட்ட மனவியல்பாகும்.

சங்க இலக்கியத்தில் விளக்கப்படும் களவு, கற்பு ஆகிய ஒழுக்க நெறிகள் சமுதாயக் கட்டுப்பாடு உளவியல் சிந்தனையை எடுத்துக்காட்டுகிறது. பல்வேறு உணர்ச்சி நிலையிலும், மிகையுணர்வு அடிப்படையிலும், சமுதாயக் கட்டுப்பாடு அடிப்படையிலும் தோன்றும் கருத்துக்கள் இலக்கியங்களில் படைக்கப்படுகின்றன. சங்ககாலம் முதல் இன்று வரை தோன்றியுள்ள அனைத்து இலக்கியங்களிலும் இவ்வியல்புகள் பொதிந்துள்ளன.

சங்க இலக்கியங்களில் அகப்பாடல்களும், புறப்பாடல்களும் உளவியல் நோக்கில் காணத் தக்கனவாகும், அற இலக்கியங்களும் பக்தி இலக்கியங்களும், காப்பியங்களும், சிற்றிலக்கியங்களும் இக்காலக் கவிதைகளும், புதினங்களும், சிறுகதைகளும் உளவியல் அணுகுமுறையில் கண்டு ஆராயத்தக்கனவாகும். இவை அனைத்தும் படைப்பாளி உளவியல், படைப்பாக்க உளவியல், இலக்கியம் அளிக்கும் உளவியல் அவையினர் உளவியல் போன்ற நிலைகளில் அணுகத்தக்கன.

**பண்பாடு பொருள் விளக்கம்:**

பண்பாடு என்னும் சொல் மனிதனோடு மட்டுமே தொடர்புடையது. இதுவே உயிரினங்களிடமிருந்து மனிதனைப் பிரித்துக் காட்டுகிறது. பண்பாடு என்றால் என்ன? என்பதற்குக் குரோபரும் குளுக்கானும் Culturea, critical revieue of concepts

and definitions என்னும் நூலில் 160-க்கும் மேற்பட்ட வரையறைகளைத் தொகுத்துக் காட்டுகிறார்.

ஒவ்வொரு பண்பாட்டிலும் இடம் பெற்றுள்ள கருத்துக்களின் தன்மைகளை,

1. பொருள்
2. அறிதல்
3. நெறியியல்

என்று மூன்று வகைப்படும்.

**பொருள்:**

மக்கள் தம்பயன்பாட்டிற்காக ஏற்படுத்திக் கொள்ளும் அனைத்துப் பொருள்களும் பொருள்சார் கூறுகள் எனப்படும். இயந்திரங்கள், வீட்டுப் பொருள்கள் அழகுப் பொருள்கள், தொழிற்கருவிகள், கட்டிடங்கள், சாலைகள், போக்குவரத்துச்சாதனங்கள் போன்றவை இதில் இடங்கும்.

**அறிதல்:**

ஒரு பண்பாட்டின் அறிதல்சார் கூறுகள் என்பவை அப்பண்பாட்டைச் சேர்ந்தவர்களின் அறிதிறன் கூறுகளைக் குறிக்கும். அதாவது உலகத்தைப் பற்றியும், உலகிலுள்ள ஒவ்வொரு பொருளைப் பற்றியும் வாழ்க்கையைப் பற்றியும் மக்கள் என்னென்ன அறிந்து கொண்டுள்ளனர் என்பதைக் குறிக்கும். இத்தன்மை அறிதல்சார் கூறுகள் எனப்படும்.

**நெறியியல்:**

மக்கள் வாழ்வை நெறிப்படுத்தும் கூறுகள் நெறியியல் கூறுகளாகும், இவற்றுள் விழுமியங்கள் நெறிமுறைகள் விதிகள் குடிவழக்குகள் வழக்கடிபாடுகள் அளிப்புகள் வழக்கங்கள் பழக்கங்கள் என்பன குறிப்பிடத்தக்கனவாகும்.

**விருப்பங்கள்:**

ஒரு பண்பாட்டைச் சேர்ந்தோரின் வாழ்வியலுக்கும் செயல்களுக்கும் நடத்தை முறைக்கும் எவை எவை அவசியமென்று கருதப்படுகிறதோ அவையே அப்பண்

பாட்டினரின் விருப்பங்கள் ஆகும். தூய்மை, நேர்மை, அமைதி, சமத்துவம் ஆகிய பண்புகள் விருப்பத்தைச் சார்ந்தது.

**நெறிமுறைகள்:**

மக்களின் நடத்தை முறைகளையும், செயற்பாடுகளையும் முறைப்படுத்தக் கூடிய விதிகள் நெறிமுறைகள் எனப்படும். ஆசிரியர்கள் வரும்போது மாணவர்கள் எழுந்து நிற்க வேண்டும் என்பது ஒழுக்க நெறிமுறை.

**சட்டம்:**

மக்களின் நடத்தை முறைகளை ஒழுங்குபடுத்த ஓர் அதிகார அமைப்புடைய நிறுவனத்தால் அரசு ஏற்படுத்தப்பட்ட விதிமுறைகள் சட்டங்களாகும். இவற்றை மீறும்போதோ அலட்சியப்படுத்தும் போதோ நிலைமையைக் கட்டுக்குள் கொண்டு வர, காவல்படையையும், நீதிமன்றமும் பயன்படுத்தப்படுகின்றன.

**பொதுவான நடை முறைகள்:**

ஒரு சமுதாயத்தில் அனைவரிடமும் காணக் கூடிய பொதுவான நடத்தை முறைகள் ‘குடிவழக்கு’ எனப்படும். பற்களைத் தினந்தோறும் தேய்த்தல் குடி வழக்கின் ஒரு பகுதியாகும்.

ஒவ்வொரு சமுதாயத்திலும் நல்லவை, கெட்டவை என்னும் நம்பிக்கையோடு தொடர்புடைய கருத்துகளும் செயல்களும் மரபுகள் எனப்படும்.

**மரபுகள்:**

ஒரு சமுதாயத்தில் தொன்று தொட்டுக் கடைபிடித்து ஒழுகும் பழக்கங்கள் மரபுகள் எனப்படும்.

**பழக்கங்கள்:**

ஒரு சமுதாயத்தில் மக்கள் கடைப்பிடித்து ஒழுகும் சில தனித்த ஒழுகலாறுகள் பழக்கங்கள் எனப்படும். நெறியியல்சார் கூறுகளாகக் கூறப்பட்ட அனைத்தையும் மக்கள் சமுதாயவயமாக்கம் மூலமாகவும் பண்பாட்டுவயமாக்கம்

மூலமாகவும் பிறந்தது முதல் சமுதாயத்தில் ஓர் உறுப்பினராக இருந்து பயின்று கொள்கின்றனர்.

**திருமுருக கிருபானந்த வாரியார் காட்டும் வாழ்க்கை நெறி:**

கடவுள் நம்மையும் படைத்திருக்கிறார்; விலங்கினங்களையும் படைத்திருக்கிறார். நமக்குப் பசி, தாகம், காமம் எல்லாம் உண்டு; அவை விலங்கினங்களுக்கும் உண்டு. மனிதர்களைப் போல விலங்களும் இனவிருத்தி செய்கின்றன. ஆனால் இவை எல்லாவற்றிலும் கட்டுப்பாடு, தர்மம் ஆகிய நெறிகள் மனிதனுக்கு மட்டுமே உண்டு. விலங்குகளுக்கு இல்லை. அவற்றுக்கு மான வெட்கம் இல்லை. நன்றி உணர்வும் பெரிதும் இல்லை. மானம் உள்ளவன்; அதனால் ஆடை அணிகிறான். அவன் மனம் உள்ளவன்; அதனால் நன்றி உணர்வுடன் செயல்படுகிறான். இந்த உடம்பையும் கருவிகரணங்களையும் கொடுத்தவன் இறைவன். கண்ணைக் கொடுத்த இறைவன், அதைக் காக்கும் இமைகளையும் கொடுத்திருக்கிறான்.

ருசிக்காக நாவைக் கொடுத்த கடவுள் அதற்கு உதவ பற்களையும் கொடுத்து இருக்கிறான். நுகருவதற்கு நாசியைக் கொடுத்த பகவான் அதை சரிவர பயன்படுத்த பாதுகாப்பாக ரோமங்களையும் அளித்திருக்கிறார். எல்லாவற்றையும் விடச் சிறந்த முறையில் நாவைப் படைத்திருக்கிறார். உடம்பில் உள்ள எல்லாப் பகுதிகட்கும் நரம்புகள் இருந்து அதைக் கெட்டியாக வைத்துள்ளன.

நாவில் மட்டும் அவை மிகச் சூட்சுமமாக அமைந்து வளைந்து கொடுக்கச் செய்கின்றன. இடையறாமல் பேசுவதற்கு உதவியாக நாவை மென்மையாகப் படைத்தான். நாம் நன்றி உள்ளவர்களானால் அந்த நாவினால் இறைவனைப் பாடித்துதிக்க வேண்டும்.

**“கடவுள் வணக்கத்தைக் காலைக் கடனாகவும்,**

**மாலைக் கடனாகவும் கொள்ள வேண்டும்”. 75.**

கொடுத்த கடனைத் திரும்பக் கொடாமல் இருப்பது பெரும்பாவம். இறைவனை நாம் வணங்குவது அப்படி ஒரு கடனைத் திரும்பச் செலுத்துவது பொன்றது. இந்நெறியை ‘என் கடன் பணி செய்து கிடப்பதே’ என்று அப்பர் பெருமான் எடுத்துக் காட்டுகிறார்.

தொகுப்புரை:

1.1 விழுமியங்கள்- பொருள் விளக்கவுரை – பொய்கூறாமை, அறம் உணர்தல், பொறை, முதலியன.

1.2 நிலைபேறுடைய விழுமியங்கள் - தனிமனித ஒழுக்கம் - அன்பு, நல்லறிவு, சான்றாண்மை, பெருமை பண்புடைமை – நாணுடைமை முதலிய தனிமனித ஒழுக்கங்கள் முதலியன.

1.3 சங்க இலக்கியங்களில் மனித விழுமியங்கள் - கலித்தொகை, புறநானூறு முதலிய நூல்களில் இடம் பெற்றுள்ள மனித விழுமியங்கள் - போர் நெறிகளைக் கடைபிடித்தல்- கொடைமடம்படுதல், நிலையாமை போன்றவை.

1.4 சமயங்கள் காட்டும் மனித விழுமியங்கள் - சமயங்களின் நோக்கமத் மக்களுக்கு உணர்த்தும் நெறி முறைகள், மனித குலம் ஒன்று என்பது பொது நியதி போன்ற கருத்துகள்.

1.5 நீதி நூல்களில் மனித விழுமியங்கள் - நாலடியார், திருக்குறள், ஆசாரக் கோவை போன்ற நூல்களில் இடம்பெற்றுள்ள மேன்மக்களின் நற்குணங்கள் - பெரியோர்களை மதித்தல் - அடிப்படைப் பண்புகள் - ஈகை, கூடா ஒழுக்கம், மனதால் நினைக்கக் கூடாதவை – பொய் பேசுதல், திருடுதல், கோள் சொல்லுதல் பொறாமைப்படுதல் போன்ற கருத்துகள்.

1.6 காப்பியங்களில் மனித விழுமியங்கள் - சிலம்பு – மணிமேகலை, சீவசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி முதலிய நூல்களில் கூறப்பட்டுள்ள அறம் தழுவிய கருத்துக்கள்.

1.7 இக்கால இலக்கியங்களில் மனித விழமியங்கள் - இராமலிங்க அடிகள், பாரதியார், பாரதிதாசன், கவிமணி போன்றோரின் பாடல்களில் இடம்பெற்றுள்ள மனிதநேயக் கருத்துக்கள் போன்ற கருத்துகள் இடம் பெறுகின்றன.

## அடிக் குறிப்புகள்

1. கழகத் தமிழ் அகராதி ப - 60
2. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - மரபியல் 94
3. திருக்குறள் - குறள் எண் - 422
4. திருக்குறள் - குறள் எண் - 983
5. திருக்குறள் - குறள் எண் - 972
6. திருக்குறள் - குறள் எண் - 996
7. ஔவையார் - நல்வழி – பாடல் எண் -9
8. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -250
9. கடுவெளிச்சித்தர் - எடுப்புப்பாடல்
10. ஔவையார் -நல்வழி – பாடல் எண்- 11
11. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -211
12. தொல்காப்பியம்-நூற்பா எண் -363
13. தொல்காப்பியம்-நூற்பா எண் -1038
14. திருகுறள் குறள் எண்: 501
15. திருகுறள் குறள் எண்: 754
16. இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் 30:167
17. சீத்தலைச்சாத்தனார் - மணிமேகலை : 30:175-178
18. பவணந்தி முனிவர் - நன்னூல் - நூற்பா எண் 10
19. நல்லந்துவனார் - கலித்தொகை – பாடல் எண் 133
20. நெட்டிமையார் - புறநானூறு – பாடல் எண் - 9
21. பொன்முடியார் - புறநானூறு – பாடல் எண் - 312
22. பெருஞ்சித்திரனார் - புறநானூறு – பாடல் எண் -163
23. பரணர் - புறநானூறு – பாடல் எண் - 142
24. கபிலர் - புறநானூறு – பாடல் எண் - 200
25. மோசிகீரனார் - புறநானூறு – பாடல் எண் -186
26. கணியன் பூங்குன்றனார் புறநானூறு – பாடல் எண் -192
27. நரிவெரூ உத்தலையார் - புறநானூறு – பாடல் எண் -195

28. பொதுத்தமிழ் மேல்நிலை – முதலாமாண்டு –பக்-127
29. திருநாவுக்கரசர் தேவாரம் ரு ங சா
30. பொதுத்தமிழ் மேல்நிலை – முதலாமாண்டு –பக்-126
31. பொதுத்தமிழ் மேல்நிலை – முதலாமாண்டு –பக்-88
32. பொதுத்தமிழ் மேல்நிலை – முதலாமாண்டு –பக்-126
33. பொதுத்தமிழ் மேல்நிலை – முதலாமாண்டு –பக்-114
34. பொதுத்தமிழ் மேல்நிலை – முதலாமாண்டு –பக்-127
35. பொதுத்தமிழ் மேல்நிலை – முதலாமாண்டு –பக்-89
36. பொதுத்தமிழ் மேல்நிலை – முதலாமாண்டு –பக்-127
37. சமணமுனிவர்கள் -நாலடியார் - பாடல் எண் - 141
38. சமணமுனிவர்கள் -நாலடியார் - பாடல் எண் - 153
39. சமணமுனிவர்கள் -நாலடியார் - பாடல் எண் - 157
40. சமணமுனிவர்கள் -நாலடியார் - பாடல் எண் - 162
41. சமணமுனிவர்கள் -நாலடியார் - பாடல் எண் - 175
42. திருக்குறள் - குறள் எண் -82
43. திருக்குறள் - குறள் எண் -101
44. திருக்குறள் - குறள் எண் -221
45. திருக்குறள் - குறள் எண் -241
46. திருக்குறள் - குறள் எண் -321
47. திருக்குறள் - குறள் எண் -1051
48. பெருவாயின் முள்ளியார் - ஆசாரக்கோவை – பாடல் -1
49. பெருவாயின் முள்ளியார் - ஆசாரக்கோவை – பாடல் -4
50. பெருவாயின் முள்ளியார் - ஆசாரக்கோவை – பாடல் -21
51. பெருவாயின் முள்ளியார் - ஆசாரக்கோவை – பாடல் -37
52. பெருவாயின் முள்ளியார் - ஆசாரக்கோவை – பாடல் -38
53. இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம் - பாடல் - 55
54. இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம் - பாடல்
55. இளங்கோவடிகள் - சிலப்பதிகாரம் - பாடல் - 175
56. சீத்தலைச் சாத்தனார் - மணிமேகலை – 25 : 228

57. சீத்தலைச் சாத்தனார் - மணிமேகலை – 22 : (135:138)
58. திருத்தக்கதேவர் - சிவகசிந்தாமணி – பாடல் எண் 2626
59. வளையாபதி பாடல்
60. வளையாபதி பாடல்
61. நாதகுத்தனார் - குண்டலகேசி பாடல்
62. இராமலிங்க அடியகள் - திருவருட்பா – ஆறாம் திருமுறை
63. திருவருட்பா – உரைநடைப்பகுதி – பக்கம் -420, பக்கம் - 99.
64. ம.பொ.சி – வள்ளலார் கண்ட ஒருமைப்பாடு – பக்- 428
65. திருக்குறள் - குறள் எண் - 259
66. திருக்குறள் - குறள் எண் - 251
67. திருவருட்பா – ஆறாம் திருமுறை – பக் 90
68. பாரதியார் கவிதைகள் - பக் -56
69. பாரதியார் கவிதைகள் - பக் -56
70. பாரதியார் கவிதைகள் - பக் -26
71. பாரதிதாசன் கவிதைகள் - பக் -19
72. பாரதிதாசன் கவிதைகள் - சஞ்சிவிபர்வதத்தின் சாரல் - பக் -234
73. பாரதிதாசன் கவிதைகள் - பக் -102
74. கவிமணி – கோவில் வழிபாடு – மலரும் மாலையும்
75. ஆர்.ராகவன் -தினமலர் -பக்திமலர் - மார்ச் 15.2007.

# இயல் - இரண்டு

## சித்தர்கள் - ஒரு பார்வை

2.1 சித்தர் - பெயர்க் காரணம்

2.2 எட்டுவகையான சித்துக்கள்

2.3 சித்தர்களின் ஆற்றல்கள்

2.4 சித்தர்கள் தரும் அறிவுரை

2.5 சித்தர்களின் தன்மைகள்

2.6 குதம்பைச் சித்தர் கூறும் சித்தர்களின் தன்மைகள்

2.7 போகர் கூறும் சித்தர்களின் தன்மைகள்

2.8 திருமூலர் காட்டும் சித்தர் இயல்புகள்

2.9 சிவவாக்கியர் கூறும் சித்தர்களின் இயல்புகள்

2.10 பதினெண் சித்தர்கள்

2.11 சித்தர்களின் வரலாறு.

# இயல் - இரண்டு

# சித்தர்கள் - ஒரு பார்வை

கடவுளைக் காண முயல்பவர்களைப் பக்தர்கள் என்றும், கண்டு தெளிந்தவர்களை சித்தர்கள் என்றும் கூறுவர்.

## 2.1 சித்தர்- பெயர்க் காரணம்:

சித்தர் என்ற சொல் 'சித்' என்னும் வடமொழிச் சொல்லில் இருந்து வந்ததாகும். சித்து என்பதன் பொருள் எல்லாவற்றையும் உணர்ந்து கொள்ளும் தன்மை என்பதாகும். இலக்கிய இலக்கணங்கள் இச்சித்தர்களை நிறைமொழி மாந்தர் என்ற சொல்லில் குறிப்பிடுகின்றன.

**"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த**
**மறைமொழி தானே மந்திரம் என்ப" -1.**

எனத் தொல்காப்பியத்திலும்,

**"நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**

**மறைமொழி காட்டி வீடும்"** -2.

எனத் திருக்குறளிலும் கூறப்படுவதிலிருந்து இ∴து புலனாகும்.

**"பத்தர் சித்தர் பலரேத்தும் பரமன் பழைய னூர்மேய**

**அத்தனாலங் காடன்ற னடிமைத்திறமே யன்பாகிச்**

**சித்தர்சித்தம் வைத்தபுகழ்ச் சிறுவ னூர னொண்டமிழ்கள்**

**பத்தும்பாடி யாடுவார் பரமனடியே பணிவாரே" - 3**

என்கிறது சுந்தரர் தேவாரம்.

சமண மதத்திலும், பௌத்த மதத்திலும் இவர்களை 'சாரணர்' என்று அழைத்திருப்பதாகத் தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழக வாழ்வியற் களஞ்சியம் என்ற நூல் கூறுகிறது.

## 2.2 எட்டு வகையான சித்துக்கள்:

சித்தர்கள் எல்லா சமயத்திற்கும் அப்பாற்பட்டவர்கள். மனிதர்கள் பார்க்க முடியாததைப் பார்க்கின்ற செய்ய முடியாததைச் செய்கின்ற, தெரியாததை உணர்த்துகின்ற அதீத சக்திகளை உடையவர்கள். இவர்கள் அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்தும் என்னும் எட்டு வகையான சித்துக்களைச் செய்ய வல்லவர்கள்.

அணிமா என்பது மிக நுண்ணிய உயிர்கள் தோறும் பரம அணுவாகச் சென்று இறைவன் தங்கும் நுண்மையே ஆகும்.

மகிமா என்பது மண் தத்துவம் முதல்சிவதத்துவம் ஈறாக உள்ள முப்பத்தாறு தத்துவங்களின் உள்ளும் புறமும் நீக்கமற நிறைந்திருக்கும் பெருமையே ஆகும்.

இலகிமா என்பது மேருமலையின் பாரம் போன்று கணத்திருக்கும் யோகியானவா் தம் சித்தியால் இலேசான பரமாணுவைப் போன்று சலனமற்று இருப்பதாகும்.

கரிமா என்பது அதே யோகியானவர் தாம் இலேசான நிலையை மாற்றி மேரு மலையின் பாரம் போன்று கனத்திருப்பதாகும்.

பிரார்த்தி என்பது பாதாளத்தில் உள்ள ஒருவன் பிரம்மலோகம் புகுவதும், மீண்டும் பிரம்மலோகத்திலிருந்து பாதாளம் புகுவதும் ஆகும்.

பிராகாமியம் என்பது வேறு உடலில் புகுவதும், விண்ணில் சஞ்சரித்தாலும், தான் இருந்த இடத்தில் இருந்தபடியே விரும்பும் இன்பங்களைத் தான் இருக்கும் இடத்திற்கு வரச்செய்யும் சித்தியாகும்.

ஈசத்துவம் என்பது சிவபெருமானைப் போன்றே ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையும் தன் இச்சைப்படி இயற்றும் சித்தி கைவரப்பெறுவதாகும். நவக்கிரகங்களும் தன் ஏவல் கேட்க வீற்றிருக்கும் உயா்ந்த தவநிலையாகும்.

வசித்துவம் என்பது வசியப்படுத்தும் கலை ஆகும். அவுணா், பறவை, விலங்கு, பூதம், மனிதா் முதலிய பல்வகை உயிா்களும், இந்திரன் முதலான திக்குப்பாலகா் எண் மரையும் தன் வசமாகச் செய்துகொள்ளும் சித்தி ஆகும்.

சிவயோகியா்கள் இச்சித்திகளைச் செய்து காட்டமாட்டார்கள். ஆனால், இவற்றைச் செய்ய வல்லவா்கள் ஆவா். அவா்களுடன் இச்சித்திகள் அவா்களை நிழல்போன்று தொடா்வன ஆகும். இந்த அட்டமாசித்திகளால் சிவயோகியா்களின் பெருமை உலகம் முழுவதும் பரவியது.

## 2.3 சித்தர்களின் ஆற்றல்கள்:

சித்தர்கள் அனைவரும் அனுபவ நிலையில் ஒத்த கருத்துடையவர்கள். ஆயினும் கடைப்பிடிக்கும் நெறிகளாலும், வெளிப்படுத்தும் முறைமையாலும் வேறுவேறான முறையைக் கையாண்டவர்கள்.

அண்ட வெளியில் ஏற்படும் சலனங்கள், சப்தங்கள் ஆகியவற்றை மந்திரங்களாகப் பிரித்துத் தரக்கூடிய ஆற்றல் படைத்தவர்கள். இறைவனை இடைவிடாது தியானித்துத் தம் சித்தத்தை அடக்கி அகக்கண்ணால் இறைவனைக் கண்டு உணர்ந்து தம் ஆத்ம சக்தியினால் செயற்கரிய செயல்களைச் செய்பவர்கள்.

உயிரும் இறைவனும் ஒன்றிய நிலையில் இருக்கும் யோக சமாதியை விரும்பி உணர்ந்தவர்கள்.

மௌனத்தையே பிரதானமாகக் கொண்டு சித்தியடைந்தவர்கள்.

இவர்கள் இரசவாதக் கலையை அறிந்தவர்கள் மண்ணைப் பொன்னாக்குவார்கள்; கல்லைக் கற்கண்டாக்குவார்கள், தகரத்தைத் தங்கமாக்குவார்கள் இரும்பை இளகச் செய்வார்கள். எட்டு வகைப் பேராற்றல்களைக் கொண்டு மனிதர்கள் நல்வழியில் செல்ல வழி காட்டுவார்கள்.

### சித்தர்களின் சிறப்புகள்:

சித்தர்கள் என்றும் அழியாத உடம்பைப் பெற்றவர்கள். கூடுவிட்டுக் கூடு பாயும் கலையைக் கற்றவர்கள். மூச்சடக்கி உடலை இலகுவாக்கி பலநாடுகளைக் கண்டு மீண்டும் தன் பழைய உடலை அடைந்த அதிசய மகான்கள். முக்கால் நிகழ்வுகளைப் பற்றி அறியும் தன்மைப் பெற்றவர்கள். நினைத்த வடிவத்தை எடுக்கும் வல்லமை பெற்றவர்கள். நீரிலும், நெருப்பிலும், வானிலும் நடக்கும் ஆற்றல் பெற்றவர்கள். உலகம் முழுவதையும் தன் வயப்படுத்தும் வசித்துவம் உடையவர்கள். இயற்கைக்கு மாறான அற்புதங்களை எல்லாம் நிகழ்த்தக் கூடியவர்கள். இவர்கள் சிவானுபூதி பெற்றவர்கள். சிவத்துடன் கூடினதால் பிறப்பு இறப்பு அற்று என்றும் எப்போதும் ஒன்றுபோல் இருப்பவர்கள். கடவுளைக்

காணமுடியும் என்று கருதி கண்டு அவரை அறிந்து தெளிந்து சித்தி அடைந்தவர்கள்.

இறைவனே சித்தாக வந்து சித்துக்கள் நடத்தியதாகக் கலம்பக இலக்கியங்கள் கூறுகின்றன.

**“அந்தமிலா வன்னமிலா வாடையிலா நல்குரவுற்**

**றழனைத் தீர்காள்**

**சுந்தரனா னிழற்காவ லூரிருக்கு மருஞ்சித்தன்**

**றொழிலைக் கேண்மி**

**னிந்ததின்வெண் கலமூன்றுஞ் செம்பொன்றுங் கஞ்சத்தா**

**ளிரண்டுஞ் சேர்த்திச்**

**சந்ததம்வெண் பித்தளையு மிரும்புஞ்செம் பொன்னாக்கித்**

**தருவான் கண்டீர்” -4.**

திருக்காவனூரில் உள்ள இரசவாதி ஒருவன் தன் சித்து தொழில் திறமைக்குக் காரணம் திருக்காவலூரில் உள்ள அடைக்கல அன்னை என்றும் மிக வறியவர்களிடம் இருக்கும் பித்தளையைக் கூட அடைக்கல அன்னையின் பாதத்தில் வைத்து பொன்னாக மாற்றுவேன் என்றும் கூறுகிறான் என்று சித்து தொழில் பற்றி வீரமாமுனிவர் தன் ‘திருக்காவலூர் கலம்பகத்தில்’ கூறுகிறார்.

**சித்தர்களின் வாழ்நாள்:**

மண்ணில் அடங்கியும், இறைவனுடன் இரண்டறக் கலந்தும் அழியாத வரம் பெற்ற இந்த சித்தர்கள் ஞானிகளாய் கால ஓட்டத்தில் நம்முடன் வாழ்ந்து வருகின்றனர்.

யுகம் தாண்டி வாழ்ந்த இவர்களின் உடல் பாதுகாப்பு இரகசியங்கள் பலவற்றை அறிந்திருந்தார்கள். இவர்கள் பல ஆண்டுகள் வாழ்ந்ததற்கான ஆதாரங்கள் உள்ளன. யோகக் கலையின் ஆதார புருஷர்கள் இந்த சித்தர்கள்.

திருமூலர் 3000 ஆண்டுகள் வாழ்ந்திருக்கிறார் என்றால் அதில் சந்தேகமில்லை. உடல் அழியாமல் இருக்கும் வழியைத் தான் தெரிந்து அழியாமல் காப்பாற்றினதாகவும் சித்தர்கள் கூறுகிறார்கள்.

**சித்தர்களின் பண்புகள்:**

துறவு பூண்டு, காடு மேடெங்கிலும் சுற்றித் திரிந்து உலகியல் விதிகளைப் புறந்தள்ளி நிற்பவர் சிலர். பித்தராகவும், சித்தராகவும் மற்றவர் தன்னை இழித்துப் பேசவும் ஏசவும், மறைந்தும் தோன்றியும் வாழ்பவர் சிலர். தாம் கண்ட அனுபவங்களை மனிதருக்கு விளக்க நூல்கள் எழுதி உபதேசித்தவர் சிலர். வாய்மூடி மௌனமாய் அமைதியுடன் காணப்படுபவர் சிலர்.

பிறர் தம்மை இகழ்ந்தாலும், புகழ்ந்தாலும், அறிந்தாலும் அறியாவிட்டாலும், தாம் நிறைவுடனும், அமைதியுடனும், ஆத்ம திருப்தியுடனும், வாழ்க்கையை நடத்துபவர்கள் இந்த சித்தர்கள்.

## 2.4 சித்தர்கள் தரும் அறிவுரை:

மக்கள் சிந்தித்துப் பார்க்கும் வகையில் அவர்களுடைய எண்ணத்தை தூண்டி அவர்களைப் படிப்படியாக உயர்நிலைக்கு அழைத்துச் செல்லும் வகையில் ஞானவான்களின் அறிவுரைகள் அமைந்திருக்கின்றன.

**தெளிவு தரும் பேரொளி:**

இறைவனின் திருவடியை வானத்திலோ, மண்ணிலோ, மண்ணுக்குக் கீழேயோ தேடவேண்டியதில்லை. வேதங்களில் தேடினால் அகப்படாது. வேறெங்கு தேடியும் காணமுடியாது. அது நம் மூலாதாரத்தில் உள்ளது. நம் உடம்பிற்குள் நாம் காண்பது கடவுளாகிய பேரொளியைத்தான். அந்த ஒளியை நாம் காண்கிறபோது இதுவரை காணாததையெல்லாம் காண்போம். அந்த ஒளியில் எல்லாம் தெளிவாகும் என்று சொல்கிறவர்கள் தான் சித்தர்கள்.

**தியானம்:**

அலைபாயும் மனத்தை நிலைப்படுத்துவது தியானம். நெறிதவறும் அபாய நிலைகளிலிருந்து நம்மைத் தடுத்து நிறுத்துவது தியானம். மனம் தியானத்திற்குரிய பக்குவத்தை அடைந்தால் தான் தியானம் பயனளிக்கும் என்கிறார்கள் சித்தர்கள்.

**மனிதனும் தெய்வமாகலாம்**

மனிதன் கடவுளாக முடியுமா? நம்முடைய மனம் கேள்வி கேட்கும். நம்ப மறுக்கும். ஆனால் சிவவாக்கியருக்கு அதில் எவ்வித சந்தேகமும் இல்லை. 'நான் சிவன் மீதும், அன்னை பராசக்தி மீதும். ஆணை வைத்துச் சொல்கிறேன். இது சாத்தியம் என்கிறார் சிவவாக்கியர்.

மூலாதாரத்தில் குண்டலினி திறந்தால் நீயும் நானும் நீண்ட காலம் வாழலாம். ஏழு உலகங்களுக்கும் சென்று வரலாம் என்று பொருள்பட அவர் பாடுகிறார்.

**"இருக்கலாம் இருக்கலாம் அவனியில் இருக்கலாம்**

**அரிக்கு மால்பி ரமனு மகண்டமேழ கற்றலாம்**

**கருக்கொ ளாத குழியிலே காலி லாத கண்ணிலே**

**நெருப்பறை திறந்த பின்பு நீயும் நானு மீசனே!" – 5.**

மூலாதாரத்தில் மூச்சைக் கொண்டு சென்று மெல்ல மெல்ல சுழுமுனை நாடிக்கு (மூலாதாரத்திலிருந்து உச்சிதுவாரம் வரை நிற்கும் நாடி. இதனை நடுநாடி என்பர்). ஏற்றினால் முதியவரும் இளமை பெற்று வாழமுடியும் என்று சித்தர்கள் கூறுகிறார்கள்.

**முக்திக்கு வழி:**

முக்தி என்றால் மோட்சம். நீங்கள் உலகப்பற்றை விட்டால்தான் இறைவனைப் பற்றிக் கொள்வது சாத்தியம் என்கிறார் குதம்பைச் சித்தர்.

ஐம்புலன்களையும் அடக்கிமவுனமாய் இருப்பவர்க்கே முக்தி கிடைக்கும். எந்த ஒரு உறவும் இன்றி ஒளி செய்யும் சோதியைப் பற்றிக்கொண்டால் முக்தி உண்டு. கிளைவிட்டு கிளைதாவும் குரங்குபோல் ஒரு நிலையில் நில்லாது அலைகின்ற மனம் வசப்படுமாயின் முக்தி வந்து சேரும் என்பது குதம்பைச் சித்தரின் கருத்து.

தாய்க்கு சமமானது கடவுள். அது தாயைப் போலவே நம்மிடம் அளவற்ற அன்பும் பரிவும் அக்கறையும் கொண்டது. தாயிடம் சேர்ந்திருப்பதில் குழந்தைக்கு

எந்தச்சிரமமும் இருக்காது என்கிறார். என்றும் நீங்காதிருக்கும் பரம்பொருளை ஒரு பொழுதும் நீங்காது உங்கள் மனம் சிந்தித்திருக்குமெனில் முக்திநிலை வாய்க்கும்.

**"நித்திய வத்துவை நீங்காது நாடினால்**

**முத்திதான் சித்திக்குமே குதம்பாய்**

**முக்திதான் சித்திக்குமே" -6**

என்கிறார் குதம்பைச்சித்தர்.

**யோகம்:**

யோகம் என்ற சொல்லுக்கு இணைப்பு என்று பொருள். சிலருக்கு இது கடவுளைக் காண்பதற்கான சாதனமாகப் பயன்படுகிறது. பலருக்கு வாழ்க்கையின் தேவை இல்லது குறிக்கோளை அடைவதற்கான சாதனமாகப் பயன்படுகிறது.

**யோகத்தின் பயன்கள்:**

யோகத்தில் மனம் பக்குவமடையும். அது அலைகிற மனத்தை ஓரிடத்தில் நிலைப்படுத்தும். நிலைப்பட்ட மனம் அமைதி காணும். உடல், மன ஆரோக்கியம் வளரும். எதையும் தெளிவாக அறியவும், எதிலும் உறுதியாக இருக்கவும். இது உதவும்.

**யோகி:**

யோகி மனம் தளர்ந்தால் தொடர்ந்து யோகம் பழக இயலாது. திட சித்தம் முக்கியம் தடைகள் கடந்து யோகத்தைத் தொடர விடா முயற்சி வேண்டும். யோகி தர்க்கம் பண்ணுவதில்லை. அதனால் அவனுடைய மனம் குழப்பத்திற்குள்ளாவதும் இல்லை.

யோகி விஷயங்களை ஊடுருவிப் பார்க்கிறான். உண்மை கண்டு தெளிகிறான். விசயங்களை மேலோட்டமாய்ப் பார்க்கிற பழக்கம் அவனிடம் கிடையாது. அவன் கண்டதிலெல்லாம் மனத்தை ஒடவிடவும் மாட்டான். உயரிய நோக்கம் கொண்டவன். அந்த நோக்கம் அவனுடைய மூளையில் மட்டுமல்ல. உடம்பின் ஒவ்வோர் இரத்த நாளத்திலும் பரவி நிற்கும்.

சராசரி மனிதர்கள் ஆலயம் சென்று வழிபடுவார்கள். சித்தர்கள் தங்கள் தேகத்தை ஆலயமாக்கி அதில் தெய்வ பக்தியைச் செலுத்தி வந்தார்கள். இது ஒரு மாறுபட்ட வழிபாட்டுமுறை.

சித்தர்கள் தங்கள் உடம்பை உணர்ச்சியற்ற உயிர்ப்பு கூட இல்லாத நிலைக்கு உள்ளாக்கிக் கொண்டு அந்த நிலையிலேயே இறைவனுடன் கலந்து நின்று ஈடற்ற இன்பத்தை அனுபவித்தவர்கள்.

**யோக சமாதி:**

சித்தர்கள் யோகசமாதியை விரும்பி ஏற்றவர்கள் சித்தர்களின் மார்க்கம் யோகமார்க்கம். யோகசமாதி என்ற நிலைக்குள்ளே அகலிடம், ஆன்ம ஒளி, ஆன்மசக்தி எல்லாம் உண்டு. இந்த யோக சமாதியை உகந்து கூடுகிறவர்ளே சித்தர்கள் என்று கூறுகிறார் திருமூலர்.

**"யோக சமாதியின் உள்ளே அகலிடம்**
**யோக சமாதியின் உள்ளே உள ஒளி**
**யோக சமாதியின் உள்ளே உள சக்தி**
**யோக சமாதி உகந்தவர் சித்தரே" – 7.**

இவ்வாறு யோகமார்க்கங்களை யெல்லாம் சித்தர்கள் கூறுகிறார்கள்.

**வெட்டவெளி இரகசியம்:**

நாலுபக்கம் கடல். நடுவே சலனமற்றதாய் தீவு. அந்தத் தீவாய் இருப்பவர்கள் சித்தர்கள் அவர்கள் சந்தை பேட்டையில் இருந்தாலும் ஏகாந்தமாகவே இருப்பார்கள். நாமோ தனியறையில் தியானிக்க அமர்ந்தாலும் நம்முடைய சிந்தனை என்னவோ அந்த நிமிடத்திற்குள் உலகத்தையே ஒரு சுற்று சுற்றி வந்துவிடுகிறது. ஆயிரம் பேர் நடுவே இருந்தபோதும் சித்தர்களால் தங்களைத் தனியாக உணரமுடிகிறது. எதனுடனும் தொடர்பின்றி தனித்திருப்பது அவர்களுக்குச் சாத்தியம். நாமும் அவர்கள் சொல்வதைப் பின்பற்றினால் நம்மாலும் முடியும்.

**“சொல்லும்புளியம் பழத்தின் ஓடு போலவே**

**சுற்றத்திருந்தாலு மவர் தொந்தங்களற்று**

**நில்லுமனமே நீ பர நின் மலத்திலே**

**நின் துணைதான் வெறும் பாழென் றாடு பாம்பே!” -8.**

புளியமரத்தில் புளி காய்த்துத் தொங்கும். ஒரு புளியம் பழத்தை உடைத்துப் பாருங்கள். பழம் ஓட்டுக்குள் இருந்தாலும் ஓட்டுடன் ஒட்டாது விடுபட்டிருக்கும். நீ சுற்றத்தாருடன் இருந்தாலும் அவர்களுடன் தொடர்பற்றவனாய் இரு மனமே! என்கிறார் சித்தர். ‘வெட்டவெளியைத் துணையாகக் கொண்டு மாசற்றவனாயிரு’ - இதுதான் இரகசியம்.

**இறந்தவர்களை உயிர்ப்பிக்கும் கொள்கை:**

‘‘இருளில் கரியமில வாயு உண்டாகின்றது. இந்தக் கரியமில வாயுவை உண்டு தாவரங்கள் வெளிவிடும். பிராண வாயுவை அசையும் உயிரினங்கள் உட்கொள்ளுகின்றன.

இதனாலேயே இருளில் வசிக்கக்கூடாது. ஆன்ம ஒளியை நாடவேண்டும் என்றெல்லாம் சைவம் கூறும். அதனாலேயே இல்லத்தில் தீபம் வைத்து இருளைப் போக்கி, ஆனந்தமயமாய் நித்திரையில்லாதிருந்தால் ஆயுள் விருத்தியாகும். இஃது சாத்தியனுக்குக் கூறப்பட்டது.

ஆனால், சாதகனோ ஒருவாறு நித்திரை செய்தல் வேண்டும். வீட்டில் இருளில்லாது எங்கும் பிரகாசமாய் தீபம் வைத்தால் மேற்படி இருள் இந்தத் தீபத்தில் அடங்கும். அதுபோல் ஜீவதீபமாகிய நாம் வசிக்கும் இல்லத்தில் பிரகாசம் இல்லாவிட்டால் மேற்படி இருள் ஜீவப் பிரகாசமாகிய நம்மிடத்தில் சேர்ந்து நட்டத்தை அளிக்கும். அதுபோல் ஆன்ம வாசமாகிய இந்த உடலும் அருள் பிரகாசமில்லாமல் மருள் இருள் சேர்ந்ததால் பிராண நட்டம் வந்தடையும். ஆகவே, நம் நெற்றியிலிருக்கும் நடுக்கண்ணை யோகம், ஞானம் இவைகளால் திறக்க வேண்டும்.

இப்படித் திறக்கப் பெற்றுக்கொண்டவனுக்கு எல்லா அனுபவங்களும் பட்டப் பகல் போல் தெரியும். அவன்தான் சுத்த ஞானி. மேற்படி ஞானி தயவோடு ஒரு பிரேதத்தைப் பார்த்த மாத்திரத்தில் பிரேதம் உயிர் பெற்றெழும், மேற்படி ஞானிக்கு ஆன்மாக்களின் அபக்குவ பரிபாகத்தால் 'சினம் தோன்றினாலும், உடனே அந்த ஜீவன் சாம்பலாகி விடுவான்.

அரிய துறவு பூண்ட பட்டினத்தார் பெரும் பித்தர் போலத் திரிதல் நம்குலப் பெருமைக்கு இழுக்கு என்று கருதிய தமக்கையார், நஞ்சூட்டிய அப்பத்தை இவருக்கு உண்ணத்தர, அஃதுணர்ந்த அடிகள் 'தன்வினை தன்னை சுடும், ஒட்டப்பம் வீட்டைச் சுடும்' என்று கூறி அதனை வீட்டின் கூரையில் வைக்க அவ்வீடு தீப்பற்றியது.

பத்திரகிரியாரைக் கள்வனென்று கழுவேற்றும்பொழுது கழுமரம் பற்றி எரிந்ததும், இறைவனின் திருவருள் பெற்ற திருஞானசம்பந்தர் பூம்பாவையின் சாம்பலை மிண்டும் பெண்ணாக்கியதும், திருமருகலின் கண் அரவு தீண்டி இறந்த வணிகன் உடலை உயிர்ப்பித்ததும். அப்பர் அரவு தீண்டிய சிறுவனை வாலிபனாக மீட்டதும், சுந்தரர் முதலை உண்ட சிறுவனை வாலிபனாக மீட்டதும், கழுவெளிச் சித்தர் இரும்பை இறைவனைக் கோபித்துப் பிளந்து விழச் செய்ததும் இத்தகைய மரணம் மாற்றும் சக்தியாலேயே ஆகும்.''

**மரணமிலாப் பெருவாழ்வு:**

மரணமிலாப் பெருவாழ்வு பற்றி மிகுதியாகப் பாடியவர் வடலூர் வள்ளல் இராமலிங்க அடிகள்.

**"நினைந்து நினைந்து ஊற்றெழும் கண்ணீரதனால் உடம்பு**

**நனைந்து நனைந்து அருளமு தேநன்னிதியே ஞான**

**நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று**

**வனைந்து வனைந்து ஏத்துதும் நாம் வம்மின் உலகியலீர்**

**மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்**

**புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியம் சொல்கின்றேன்**

**பொற்சபையில் சிற்சபையில் புகும் தருணம் இதுவே" -9.**

என வள்ளலார் உரைத்துள்ளார்.

**"சாகாதவனே சன்மார்க்கி,**

**"என்மார்க்கம் இறப்பொழிக்கும் சன்மார்க்கம்தானே"**

என்றும் இராமலிங்க அடிகள் பலஇடங்களில் குறித்துள்ளார்.

இவ்வாறு, பதியாக இறைவனிடம் பசுவாகிய உயிர் மும்மலங்களும் செயலற்ற – ஒடுங்கிய நிலையில் பரம்பொருளாகிய அருட்பெருஞ்சோதியின் திருவடி நிழலில் அத்துவிதக் கலப்பாய் ஒன்றி, ஜோதியுள் ஜோதியாக – பிரகாசத்துள் பிரகாசமாக பிரமத்துள் பிரமமாக, தான் அதுவாதலே மரணமிலாப் பெருவாழ்வு" ஆகும் -10.

**"விண் கடந்து நின்ற சோதி**

**மேலை வாசலைத் திறந்து**

**கண்களித்த உள்ளுளே**

**கலந்து புக்கிருந்தபின்**

**மண்பிறந்த மாயமும்**

**மயக்கமும் மறந்து போய்**

**எண்கலந்து ஈசனோடு**

**இசைந்திருப்ப துண்மையே"** – 11.

விண்ணிலே விரிந்து பரந்துள்ள ஆகாயத்தையும், கடந்து நின்று சுடர் வீசுகின்ற சோதி வடிவான இறைவன் தன்னுடைய மேலான மேன்மை மிக்க வாசலை நமக்காகத் திறந்து நம்மை வந்தடைந்து நம்முடைய அகக்கண்கள்

மலர்ந்து திறந்து களிப்பபடையும்படி நமது உயிரோடு உயிராய்க் கலந்து அகத்தினுள் புகுந்து அங்கேயே வீற்றிருந்த பின்னர், இந்த மண்ணுலகில் நாம் பிறந்து வந்தோமே அதற்கேற்ற மாயையின் தன்மையும் மற்றும் அதைச் சார்ந்த மயக்க அறிவும் யாவும் மறந்துபோய் விட்டன. ஆகவே இனிமேல் நாம் எண் கலந்த ஞான சொரூபியான ஈசனுடன் இசைந்திருப்பதே உண்மையான இன்பநிலையாகும்.

**“இறைகளோடு இசைந்த இன்பம்**

**இன்பத் தோடியைந்த வாழ்வு’**

என்கிறது சுந்தரர் தேவாரம்.

**சித்தர்களின் கொள்கையில் பெண்மை:**

சித்தர்கள் பெண்மையைத் தாய்மை வடிவமாகக் கண்டனர். ஆன்மா குடியிருக்க ஒரு வீடாக இருந்து கருவளர ஒரு இடமும் தந்து ஈன்றெடுத்தவர்கள். தாய்மைப்பெறு வாய்ப்பது பெண்மைக்குத்தான் என உணர்ந்து தாயாகப் போற்றியவர்கள் சித்தர்கள்.

சித்தராய் - ஞானியராய் விளங்கிய பட்டினத்தார் அவருடைய தாயார் இறந்து சுடலைக்கு எடுத்துச் செல்லும் பொழுது அலறித் துடிக்கிறார்.

**“ஐயிரண்டு திங்களா அங்கமெலா நொந்துபெற்று**

**பையலென்ற போதே பரிந்தெடுத்து – செய்விரு**

**கைப்புறத்தி லேந்திக் கனகமுலை தந்தாளை**

**எப்பிறப்பிற் காண்பேன் இனி” -12.**

என்று ஏங்குகிறார்.

**“முந்தித் தவங்கிடந்து முந்நூறு நாட்சுமந்தே**

**அந்திபக லாய்ச்சிவனை யாதரித்து – தொந்தி**

**சரியச் சுமந்து பெற்ற தாயார் தமக்கோ**

**எரியத் தழல் மூட்டுவேன்" -13.**

என்று துடிக்கிறார்.

**"வட்டிலிலும் தொட்டிலிலும் மார்மேலும் தோள்மேலும்**

**கட்டிலிலும் வைத்தென்னைக் காதலித்து – முட்டச்**

**சிறகிலிட்டுக் காப்பாற்றிச் சீராட்டும் தாய்க்கோ**

**விறகிலிட்டுத் தீ மூட்டுவேன்" -14.**

எனக் கண்ணீர் வடிக்கிறார்.

நொந்து சுமந்து பெற்று நோவால் ஏந்தி தந்து வளர்த்தெடுத்து அழாமல் அந்திபகலாய்க் கையிலே கொண்டு என்னைக் காப்பாற்றிய தாய்க்கா நான் தீமூட்டுவேன்'' என்று குமுறுகிறார்.

**"அரிசியோ நானிடுவேன் ஆத்தாள் தனக்கு**

**வரிசையிட்டுப் பார்த்துமகி ழாமல் - உருசியுள்ள**

**தேனே அமிர்தமே செல்வத் திரவிய பூ**

**மானே எனவழைத்த வாய்க்கு".** 15.

''வாய்க்கு அரிசி இடச் சொல்கின்றீர்களே! எந்த வாய்க்கு? திகட்டாத தேனே! அமிர்தமே! செல்வத் திரவியப் பூமானே என்றழைத்த வாய்க்கா? அல்லது மேன்பட்டால் வலிக்கு மென்று மெல்ல முகம்மேல் முகம் வைத்து முத்தாடி என்றன் மகனே என்று பாசமுடன் அழைத்த வாய்க்கா? அரிசி இடச் சொல்கிறீர்கள்? என்று கண்ணீருடன் கேட்கிறார்.

வேகுதே! உயிர்க்குருவி பறந்து செல்லாமல் காப்பாற்றி வளர்த்த அன்னையின் உடல் தீயினில் வெந்து பொடி சாம்பலாகுதே பாவி! நான் பார்த்துக் கொண்டேயிருக்கிறேனே! என்று பாசத்தால் துடிதுடிக்கிறார் பட்டினத்தார்.

இப்படி தாய்மைக்காக! பாசவலைக்காக! அழுத சித்தர்கள் தம்மைப் பந்த வலையில் விழாமலிருக்க இறைவனை கெஞ்சோ கெஞ்சு என்று கெஞ்சுகிறார்கள்.

பிறவிகளில் இது இன்றியமையாத இறுதிப்பிறவி என்பதைச் சித்தர்கள் அறிவார்கள். ஆனால் பிறவிகள் தோறும் தொடர்ந்து வந்த பெண்மை தம்மை முக்தியடைய விடாமல் சதிசெய்து விடுமோ என்று அஞ்சினார்கள். அதனால் தமக்கு ஒரு கூற்றுவம் போல் வந்த பெண்மையை அவர்கள் பழிக்கவும் தலைப்பட்டார்கள்.

**"கருதாதே மங்கையர்கள் காம வலைக் கேங்கி**

**உருகாதே நெஞ்சே"**

**"பாலிருக்கும் தோல்தனத்தைப் பாராதே மங்கையர்கள்**

**காலிடுக்கை நத்திக் கரையாதே-கோலெடுத்து**

**வீர மறலி வருமுன் வினை யறுக்கும்**

**பாரவழி யின்னருளைப் பார்".**

**"நித்தம் நித்தம் பொய்யடா பேசும் புவியின்**

**முடமாதரை விட்டுய்யடா வுய்யடா வுய்"**

**"வாய்நாறு மூழல் மயிர்சிக்கு நாறிடும் மையிடுங்கண்**

**பீநாறும் அங்கம் பிணவெடி நாறும் பெருங்குழிவாய்ச்**

**சீநாறும் யோனி அழனாறும் இந்திரியச் சேறுசிந்திப்**

**பாய்நாறும் மங்கையர்க் கோவிங்ஙனே மனம் பற்றியதே" -16.**

எனப் பட்டினத்தார் பெண்மையால் தம் தவ வலிமை கெட்டுவிடுமோ என்றஞ்சுகிறார்.

**"பேய்போற் றிரிந்து பிணம்போற் கிடந்து பெண்ணைத்**

**தாய்போ னினைத்துத் தவமுடிப்ப தெக்காலம்"**

**“கால்காட்டிக் கைகாட்டிக் கண்கள் முகங்காட்டி**

**மால்காட்டு மங்கையரை மறந்திருப்ப தெக்காலம்”**

**“பெண்ணினல்லா ராசை பிரமையினைவட் டொழிந்து**

**கண்ணிரண்ட மூடிக் கலந்திருப்ப தெக்காலம்” 17.**

என்றெல்லாம் பத்திரகிரியாரும் புலம்புகிறார்.

இவ்வாறு, சில இடங்களில் பெண்மையைப் போற்றியும், சில இடங்களில் பெண்மையைப் பழித்தும் சித்தர்கள் பாடியிருக்கிறார்கள்.

**2.5 சித்தர்களின் தன்மைகள்:**

சித்தி பெற்றவர்களே சித்தர்கள். சித்தர்கள் கண்ட முடிவே சித்தாந்தம் பேரின்பத்தைக் கண்ட சித்தர்கள் அந்த இன்பத்தை வையகமும் பெற வேண்டும் என்ற கருணையில் தோய்ந்து ஞானத்தை வழங்கியவர்கள் சித்தர்கள்

சித்தர்கள் பலகாலும் ஞானநிஷ்டையிலிருந்து எதைச் சொல்ல வேண்டுமோ, எவ்வாறு சொல்ல வேண்டுமோ அதை மட்டுமே சொல்பவர்கள் சித்தர்கள். அவர்கள் நோக்கம் மக்கள் நிலையான இன்பத்தைப் பெறச் செய்வதாகும்.

சித்தர்கள் என்போர் உண்மையில் வாழ்ந்து காட்டியவர்கள் அவர்களின் வாழ்விலக்கணம் யாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறட்டும் என்பதுதான்.

சித்தர்களும் முனிவர்களும் தொடாத துறைகளே இல்லை எனலாம். அவர்கள் மதம், தத்துவம், பகுத்தறிவு, மருத்துவம், சோதிடம், மாந்திரீகம், மூச்சுக்கலை, இறைமை, ஆன்மநேய ஒருமைப்பாடு, சமரச சன்மார்க்கம், யோகம், ரசவாதம், கூடுவிட்டு கூடுபாயும் கலை என எல்லாவற்றையும் தொட்டுத் துலங்கச் செய்தவர்கள்.

**2.6 குதம்பைச் சித்தர் கூறும் சித்தர்களின் தன்மைகள்:**

**“காணாமற் கண்டு கருத்தோடு இருப்போர்க்கு**

**வீணாசை ஏதுக்கடி – குதம்பாய்**

**வீணாசை ஏதுக்கடி?” -18.**

ஒன்றைப் பார்க்காமலேயே தன் ஞானக் கண்ணால் கண்டு நம்பிக்கையுடன், ஆசையற்று இருப்பவர்க்கு வீணான ஆசை (பற்று) எதற்காக? காதணி அணிந்தவளே! வீணாசை எதற்கு?

காணாமல் கண்டு கருத்தோடு இருப்பவர்கள் சித்தர்கள். இவர்கள் தங்களது யோக வல்லமையால் மூன்றாவது கண்ணான நெற்றிக்கண் (ஆக்ஞா) திறக்கப்படுகிறது. முக்கண்ணனான சிவபெருமானை ஒத்தவர் ஆகின்றனர். இரண்டு கண்களால் பார்க்காதவற்றையும் இருந்த இடத்திலிருந்தே மூன்றாவது கண்ணான ஞானக் கண்ணால் பார்க்கின்றனர்.

நாம் சென்று பாக்க முடியாத இடங்களையும் சித்தர்கள் இருந்த இடத்திலிருந்தே காண்பார்கள். அப்படிக்காண உதவுவது அவர்களுடைய ஞானக்கண். இப்படிப்பட்டவர்களே ‘காணாமல் கண்டு கருத்தோடு இருப்பவர்கள்’ என்கிறார் குதம்பைச் சித்தர்.

**“வஞ்சகம் அற்று வழிதன்னைக் கண்டோர்க்கு**

**சஞ்சலம் ஏதுக்கடி – குதம்பாய்**

**சஞ்சலம் ஏதுக்கடி? – 19.**

பிறரை வஞ்சித்து வாழவேண்டும் என்ற எண்ணம் இல்லாமல் வாழும் வழிமுறைகளை அறிந்தவர் நெஞ்சில் சஞ்சலமோ குழப்பமோ நெறிமுறை மீதும் சலனமோ ஏற்படாது.

வஞ்சனை அற்று வழிதன்னைக் கண்டவர்கள் ஞானிகள். வஞ்சகம் என்பது ஏமாற்றுதல், சூதும், வாதும் ஆகும். இப்படிப்பட்டச் செயலைச் செய்யாதவர்கள் ஞானிகள்.

சஞ்சலம் என்பது நிலையற்ற தன்மையுடன் இருப்பதாகும். அதனால் இனம் புரியாத கவலை இருந்து கொண்டே இருக்கும். மனத்தின் இயல்பே சஞ்சலத்துடன் இருப்பதுதான். அதனால் பயத்துடன் வந்ததும், வரப்போவதுமான துன்பங்களையே எண்ணி எண்ணி செக்குமாடு சுற்றிச் சுற்றி வருவதுபோல சென்றதையே எண்ணி எண்ணி வேதனைப்படுவது தான் மனத்தின் இயல்பு.

காரணமே இல்லாமல் கவலையால் மனம் உழலும் போது இப்பொழுது கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறாயே காரணம் என்ன? என்று கேட்டால், அதன் காரணம் அதற்குத் தெரியாது. இப்படியே மனம் தன் இயல்பான கவலையைப் படும்போதெல்லாம் காரணம் கேட்டு வந்தீர்களானால் தேவையில்லாமல் கவலைப்படும் இயல்பை மனம் மாற்றிக்கொண்டு நிலைத்துச் செயல்பட ஆரம்பித்து சஞ்சலத்தன்மையிலிருந்து விடுபடும். நாம் நிம்மதியாக இருப்போம். எனவே, மனத்திடம் ஏன் எப்படி எதற்கு என்ற கேள்விகளை கேட்டுக்கொண்டே இரு. மனம் அடங்கும்.

நம் வாழ்வில் நல்லதும் கெட்டதும், பிறப்பு, இறப்பு, வாழ்வு தாழ்வு என்ற இருமைகள் இருந்து கொண்டேதான் இருக்கும். இதுதான் உலகின் இயற்கை. இதை உணர்ந்தவர்கள் சஞ்சலமின்றி வாழ்பவர்கள் ஞானிகள்.

**“ஆதாரமான அடிமுடி கண்டோர்க்கு**

**வாதாட்டம் ஏதுக்கடி – குதம்பாய்**

**வாதாட்டம் ஏதுக்கடி?” -20.**

ஆதாரமான அடி அதாவது மூலாதாரம் மற்றும் தலையின் மத்திய பாகம் (சிதாகாசம்) ஆகியவற்றைக் கண்ட சித்தர்களுக்கு வாதாட்டம் (சொற்போர்) எதற்கு என்கிறார். அதாவது சித்தர்களுக்கு எதிரிகள் இல்லை என்கிறார்.

**‘‘நித்திரை கெட்டு நினைவோடு இருப்போர்க்கு**

**முத்திரை ஏதுக்கடி – குதம்பாய்**

**முத்திரை ஏதுக்கடி?” -21.**

**முத்திரை:**

பைரவி - மூக்குமுனை

சாம்பவி – நெற்றிக்கண்

கேசர் - உச்சிக்கண்

நித்திரை கெட்டு நினைவோடு இருப்பவர்கள் ஞானிகள். இவர்கள் விழிப்புடன் இருப்பார்கள். ஆனால் உறங்குவார்கள். இதுவே தூங்காமல் தூங்கி சுகம் பெறுவதாகும். யோகிகள் மூக்கு முனையில் கவனத்தைச் செலுத்தி மனத்தை ஒரே நிலையில் நிற்கச் செய்பவர்கள்.

## 2.7 போகர் கூறும் சித்தர்களின் தன்மைகள்:

**"தானான காயத்தை நிறுத்த வெண்டும்;**

**சதாகாலம் சுக்கிலத்தைக் கட்ட வெண்டும்;**

**வேனான மும்மலத்தை யறுக்க வேண்டும்;**

**வெளியான சிதாபாசம் நீக்க வேண்டும்;**

**பானாக முச்சுடரை யறுக்க வேண்டும்;**

**பாழான தூலமதை வெறுக்க வேண்டும்;**

**மானான பராபரியை நிர்த்தனம் செய்து**

**மாநிலத்தில் வாழ்பவனே சித்தனாமே" – 22.**

காம, வெகுளி, மயக்கமடக்கி, உடம்பைப் பேணி, சமயத்தில் உடலின் மீதுள்ள பற்றை நீக்கி சிவனைச் சிந்தித்து வாழ்பவனே சித்தன் என்கிறார் போகர்.

## 2.8 திருமூலர் காட்டும் சித்தர் இயல்புகள்:

சித்தர்கள் எனப்படும் யோகியர் மறுமையில் நுகரப்படும் சிவவுலகினை, இம்மையிலேயே இருக்குமிடத்தைக் கண்டு, ஒடுங்கும் தூமாயையும் திருவருளால் தம்முள் கண்ட தனித்தவத்தவராவார்கள் இச்சித்தர்கள்.

இவர்கள் சிவத்துடன் கூடினமையால் பிறப்பு இறப்பு அற்றுச் சிறப்புற்று என்றும் ஒன்று போலிருப்பர். சித்தர்கள் மலமற்றவர்கள் என்றும் அழியா விழுபேற்றினர். இவர்கள் விழுப்பேறானது ஏணிப்படிபோல் அமைந்த அருஞ்சைவர் தத்துவம். மண் முதல்சிவம் ஈறாகச் சொல்லப்படும் முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்து நின்றவர்கள்.

தூக்கம் என்பது மறை கடந்த இன்பத்துயில் இத்துயிலிலேயே சிவலோகத்தைச் சித்தர்கள் கண்டனர்.

**"தூங்கிக்கண் டார்சிவ லோகமும் தம் உள்ளே**
**தூங்கிக்கண் டார்சிவ யோகமுந் தம் உள்ளே**
**தூங்கிக்கண் டார்சிவ போகமுந் தம் உள்ளே**
**தூங்கிக்கண் டார் நிலை சொல்வதெவ் வாறே"** -23.

தூங்காமல் தூங்கி அறிதுயிலாய் நிற்கும் மெய்யன்பர்கள் சிவவுலகமும் தம்முள்ளே சிவனையும் கண்டனர். அவன் படைப்பாம் உலகினைத் தன் முனைப்பாக நினைக்காத காரணத்தாலும் கண்டனர். உலகை காரிய வடிவமாக்கும் மாயை என்று மட்டும் கருதாமல் அதனைப் படைத்தருளிய வினைமுதற் காரணனெனப்படும், சிவபெருமானின் திருவருட் பண்புகளையும் தெருண்டு தம்முள் கண்டனர். அதுபோலவே சிவனை விட்டு பிரியாது ஒட்டி நிற்கும் சிவபோகமும் தம்முள்ளே கண்டனர். அதுபோலவே சிவயோகமாகிய திருவடி சேர்வினைத் தம்முள்ளே கொண்டனர் என்கிறார் திருமூலர்.

**2.9 சிவவாக்கியர் கூறும் சித்தர்களின் இயல்புகள்:**

**"உண்மையானது ஒன்றை தொன்றை,**
**உற்று நோக்கி உம்முளே,**
**வண்மையான வாசி உண்டு**
**வாழ்த்தி ஏத்த வல்லீரேல்,**
**தன்மை பெற்றிருக்கலாம்**
**தவமும் வந்து நேரிடும்**
**கன்மதன்ம மாகுமீசர்**
**காட்சி தானும் காணுமே"** -24.

பரம் பொருள் உண்மையே வடிவானது. ஈடு இணையற்றது. மிகத் தொன்மை வாய்ந்தது. முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளானது. அதை நீங்கள் உங்கள் உள்ளக்கண் கொண்டு, தீர்க்கமாக உற்று நோக்கினால் வளமை மிக்க வாசி உண்டென்று உணர்வீர்கள். அந்த வாசி எனப்படும் மூச்சுப்பயிற்சியை நெஞ்சார உண்டு அந்த வாசி மூலம் சிவத்தையடையும் நெறி கண்டு அவனை வாழ்த்தி ஏத்த வல்லவர்கட்கு சிவயோகியாகும் தகுதி வந்து விடும்.

**“ஆதியான தொன்றுமே**

**அனேக அனேக ரூபமாய்**

**பேத பேதமாய் எழுந்து**

**சா்வசிவன் ஆனபின்**

**ஆதியோடு கூடி மீண்டு**

**எழுந்து சன்மமானபின்**

**சோதியான ஞானியாரும்;**

**சுத்தமாய் இருப்பரே”-25.**

ஆதிமூலமான அந்த ஒன்றேதான் அனேக அனேக உருவமாகி இந்த உலகிலும் அண்ட பேரண்டங்களிலும் பரிணமித்து விளங்குகின்றது. இதுவே பேதமாயும் எல்லா உயிரினங்களாயும் தோன்றி விளங்குகின்றது. இவ்வாறு எல்லா உயிரினங்களாகவும் ஆன பின்னா் ஆதிமூலமான சிவனோடு கூடி மீண்டும் அடுத்த பிறவியில் பிறப்பெடுத்தப் பின்னால் சோதிவடிவான ஞானியா்கள் பரிசுத்த ஆன்மாவாகி விளங்குவாா்கள்.

## 2.10 பதினெண் சித்தா்கள்:

சித்தா்கள் எத்தனைபோ் என்பதில் ஒரு முடிந்த முடிவு ஏற்படவில்லை.

சபரி ஐயனின் படிகள் பதினெட்டு. பாரதப்போா் நடந்த நாட்கள் பதினெட்டு, மேற்கணக்கு நூல்கள் பதினெட்டு கலம்பக உறுப்புகள் பதினெட்டு என்று கூறுவதைப்போல் சித்தா்களும் பதினெட்டு போ் என்று கூறுகிறாா்கள். சித்தா்களின் எண்ணிக்கைப் பற்றிப் பலா் பல்வெறு எண்ணிக்கையில் கூறுகிறாா்கள்.

### (அ) சௌமிய சாகரம்:

அகத்தியரின் ‘சௌமிய சாகரம் 1200’ என்ற நூல் சித்தா்கள் 18 போ் என்று கூறுகிறது.

அவா்கள்

1. சட்டை முனி
2. சுந்தர மூர்த்தி
3. பிரம்ப ரிஷி
4. சொரூபானந்தர்
5. ஜோதிமுனி
6. வேதவியாசர்
7. பராசரர்
8. திருமூலர்
9. போகர்
10. கொங்கணர்
11. புண்ணாக்கீசர்
12. மச்சமுனி
13. கருவூரார்
14. இடைக்காடர்
15. அழுகண்ணர்
16. தொழுகண்ணர்
17. ஏமநாட்டு சித்தர்
18. கோரக்கர்

**ஆ) தஞ்சை சரஸ்வதி மகால் நூலகப் படம்**

தஞ்சை சரஸ்வதி மகால் நூலகப் படத்தில் கூறப்படும் 18 சித்தர்கள்.

1. திருமூலர்
2. இராமதேவர்
3. கும்பமுனி (அகத்தியர்)
4. இடைக்காடர்
5. தன்வந்திரி
6. வான்மீகர்
7. கமலமுனி
8. போகர்
9. மச்சமுனி

10. கொங்கணர்
11. பதஞ்சலி
12. நந்திதேவர்
13. சட்டைமுனி
14. சுந்தரானந்தர்
15. குதம்பைச்சித்தர்
16. கருவூரார்
17. கோரக்கர்
18. பாம்பாட்டிச்சித்தர்

**இ) அபிதான சிந்தாமணி**

“அபிதான சிந்தாமணி நூலில் கூறப்பட்டுள்ள பதினெட்டு சித்தர்கள்.

1. அகத்தியர்
2. போகர்
3. கோரக்கர்
4. கயிலாசநாதர்
5. சட்டைமுனி
6. திருமூலர்
7. நந்தி
8. கடன்கண்ணர்
9. கொங்கணர்
10. மச்சமுனி
11. வாசமுனி
12. கூர்மமுனி
13. கமல முனி
14. இடைக்காடர்
15. புண்ணாக்கீசர்
16. சுந்தரானந்தர்
17. உரோம முனி
18. பிரம முனி

**ஈ) சித்த வைத்திய நூல்கள்:**

சித்த வைத்திய நூல்களில் கூறப்பட்டுள்ள பதினெட்டு சித்தர்கள்

1. கோதமர் (கௌதமர்)
2. அகத்தியர்
3. சங்கரர்
4. வைரவன்
5. மார்க்கண்டர்
6. வான்மீகர்
7. உரோமர்
8. புசுண்டர்
9. சட்டைமுனி
10. நந்தீசர்
11. திருமூலர்
12. காலாங்கி
13. மச்சமுனி
14. புலத்தியர்
15. கருவூரார்
16. கொங்கணர்
17. போகர்
18. புலிப்பாணி

**(உ) தாயுமானவர் குறிப்பிடும் சித்தர்கள்**

தாயுமானவர் ஒன்பது சித்தர்கள் (நவநாதர்கள்) பற்றிக் குறிப்பிடுகிறார்.

1. சத்தியநாதர்
2. சதோக நாதர்
3. வெகுளி நாதர்
4. மதங்க நாதர்
5. மச்சேந்திர நாதர்
6. கடேந்திர நாதர்

7. ஆதிநாதர்
8. ஆநாதி நாதர்
9. கோரக்க நாதர்

**ஊ) திருமூலர் கூறும் சித்தர்கள்:**

திருமூலர் எட்டு சித்தர்கள் பற்றிக் குறிப்பிடுகிறார். இவர்கள் நந்தியின் அருள் பெற்றவர்கள்.

1. சனகர்
2. சனந்தனர்
3. சனாதனர்
4. சனற்குமாரர்
5. சிவயோக மாமுனி
6. பதஞ்சலி
7. வியாக்கிரபாதர்
8. திருமூலர்

**எ) பொதுவாகக் கூறப்படும் 18 சித்தர்கள்**

1. நந்தி
2. அகத்தியர்
3. திருமூலர்
4. புண்ணாக்கீசர்
5. புலத்தியர்
6. பூனைக்கண்ணர்
7. இடைக்காடர்
8. போகர்
9. புலிக்கையீசர்

10. கருவூரார்

11. கொங்கணர்

12. காலங்கிநாதர்

13. அழுகண்ணர்

14. அகப்பேய்ச்சித்தர்

15. பாம்பாட்டிச்சித்தர்

16. தேரையர்

17. குதம்பைச்சித்தர்

18. சட்டைசித்தர்

சித்தர்களின் எண்ணிக்கை (அ முதல் எ வரை) சிவமயம் கண்ட சித்தர்கள் என்ற நூலிலிருந்து எடுத்தாளப்பட்டது.

**2.11 சித்தர்களின் வரலாறு**

**முதல் சித்தர் -சோமசுந்தரக் கடவுள்**

மதுரையின் சோமசுந்தரக்கடவுளே முதல் சித்தனாக அவதரித்தார் என்று திருவிளையாடல் புராணம் கூறுகிறது. இன்று நாம் அறியும் சித்தர்கள் பலருண்டு. இவரே மூலகுருவாய் இருந்து ஞானத்தை போதித்திருக்கிறார்.

இவருடைய சித்து விளையாட்டுகள் பலப்பல. இந்திரஜாலம் போல் திடீரென்று பார்வையிலிருந்து மறைந்து போவார். தூரத்திலுள்ள மலையே அருகில் வரச் செய்வார். அருகில் உள்ள மலையை தூரத்தே செல்லச் செய்வர். முதியோரை இளைஞராக்குவார். ஆணைப் பெண்ணாக்குவார்; பெண்ணை ஆணாக்குவார். சிறியவர்களை முதியவர்களாக்குவார். மலடியை மகப்பேறு உடையவளாக்குவார். கூன், குருடு, செவிடு, ஊமை, முடம் போன்றவற்றை பலரும் அறிய நீக்குவார்.

எட்டி மரத்தில் சுவை மிகுந்த பழங்களைப் பழுக்கச் செய்வார். நீர் வற்றிய ஆற்றில் நீர் பெருக்கெடுத்து ஓடச் செய்வார். மீண்டும் அந்த ஆற்றைவற்றச்

செய்வார். இரவில் சூரியன் தோன்றச் செய்வார். இவ்வாறு அளவில்லாத சித்து வித்தைகளை சோம சுந்தராக் கடவுள் சித்தர் வடிவில் திருவிளையாடல்களைப் புரிந்து கொண்டிருந்தார் என்று திருவிளையாடல் புராணம் கூறுகிறது.

**2. அகத்தியர்:**

இவர் மார்கழி மாதம் ஆயில்யம் நட்சத்திரத்தில் பிறந்தவர். இவர் ஜீவசமாதி அடைந்த இடம் திருவனந்தபுரம்.

சித்தர், சித்த வைத்தியம் என்று சொன்னாலே உடனே நம் அனைவரின் நினைவுக்கு வருபவர் அகத்தியர்தான். சித்த வைத்தியத்திற்கு இவர் செய்திருக்கும் பணி எண்ணிலடங்காதது.

கும்பமுனி என்று போற்றப்படும் இந்த சித்தர்பிரான் உத்தம சித்தர்களின் தலைமைப் பீடாதிபதி. கருவிலே தோன்றாமல் இறைவன் அருளால் கலசக்கும்பத்தில் சுயம்பிரகாசமாய்த் தோன்றியவர்.

இன்றைய மிகப்பெரும் மருத்துவ வல்லுநர்களும் விடைகாண முடியாமல் தவிக்கும் பல நோய்களுக்கும் மருத்துவம் குறித்த சந்தேகங்களுக்கும் சில ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தெள்ளத் தெளிவாக விளக்கம் கொடுத்திருப்பவர்.

புலவர்கள் கூற்றுப்படி தமிழுக்கு முதன் முதலாக இலக்கணம் வகுத்தவரே அகத்தியர் தான் என்கின்றனர். அந்த இலக்கணம் ‘அகத்தியம்’ என்ற பெயருடன் விளங்குகிறது. அகத்தியர் பெயரால் பல்வேறு மருந்துகளும், வைத்திய நூல்களும் உள்ளன.

**இயற்றிய நூல்கள்:**

1. அகத்தியர் இருபத்தோராயிரம்
2. அகத்தியர் பன்னிரெண்டாயிரம்
3. அகத்தியர் பரிபூரணம்
4. அகத்தியர் நயணநிதி
5. அகத்தியர் குணபாடம்
6. அகத்தியர் அழகுகலை
7. அகத்தியர் ஞானம்
8. குருளாடி 235

போன்ற இன்னும் பலநூல்களையும் அகத்தியர் படைத்துள்ளார்.

### 3. போகர்:

வைகாசி மாதம் பரணி விண்மினில் பிறந்தவர். இவர் ஜீவசமாதி அடைந்த இடம் - பழனி.

நவநாதர்களில் ஒருவர். புலிப்பாணியின் குரு. சீன தேசத்தைச் சேர்ந்தவர். இவருடைய பெற்றோர் சீனாவில் பெண்களுக்குத் துணிகள் வெளுத்துக் கொடுத்துப் பிழைத்து வந்தனர் என்று 'அகஸ்தியர் 12000' என்ற நூலில் காணப்படுகிறது.

**"சித்தான சித்துமுனி போக நாதன்**
**சிறந்த பதினெண் பேரில் உயர்ந்த சீலன்**
**கத்தீதனென்னும் காலங்கி நாதர் சீடன்**
**கனமான சீன பதிக் குதந்த பாலன்**
**முத்தான அதிசயங்கள் யாவற்றுந் தான்**
**மூவுலகில் கண்டறிந்த முதல்வன் சித்தன்**
**நித்தமுமே மாசிலாக் கடவுள் தன்னை**
**நீணிலத்தில் மறவாத போகர் தானே" – 26.**

சீனநாட்டிலுள்ள வெள்ளைநிற மக்கள் போகரின் மரபைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்படுகிறது. இவர் திருமூலர் காலத்தைச் சேர்ந்தவர் என்றும் தமிழ்நாட்டிலிருந்து சீனாவிற்குச் சென்று அங்கே பலகாலம் வாழ்ந்திருந்து பல நூல்களை இயற்றி மீண்டும் தமிழ்நாட்டிற்கு வந்து பழனி மலையில் தங்கி பழனி தண்டாயுதபாணி சிலையை நவபாஷாணத்தில் தயாரித்தார் என்று கூறுவர்.

**இயற்றிய நூல்கள்:**

1. போகர் ஏழாயிரம்
2. போகர் சரக்கு வைப்பு
3. போகர் சாத்திரம்
4. போகர் ஐந்நூறு

போன்றவையாகும்.

**காகபுஜண்டர்:**

புஜண்டர் என்னும் இச்சித்தர் காக்கை உருவில் பல இடங்களிலும் சுற்றியலைந்து பல உண்மைகளைக் கண்டறிந்ததாகக் கூறுவர்.

முன்னொரு காலத்தில் சக்தி கணங்கள் மதுவுண்டு நடனமாடிக் களித்திருந்தனர். அங்கு சிந்திய மதுகலந்த நீரைப்பருகிய அன்னங்களும் போதைக் களிப்பில் நடனமாடின. அதனை சிவனும் பார்வதியும் கண்டு மகிழ்ந்தனர். அதனால் உண்டான சிவகலை காகத்தின் உருவில் அன்னத்துடன் சேர அன்னம் அப்போது கர்ப்பமுற்று 21 முட்டைகள் இட்டு, 20 அன்னக்குஞ்சுகளையும், ஒரு காக்கைக் குஞ்சையும் பொரித்தது. இந்தக் காகமே காகபுஜண்டர் என்கிற சித்தராக உருப்பெற்றார். 20 அன்னங்களும் பல நாள் இருந்து முக்தியடைந்தன. ஆனால் காகம் மட்டும் சிவகலையால் பிறந்ததால் தன் யோகசக்தியால் அழியாமல் இருக்கும் பெறு பெற்றது.

**உரோம முனி சித்தர்**

உடல் முழுவதும் ரோமம் முளைத்திருந்தமையால் இவர் "உரோமமுனி" என்ற காரணப் பெயரைப் பெற்றிருக்கிறார்.

அஷ்டமா சித்தி பெற்ற பதினெண் சித்தர்களுள் இவரும் ஒருவர். புசுண்ட மாமுனிவரின் சீடர்.

காலங்கிநாதரும், போகரும் சீனாவிலிருந்து தமிழகம் வந்து சித்தர்களானதைப்போல் ரோமரிஷியும் ரோமாபுரியிலிருந்து வந்து சித்தராகி இருக்கலாம் என்கின்றனர் சிலர்.

**"காலவட்டம் தங்கி மதி அமுதப் பாலைக்**
**கண்டு பசியாற்றி மண் சுவடு நீக்கி**
**ஞால வட்டம் சித்தாடும் பெரியோர் பதம்**
**நம்பினதால் உரோமன் என்பேர் நாயன் தானே" -27.**

என்கிறது உரோமரிஷி ஞானம்.

**காலங்கி நாதர்**

திருமூலரின் சீடர்களுள் முதன்மையானவர். சீன நாட்டைச் சேர்ந்தவர். இவர் ஜீவசமாதி அடைந்த இடம் காந்திபுரம்.

காலங்கி நாதர் ககன் குளிகையின் உதவியால் விண்வெளியாக சீனநாடு சென்றார். காலனுடைய அருள் பெற்றுதான் சமாதியில் இருக்கும் காலத்தில் காலன் தன்னை அணுகாதிருக்கும் வண்ணம் சமாதியில் அமர்ந்தார். திருமூலரைப் போலவே இவரும் பலஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்ததாக போகர் தெரிவிக்கிறார்.

தவம் செய்யும்போது ஆடாமல் அசையாமல் இருந்ததால் அவரைக் கந்துருங் காலங்கி' என்று அழைத்து மகிழ்ந்திருக்கிறார் திருமூலர்.

இவரை காலாக்னி முனிவர் என்றும், காலங்கிநாதர் என்றும் சில நூல்கள் குறிப்பிடுகின்றன.

காற்றையே உடலாகக் கொண்டவர் என்றும், காலனைப் பொன்று நெருப்பானவர் என்றும், காலனால் நெருங்க முடியாதவர் என்றும் காலங்கி நாதருக்குப் பல பெயர்க்காரணமுண்டு.

காலத்தை அங்கியாய் (ஆடையாய்) அணிந்து கால விதானத்தையே தாண்டி நிற்பவர் இவர். கமலமுனி சித்தரும் காலங்கி நாதரும் ஒருவரே என்ற கருத்தும் நிலவுகிறது.

**நந்தீசர்:**

வைகாசி மாதம் விசாகம் விண்மீனில் பிறந்தவர். சிவகணங்களில் ஒருவராக பார்வதி தேவியின் அந்தப்புரக் காவலராக இருந்தவர் நந்தீசர். ஒரு சமயம் பார்வதி தேவி கைலாய மலையை விட்டு கௌரி என்ற பெயரில் சிவனை நினைத்து தவம் மேற்கொண்டிருந்தார்.

பார்வதி தேவியைப் பார்ப்பதற்கு அடிலகன் என்ற மன்னன் ஒருவன் வந்திருந்தான். அந்த சிவ சன்னிதானத்தில் பார்வதிதேவியின் அனுமதியின்றி அடிலகனை நந்தீசர் உள்ளே செல்ல அனுமதித்துவிட்டார். இதுகண்டு

கோபமடைந்த சிவபெருமான் நந்தீசரைப் பூவுலகில் சென்று சிலாதர் என்னும் மகரிஷிக்கு மகனாக 12 வருட காலம் வசிக்கும்படி சாபமிட்டுவிட்டார். இவர் ஜீவசமாதி அடைந்த இடம் காசி.

**இயற்றிய நூல்கள்:**

நந்தீசர் முன்னூறு நந்தியெட்டு நந்தீசர் கருக்கடை

**கொங்கணர்:**

சித்திரை மாதம் உத்திராடம் விண்மீனில் இவர் பிறந்தார். இவர் ஜீவசமாதி அடைந்த இடம் - திருப்பதி.

கேரளத்திலுள்ள கொங்கண தேசத்தில் சித்திரை மாதம், உத்திர நட்சத்திரத்தில் புளிஞர் குடியில் தோன்றியவர்.

**“திட்டமுடன் கொங்கணனார் பிறந்த நேர்மை**

**தீர்க்கமுடன் சித்திரையாம் திங்களப்பா**

**வளமான உத்திராடம் முதற்கால் தன்னில்**

**அட்டதிசை தான் புகழப் பிறந்த பாலன்**

**அன்பான கொங்கணவர் என்னலாமே” – 28.**

**(போகர் 7000)**

**இவர் இயற்றிய நூல்கள்:**

1. கொங்கணர் முக்காண்டம்
2. கொங்கணர் வாக்கியம் பத்து
3. முக்கலை சூத்திரம்
4. பட்சினி சரக்கு வைப்பு நூறு
5. கொங்கணர் நாற்பது
6. கொங்கணர் எட்டு
7. கொங்கணர் தீட்சாவித்

**சட்டை முனி:**

ஆவணி மாதம் மிருகசீரிடம் விண்மீனில் பிறந்தவர். இவர் ஜீவசமாதி அடைந்த இடம் சீர்காழி.

நோய்தீர்க்கும் மருத்துவ முறைகளைச் சொன்னவர். இந்த சித்தர். இவர் போகரின் சீடர்.

சட்டை முனி அடிக்கடி கயிலையங் கிரியை அடைந்து சிவபெருமானிடம் நட்பு பூண்டிருந்தார் எனவும், கயிலையில் உள்ள குளிரைத் தாங்க முடியாததால் எப்பொழுதும் கம்பளிச்சட்டை அணிந்து கொண்டிருந்தார் என்றும் கூறுவர்.

**இயற்றிய நூல்கள்:**

1. சட்டை முனி நிகண்டு 2. சட்டை முனி இருபது 3. சட்டை முனித்தாண்டவராம் 4. சட்டை முனி சிவ யோகத்திரியம் 5. சட்டை முனி மூல சூத்திரம் 6. சட்டை முனி வாக்கியம்.

**கோரக்கர்:**

இவர் கார்த்திகை மாதம் ஆயில்ய நட்சத்திரத்தில் பிறந்தவர் என்றும், வசிஷ்ட மகரிஷிக்கு கன்னியான குறப் பெண்ணிடம் பிறந்த மகன் என்றும் போகர் 1000 என்னும் நூல் கூறுகிறது.

கோரக்கரின் பிறப்பு குறித்து சொல்லப்படும் ஒரு கதை. ஒரு சமயம் சிவபெருமான் கடற்கரையில் உமா தேவிக்கு தாரக மந்திரத்தை உபதேசித்துக் கொண்டிருந்தார். சிவபெருமான் உரைத்துக் கொண்டிருந்த தாரக மந்திரத்தை ஒரு மீன் வயிற்றிலிருந்த மீன்குஞ்சு ஒன்று கேட்டு மனித வடிவாகி வெளியே வர சிவபெருமான் அதற்கு மச்சேந்திரன் என்று பெயரிட்டு அதனை சிறந்த சித்தராக்கி ஞானத்தைப் பரப்பும்படி அருளினார்.

தவம் செய்து, சித்தரான மச்சேந்திர் ஒருநாள் ஒரு ஊரில் சென்று கொண்டிருக்கும் பொது ஒரு பெண் இவரைக் கண்டு பிச்சையிட்டார். அவள் முகத்திலிருந்து சோகத்தைக் கண்டு அதற்கு யாது காரணம் என்று வினவ அவள் மகப்பேறின்றி வருந்தும் தன் குறையைத் தெரிவித்தாள்.

மச்சேந்திரா் அவள் மீது இரக்கம் கொண்டு சிறிது திருநீற்றை அளித்து அதனை உட்கொண்டால் அவருக்கு மகப்பேறு உண்டாகும் என்று சொல்லி விட்டுப் போனாா்.

திருநீறு பெற்ற பெண் இச்செய்தியைத் தன் பக்கத்து வீட்டுக்காரியிடம் கூற, அவளோ உனக்கு விபூதி கொடுத்தவா் போலித் துறவியாக இருந்தாலும் இருக்கலாம். உன்னை மயக்கி அடைவதற்காக இந்த விபூதியைக் கொடுத்திருக்கலாம். எனவே, நீ அந்த விபூதியை உட்கொள்ளாதே என்று கூறினாள்.

இதைக் கேட்டு அச்சமடைந்த அந்தப்பெண்,துறவி கொடுத்த திருநீற்றை அடுப்பில் போட்டு விட்டாள்.

சில ஆண்டுகள் கழிந்தன. திருநீறு கொடுத்த மச்சேந்திரா் மீண்டும் அவ்வூருக்கு வந்தாா். பிள்ளைப் பேற்றிற்காகத் திருநீறு அளித்த பெண்ணின் வீட்டிற்குச் சென்று ‘‘அம்மணி.. உன் மகனை நான் பாா்க்க வேண்டும். அவனை அழைப்பாயாக’’ என்றாா்.

பக்கத்து வீட்டுகாரப் பெண்மணியின் பேச்சைக் கெட்டு அவா் அன்புடன் அளித்த விபூதியை உண்ணாமல் அடுப்பில் போட்டு விட்டு இப்போதும் பிள்ளையில்லாமல் வருந்தும் நிலையைக் கூறி தன்னை மன்னிக்கும்படி வேண்டினாள் அவள்.

அவள் நிலை கண்டு மனமிரங்கிய மச்சேந்திரா் ‘‘சரி… அந்த விபூதியை எங்கு கொட்டினாய்’’ என்று கேட்க, அவரும் அந்த விபூதி இருந்த அடுப்புச்சாம்பலை வழக்கமாகக் கொட்டும் குப்பைப்பட்டறையில் கொட்டியதாகக் கூறி அச்சாம்பல் கொட்டப்பட்டிருந்த அக்குப்பைப் பட்டறையை முனிவரிடம் காட்டினாள்.

மச்சேந்திரா் குப்பைப் பட்டறை அருகில் சென்று ‘‘கோரக்கரே’’ என்று கூப்பிட்டாா். அதனுள் இருந்து என்ன?’’ என்று ஓா் பதில் குரல் வந்தது.

மச்சேந்திரா் அங்கிருந்தவா்களிடம் குப்பையை அகற்றும் படிக் கூற அதிலிருந்து குழந்தையொன்று சித்தா் திருநீறு கொடுத்த காலம் முதல் இப்போது வரை இருக்கவேண்டிய வளா்ச்சியோடு வெளிப்பட்டது.

சித்தா் சிறுவனை அப்பெண்ணிடம் கொடுத்தாா். ஆனால் அச்சிறுவனோ தாயிடம் இருக்கப்பிடிக்காமல் மச்சநாதரைப் பின் தொடா்ந்து சென்று மிகப் பெரிய சித்தனாகி குருவையே மிஞ்சிய சீடனாகத் திகழ்ந்தாா்.

**கருவூரார்:**

சித்திரை மாதம் அஸ்தம் விண்மீனில் பிறந்தார். இவர் ஜீவசமாதி அடைந்த இடம் கரூர்.

சோழ மன்னர்களின் தலைநகர்களில் ஒன்றான கருவூரில் அந்தணர் குடும்பத்தில் பிறந்தவர். இவர் இளம் பருவத்திலேயே ஞான நூல்களைப் பயின்றவர்.

ஒரு சமயம் போகர் திருவாவடுதுறைக்கு வந்திருந்த போது கருவூரர் அங்கு சென்று அவரை வணங்கி நின்றார். போகர் கருவூராருக்கு அருள் புரிந்து, ‘‘கருவூரர்’’ உன் குலதெய்வம் அம்பாள். தினந்தோறும் அவளை வழிபடு. அவள் உனக்கு வழிகாட்டுவாள்’’ என்று உபதேசிக்க, அதன்படியே கருவூராகும் அம்பாளைத் தினத்தோறும் வழிபடத் தொடங்கினார்.

ஒரு ஞானியைப்போல் ஞான விஷயங்களுக்காக ஏங்கினார். உள்ளம் உருகி அம்பாளை வழிபட்டார். போகரின் வாக்குப்படியே கருவூரார் சித்துக்கள் புரியும் ஞானமூர்த்தியாக உயர்ந்தார். இவர் இயற்றிய நூல்கள்: 1. திருவாசைப்பாசித்தர் ஞானக்கோவை 2.கருவூரார் பலதிரட்டு

**பிண்ணாக்கீசர்:**

கார்காத்தார் குலத்தில் தோன்றியதாக இவரைச் சொல்வார்கள்.

இவர் இயேசுநாதரைப் போல் கன்னி வயிற்றில் பிறந்தவர். ஆலயங்களில் வைத்து வளர்க்கப்பட்டதாலும் இவரை நந்தீசுவரர் என்றும் கூறுவர். இவர் பிளவுபட்ட நாக்கை உடையவர். இதனால் இவருக்கு பிண்ணாக்கீசர் என்னும் பெயர் ஏற்பட்டதாக கூறுவர்.

**சிவவாக்கயர்**

சித்தர்களுள் சிறந்தவராக திகழ்பவர். தாயுமானவர், பட்டினத்தார் ஆகியோரால் பாராட்டப் பெறபவர்.

பஞ்சாட்சர உண்மைகளையும், சிவனையும், இராமனையும் பற்றி மிக அழகாகச் சொல்லியிருப்பவர்.

**‘‘சிவாயம் என்ற அட்சரம்**
**சிவன் இருக்கும் அட்சரம்**
**உபாயம் என்று நம்புவோர்க்கு**
**உண்மையான அட்சரம்**

**கபாடம் அற்ற வாசலைக்**

**கடந்து போன வாயுவை**

**உபாயம் இட்டு அழைக்குமே**

**சிவாயம் அஞ்சு எழுத்துமே” -29.**

சங்கரக் குலத்தில் தை மாதத்தில் மக நட்சத்திரத்தில் பிறந்தவர் சிவவாக்கியர்.

பிறக்கும் போதே “சிவ சிவ” என்று சிவநாமத்தை உச்சரித்துக் கொண்டே பிறந்ததால் இவருக்கு சிவவாக்கியார் என்று பெயர்.

**அகப்பேய்ச் சித்தர்:**

திருவள்ளுவர் பரம்பரையில் தோன்றிய இச்சித்தரது இயற்பெயர் நாயனார் என்பதாகும்.

பதினெண் சித்தர்கள் வரிசையில் இவரும் ஒருவராகக் குறிப்பிடப்படுகிறார். அகத்தை அதாவது மனதைப் பேயாக உருவகித்துப் பாடினதால் இவர் அகப்பேய் சித்தர் எனப் பெயர் பெற்றார்.

இவரது ஞானப் பாடல்கள் பதினெண் சித்தர்கள் ஞானக் கோவையில் ‘அகப்பேய் சித்தர் பாடல்” என்ற தலைப்பில் அமைந்துள்ளன. மொத்தம் 90 பாடல்கள் இவருடையது.

இவரது தத்துவப் பாடல்கள் ஒவ்வொரு அடியிலும் கடைசியில் அகப்பேய் என்று முடியுமாறு அமைந்துள்ளது.

**“தன்னை அறிய வேண்டும் - அகப்பேய்!**

**சாராமல் சார வேணும்**

**பின்னை அறிவதெல்லாம் - அகப்பேய்!**

**பேய் அறிவு ஆகுமடி”**

என்கிறது அகப்பேய்ச் சித்தர் பாடல்.

**தேரையர்:**

தேரையர் புலத்தியரின் சீடர். ஆனால் புலத்தியரின் குருவான அகத்தியரைத்தான் தேரையரின் குருவாகக் கொண்டதாகப் பெரும்பாலான வைத்திய நூல்கள் கூறுகின்றன.

காசிவர்மன் என்ற மன்னனின் தலையிலிருந்த தேரையை அகற்றியதால் தேரையர் என்று பெயர் பெற்றார்.

**பாம்பாட்டிச்சித்தர்:**

இவர் கார்த்திகை மாதம் மிருகசீரிடம் நட்சத்திரத்தில் பிறந்தவர். ஜோதி என்னும் வகுப்பைச் சேர்ந்தவர். இவர் சட்டைமுனியிடம் ஞானம் பெற்றவர்.

பாம்புகளைப் பிடிப்பது, அவற்றை படமெடுத்து ஆடச் செய்வதும், அவைகளின் விஷத்தை சேமித்து விற்பது இவையெல்லாம் இந்த சித்தரின் பொழுது போக்கு.

எவ்வளவு பெரிய பாம்பாக இருந்தாலும், எவ்வளவு கொடிய விஷ நாகமானாலும், அதனைப் பிடித்து அதன் விஷத்தை கக்கவைத்து விடுவார். இதனால் தான் இவருக்கு பாம்பாட்டிச் சித்தர் என்ற பெயர் வந்தது.

இயற்றிய நூல்கள்: 1. சிரோ ரோக விதி

2. நயணா ரோக விதி

**குதம்பைச் சித்தர்:**

யாதவ குலத்தில் கோபாலர் தம்பதிகளுக்கு ஆடி மாதம் விசாக நட்சத்திரத்தன்று பிறந்த அந்த ஆண் குழந்தை பார்த்தவர்கள் கண்களையெல்லாம் ஆச்சரியத்தில் மூழ்கடித்தது.

இவரது பாடல்களில் குதம்பை (பெண்கள் காதிலே அணியும் ஒருவகை நகை) அணிந்த பெண்ணைக் குதம்பாய் என்று முன்னிலைப்படுத்தி இருப்பதால் அனைவரும் இவரைக் குதம்பைச் சித்தர் என்றே அழைக்கின்றனர்.

**“வெண் காயமுண்டு, மிளகுண்டு சுக்குண்டு**
**உண் காயம் ஏதுக்கடி? குதம்பாய்**
**உண் காயம் ஏதுக்கடி?” – 30**

(குதம்பைச் சித்தர் பாடல்கள்)

**புலிப்பாணி:**

புலி என்ற (விலங்கு) தமிழ்ச்சொல்லுடன் பாணி (இந்துஸ்தானி சொல்) தண்ணீர் இணைந்து புலிப்பாணி என்ற பெயர் உண்டானதாகக் கூறுவர்.

ஒருநாள் போகர் குடிப்பதற்குத் தண்ணீர் கேட்க தம் குரு கேட்டுவிட்டாரே என்று புலி மேல் ஏறிச்சென்று வெறும் கையாலேயே தண்ணீர் அள்ளிக்கொண்டு வந்து கொடுத்தாராம். அதனால் புலிப்பாணிச் சித்தர் என்ற பெயர் ஏற்பட்டது.

**இயற்றிய நூல்கள்:**

1. புலிப்பாணி வன்மவிதி
2. புலிப்பாணி சிதம்பர பூசாவிதி
3. புலிப்பாணி பல திரட்டு
4. புலிப்பாணி மாந்தீரீக வைத்தியம் பூசாவிதி
5. புலிப்பாணி ஐந்நூறு

**அழுகணிச் சித்தர்:**

குரல் கோளாறு தன்மையின் காரணமாக இப்பெயர் இச்சித்தருக்கு ஏற்பட்டிருக்கலாம் என்பர். வேறுசிலர் இவர் பாடல் அனைத்தும் ஒப்பாரி போல் அமைந்திருப்பதால் இவர் அழுகணிச் சித்தர் என்று அழைக்கப்படுகிறார் என்று கூறுவர்.

**திருமூலர்:**

திருமூலர் கைலாய பரம்பரையைச் சேர்ந்தவர். சித்தர்களுள் முதலாமவரும், முதன்மையான வருமான சிவபெருமானிடமும், நந்தீசரிடமும் உபதேசம் பெற்றவர். இவரது வரலாறு குறித்து சேக்கிழார் பெரிய புராணத்தில் கூறியிருக்கும் தகவல்கள்.

திருக்கயிலாயத்தில் நந்தி தேவரது திருவருள் பெற்ற மாணவர்களுள் ஒருவராய் அட்டமா சித்திகளைக் கைவரப் பெற்ற இச்சித்தர் திருக்கயிலாயத்தில் புறப்பட்டு தென்திசை நோக்கி செல்லும் வழியில் திருக்கேதாரம், பசுபதி, நேபாளம், அவிமுத்தம் (காசி) விந்தியமலை, திருக்காளத்தி, திருவாலங்காடு ஆகிய தலங்களை தரிசித்துவிட்டு பின்னர் காஞ்சி நகர் அடைந்து பின்னர் திருவதிகை, தில்லை சென்று காவிரியில் நீராடி அதன் பின்னர் திருவாவடு துறையினை அடைந்து இறைவனை தரிசித்து விட்டுச் செல்கையில் அந்தணர்கள் வாழும் சாத்தனூரில் தொன்றுதொட்டு மாடுகள் மேய்க்கும் குடியில் பிறந்த ஆயனாகிய மூலன் என்பவர் இறந்து கிடக்க பசுக்கள் அனைத்தும் அவனைச் சுற்றி வந்து கதறி அழுதன.

இக்காட்சியைக் கண்ட சித்தர் பெருமான் அப்பசுக்களின் துயர் நீக்க எண்ணித் தம்முடைய உடலை மறைவான இடத்தில் கிடத்திவிட்டு கூடுவிட்டு கூடு

பாய்தல் (பரகாயப் பிரவேசம்) என்னும் வழியில் தன் உயிரை இந்த இடையனது உடலில் செலுத்தித் திருமூலராய் எழுந்தார்.

மூலன் எழுந்ததும் பசுக்களெல்லாம் துயர்நீங்கி அன்பினால் அவனது உடம்பை நக்கி, மோந்து மிகுந்த களைப்பினால் துள்ளிக் கொண்டு புல்மேயச் சென்றன.

அதுகண்டு மகிழ்ந்த திருமூலர் பசுக்கள் செல்லும் வழியே சென்று பின்னர் அவைகள் தங்கள் இல்லங்களுக்குச் சென்றதும் தான் மட்டும் தனித்து நின்றார்.

அப்பொழுது மூலனுடைய மனைவி பொழுது சாய்ந்த பின்னரும் தன் கணவர் இன்னும் வந்து சேராதது கண்டு அவனைத் தேடிக் கொண்டு வந்தவள் மூலன் வடிவில் இருந்த சித்தரைக் கண்டு வீட்டிற்கு அழைத்தாள்.

மூலரோ தான் அவளுடைய கணவன் அல்ல,அவனின் விதி முடிந்து இறந்து விட்டான் என்றார். தன் கண் எதிரே நிற்கும் கணவன் தான் இறந்து விட்டேன் என்று கூறுவதைக் கேட்டு மனம் பொறுக்காதவளாய் அவ்வூரிலுள்ளோரை அழைத்து தன் கணவனுக்குள் ஏற்பட்டிருக்கும் மாறுபாட்டைக் கூறி அழுகிறாள்.

அங்கிருந்தோர் மூலனுக்கு அறிவுரை கூறி அவளோடு வீடு திரும்புமாறு கூற மூலன் உடம்பிலிருந்த சித்தர் தன் நிலையை அவர்களுக்கு எடுத்துக் கூறியும் அவர்கள் நம்பாமல் போகவே மறுபடியும் அந்த உடலை செயலற்ற தாக்கி உண்மையை நிரூபித்தார். கண்ணெதிரே நிகழ்ந்த இந்த அதிசயத்தையும், மூலனுடைய உடலில் ஏற்பட்டிருந்த மாற்றத்தினையும் கண்ட ஊர்ப் பெரியவர்கள் மூலன் மனைவிக்கு ஆறுதல் கூறி அவளது வீட்டிற்கு அழைத்துச் சென்றனர்.

தன்னுடைய பழைய உடலைத் தேடிச் சென்ற சித்தர் அங்கு தன் உடலை காணாததால் மூலனுடைய உடலிலேயே நிரந்தரமாகக் தங்கி திருவாவடுதுறை கோயிலை அடைந்து யோகத்தில் வீற்றிருந்து, உலக மக்களின் நன்மையின் பொருட்டு ஞானம், யோகம், சரியை, கிரியை என்னும் நால்வகை நன்னெறிகளும் கூறும் திருமந்திரம் என்னும் நூலைத் தொடங்கி ஓராண்டுக்கு ஒரு பாடலாக மூவாயிரம் பாடல்களைப் பாடினார். இந்நூல் நிறைவடைந்தும் அதாவது 3000 ஆண்டுகளுக்குப் பின் இறைவன் திருவடியைச் சேர்ந்தார்.

(சதுரகிரி தலபுராணம் கூறும் திருமூலர் வரலாறு இது).

**பதஞ்சலி:**

யோகசூத்திரம் அருளிய முனிவர் இவர். இதுநாள் வரை அவரை அவரது சீடர்கள் நேரில் கண்டதில்லை. காரணம் ஆதிசேடனின் அவதாரமாகிய இம்முனிவரின் விஷக்காற்று பட்டாலே அந்தச் சீடர்கள் அக்னியில் மூழ்கி எரிந்து சாம்பாலாகிப் போவார்கள்.

**புலத்தியர்:**

ஆவணி மாதம் அனுஷ நட்சத்திரம் நாலாம் பாதத்தில் பிறந்த இச்சித்தர் ஒரு சிவராஜயோகி. திருமந்திர உபதேசம் பெற்றவர்.

போகரின் நூலான 'போகர் 7000'ல் புலத்தியர் கமல முனியின் பேரன் என்றும், அகத்தியருக்கு உகந்தவர் என்றும் விளக்கமாகக் கூறுகிறார்.

**"உருவான புலஸ்தியரின் மார்க்கம் கேளு**
**ஒகோகோ நாதாக்கள் அறிந்ததில்லை**
**கருவான தேவரிஷிதன் வரத்தால்**
**கமலமுனி தன் வயிற்றில் பிறந்த பேரன்**
**திருவான அகஸ்தியருக்கு உகந்த சீடன்**
**தீர்க்கமுள்ள சிவராஜ புனிதயோகன்**
**பருவான திருமந்திர உபதேசந்தான்**
**பாருலகில் புலஸ்தியர் என்றறையலாமே" – 31.**

**போகர் 7000.**

தொகுப்புரை:

2.1 சித்தர் - பெயர்க் காரணம் - ‘சித்’ எனும் வடமொழிச் சொல்லிலிருந்து வந்தது. இலக்கிய இலக்கணங்கிளல் நிறைமொழி மாந்தர், சாரணர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

2.2 எண்வகை சித்துக்கள் - அனிமா, மகிமா, கரிமா, லகிமா, பிரார்ப்தி, பிராகாமியம், ஈசத்தவம் வசித்துவம் - இதன் விளக்கங்கள்.

2.3 சித்தர்களின் ஆற்றல்கள் - சித்தர்களின் எண்வகையான பேராற்றல்கள் - சித்துபுரிதல் பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்ததற்கான காரணங்கள், பண்புகள்

2.4 சித்தர்கள் வழங்கும் அறிவுரைகள். இறைவன் மனிதரின் மூலாதாரத்தில் உள்ளான் - மனதை நிலைப்படுத்த தியானம் தேவை - மூலாதாரத்தில் குண்டலினி திறந்தால் மனிதனும் தெய்வமாகலாம். யோகத்தால் மனம் பக்குவப்படும் - யோக மார்க்கங்கள்.

2.5 சித்தர்களின் தன்மைகள் - மக்கள் நிலையான இன்பத்தை பெறவேண்டும் என்பது சித்தர்களின் நோக்கம் அவர்கள் அடைந்த இன்பத்தை இவ்வையகமும் அடையவேண்டும் என்னும் தன்மையுடையவர்கள்.

2.6 குதம்பைச்சித்தர் கூறும் சித்தர்களின் தன்மைகள் சித்தர்கள் தம் மூன்றாவது கண்ணான நெற்றிக் கண்ணைத் திறந்து சிவபெருமானை ஒத்தவர் ஆயினர் இருந்த இடத்திலிருந்தே எல்லாவற்றையும் காணக் கூடிய ஞானக் கண் பெற்றவர்கள் - எதற்காகவும் வருத்தப்படாதவர்கள்.

2.7 போகர் கூறும் சித்தர்களின் தன்மைகள்: காம வெகுளி, மயக்க மடக்கி, உடம்பைப் பேணி, உடம்பின் மீதுள்ள பற்றை நீக்கி சிவனை சிந்தித்து வாழ்பவனே சித்தன்.

2.8 திருமூலர் காட்டும் சித்தர் இயல்புகள்: சித்தர்கள் சிவத்துடன் கூடினமையால் பிறப்பு இறப்பு அற்று இருப்பர். மும்மலமற்றவர்கள். துயிலிலேயே சிவபோகத்தைக் கண்டவர்கள்.

2.9 சிவவாக்கியர் கூறும் சித்தர்களின் இயல்புகள்: மூச்சுப்பயிற்சியை மேற்கொண்டு சிவனை அடையும் வழி அறிந்தவர்கள் சித்தர்கள் ஆதிமூலமான இறைவனை அடைந்து அடுத்த பிறவியில் சோதி வடிவான ஞானியர்களாக விளங்குவர்.

2.10 பதினெண் சித்தர்கள் : சௌமிய சாகரம் கூறும் 18 சித்தர்கள் தஞ்சை.இ சரஸ்வதி மகால் நூலகப்படம் -18 சித்தர்கள், அபிதான சிந்தாமணி கூறும் 18 சித்தர்கள், சித்த வைத்தியம் நூல்கள் 18 சித்தர்கள், தாயமானவர் குறிப்பிடும் சித்தர்கள், திருமூலர் கூறும் சித்தர்கள், பொதுவாகக் கூறப்படும் பதினெட்டு சித்தர்கள்

2.11 சித்தர்களின் வரலாறு: முதல் சித்தர் - சோமசுந்தரக் கடவுள், அகத்தியர், போகர், காகபுஜண்டர், உரோமமுனி சித்தர், காலங்கி நாதர், கொங்கணர், சட்டைமுனி, கோரக்கர், கருவூரார், பிண்ணாக்கீசர், சிவவாக்கியர், அகப்பேய்ச்சித்தர், தேரையர், பாம்பாட்டிச்சித்தர் புலிப்பாணி, அழுகணிச்சித்தர், திருமூலர், பதஞ்சலி, புலத்தியர் -வரலாறு.

## அடிக் குறிப்புகள்:

1. தொல்காப்பியர் - தொல்காப்பியம்
2. திருக்குறள் - குறள் எண் -28
3. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரம் - திருமுறை (எ) எண் -பக்(க0உ)
4. வீரமாமுனிவர் - திருக்காவலூர் கலம்பகம்.
5. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை – பாடல் -22
6. குதம்பைச் சித்தர் - சித்தர்களின் தியானம் யோகம் ஞானம் - பக் - 87.
7. திருமூலர் - சித்தர்களின் தியானம் யோகம் ஞானம் - பக் - 23.
8. பாம்பாட்டிச் சித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் பாடல் எண் -72.
9. இராமலிங்க அடிகள் - திருஅருட்பா – ஆறாம் திருமுறை
10. அரங்க இராமலிங்கம் - சித்தர் இரகசியம் - பக்20.
11. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்58.
12. பட்டினத்தார் - தாயாருக்குத் தகனகிரியை செய்கையிற் பாடியது – பாடல் -1
13. பட்டினத்தார் - தாயாருக்குத் தகனகிரியை செய்கையிற் பாடியது – பாடல் -2
14. பட்டினத்தார் - தாயாருக்குத் தகனகிரியை செய்கையிற் பாடியது – பாடல் -3
15. பட்டினத்தார் - தாயாருக்குத் தகனகிரியை செய்கையிற் பாடியது – பாடல் -5
16. சி.எஸ்.முருகேசன் - சித்தர்கள் கண்ட இறைமை –பக் 87
17. பத்திரகிரியார் மெய்ஞ்ஞானப்புலம்பலும் விருத்தியுரையும் பாடல் - 8, 9, 10
18. குதம்பைச் சித்தர் - பதினெண்சித்தர் பாடல்கள் - பாடல்-3.
19. குதம்பைச் சித்தர் - பதினெண்சித்தர் பாடல்கள் - பாடல்-4.
20. குதம்பைச் சித்தர் - பதினெண்சித்தர் பாடல்கள் - பாடல்-5.
21. குதம்பைச் சித்தர் - பதினெண்சித்தர் பாடல்கள் - பாடல்-6.
22. போகர் - சித்தர்கள் கண்ட இறைமை – பக் -9
23. திருமூலர் -திருமந்திரம். பாடல் எண் 129
24. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை பாடல் எண் -127.
25. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை பாடல் எண் -158.
26. அகஸ்தியர் 12000 – சிவமயம் கண்ட சித்தர்கள் - பக் -25
27. உரோமரிஷி ஞானம் - சிவமயம் கண்ட சித்தர்கள் - பக் -49.
28. போகர் 7000 – சிவமயம் கண்ட சித்தர்கள் - பக் 69

29. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் -71

30. குதம்பைச் சித்தர் - பதினெண்சித்தர் பாடல்கள் - பாடல்-27

31. போகர் 7000 – சிவமயம் கண்ட சித்தர்கள் - பக் 213

# இயல்- 3

## சித்தர்கள் பார்வையில் மனிதனும் அறமும்

3.1 நிலையாமை

3.2 யாக்கை நிலையாமை

திருமூலர் கூறும் யாக்கை நிலையாமை

சிவவாக்கியர் காட்டும் யாக்கை நிலையாமை

அழுகணிச்சித்தர் கூறும் யாக்கை நிலையாமை

பட்டினத்தடிகள் காட்டும் யாக்கை நிலையாமை

3.3 செல்வம் நிலையாமை

திருமூலர் காட்டும் செல்வம் நிலையாமை

பட்டினத்தடிகள் காட்டும் செல்வம் நிலையாமை

3.4 இளமை நிலையாமை

3.5 உயிர் நிலையாமை

3.6 தானச்சிறப்பு

அறம் செய்வான் திறம்

அறம் செய்யான் திறம்

தானம் பெறத் தக்கார், தகாதார்

3.7 நல்குரவு

3.8 அன்புடைமை

3.9 கல்வியின் சிறப்பு

3.10 பெரியாரைத் துணைக்கோடல்

3.11 குலத்தாழ்வு

# இயல் - மூன்று

## சித்தர்கள் பார்வையில் மனிதனும் அறமும்

சித்தர்கள் அற்புதங்கள் நிகழ்த்துவதற்காக இந்தப் பூவுலகில் பிறக்கவில்லை. மனிதனை அவனது பிறப்பின் நோக்கத்தை அறிவித்து, இறைவனுடன் இனிதாக இணைத்து வைக்க வேண்டி அவதரித்தனர்.

### 3.1 நிலையாமை:

மனிதர்கள் எதெல்லாம் நிலையானவை என்று எண்ணிக் கொண்டிருக்கிறார்களோ அவையெல்லாம் பாதியில் வந்து பாதியில் போகிறவை. பார்த்துப் பார்த்து வீடு கட்டுகிறோம். பலவகையான வேள்விகளைச் செய்கிறோம் உடல் தொடர்பாக அமைந்த உறவுகளையும், மெய்யென்று நம்புகிறோம். உயிரை எடுக்க எமன் வரும்போது இறந்த ஆட்டுக்குட்டிக்குக் கிடைக்கிற விலைகூட இந்த மனித உடலுக்குக் கிடைப்பதில்லை.

நாம் நாடி நிற்கிற, தேடிக் கொள்கிற எல்லாமே பொய். எது மெய்யானதோ அதை நாடுங்கள். தேடிக் கொள்ளுங்கள் என்கிறார்கள் சித்தர்கள். நாம் நிலையானதென்று கருதும் உயிர், உடல், செல்வம், இளமை எதுவும் இவ்வுலகில் நிலையில்லை. எனவே நிலையான செல்வமான அறத்தை நாடுங்கள் என்கிறார்கள் சித்தர்கள்.

### 3.2 யாக்கை நிலையாமை:

கடவுளுண்மையினையும், உயிருண்மையினையும் மறுத்து உடலுண்மை ஒன்றையே கொண்டு அதனை பாதுகாப்பதிலேயே கண்ணும் கருத்துமாயிருந்து, கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என இறுமாந்துதிரியும் நாத்திகர்கட்கு நல்லறிவுச்சுடர் கொளுத்த வேண்டி ஞானிகள் பல இடங்களில் நம் உடல் நிலையில்லாதது, தோன்றி நின்றழிவது, அதனை பாதுகாப்பதிலேயே உங்கள் நேரத்தை செலவிடாதீர்கள் என்று கூறுகிறார்கள்.

**“உடம்பா ரழியின் உயிரார் அழிவர்,**

**திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்**

**உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்**

**உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே". - 1**

உண்மை ஞானம் பெறவேண்டுபவர் உடம்பைக் குறிக்கொண்டு வளர்க்க வேண்டும். 'ஆறிலும் சாவு, நூறிலும் சாவு' என்று கூறிக்கொண்டு வாழுதல் கூடாது. உடம்பு அழிந்தால் அதை நிலைக்களமாகக் கொண்ட உயிரும் அழியும். உடலும் உயிரும் கூடி வாழ்வதே வாழ்வு ஆகும் என்கிறார் திருமூலர்.

**திருமூலர் கூறும் யாக்கை நிலையாமை:**

**"ஊரெலாம் கூடி ஒலிக்க அழுதிட்டு**

**பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்**

**சூரையங் காட்டிடைக் கொண்டு போய் சுட்டிட்டு**

**நீரினில் மூழ்கி நினைப் பொழிந்தார்களே" – 2**

என்கிறார் திருமூலர். இந்த உடல் இறந்த பின்னர் அதனை அடக்கம் செய்வதற்கென ஊர்மக்கள் எல்லோரும் ஒன்று கூடிப் பேரிரைச்சலிட்டு அழுது தீர்த்து, முன் அவ்வுடம்பிற்குரிய இயற்பேயரினை நீக்கிப் பிணம் என்னும் பெயரைக் கொடுத்துச் சூரை என்னும் முட்செடி வளர்ந்துள்ள சுடுகாட்டில் கொண்டு சென்று தீமுட்டிப் பின்பு நீரில் மூழ்கி அவ்வுடம்பில் ஒருவர் வாழ்ந்தார் என்னும் எண்ணத்தையும் விரைவில் விட்டொழித்து தத்தமக்குரிய அலுவல்களில் ஈடுபட்டு மறந்தார்கள். இதுவே ஒருவனுடைய நிலை.

உயிரானது உடம்பினின்று ஆடம்பரமும் ஆரவாரமும் இன்றி இரகசியமாக நீங்கி விடுகிறது. இரகசியமாக அது நீங்கினாலும் அதனைச் சுற்றத்தார் அம்பலப்படுத்துகிறார்கள். ஊரையெல்லாம் கூட்டுகிறார்கள். உலகம், தங்களை இறந்தவர் பால் மெத்த அன்புடையவர் என்று மெச்ச வேண்டு மென்ற கருத்தோடு தான் இவர்கள் அழுகிறார்கள். உண்மையில் உள்ளம் உருகிக் கண்ணீர் வடிக்கவில்லை. இதுகாறும் அன்பாய்ப் பெயர் சொல்லியும், முறை சொல்லியும் அழைத்தவர்கள் இப்பொழுது 'பிணம்' என்று அஃறிணையில் குறிப்பிடுகிறார்கள்.

“ மணமென மகிழ்வர் முன்னே

மக்கள் தாய் தந்தை சுற்றம்

பிணமெனச் சுடுவர் பேர்த்தே” - 3

என்கிறர் சுந்தார். இதுவும் அன்பின்மையைக் குறிக்கும் செயல். வீட்டில் தண்ணீரில் குளிப்பாட்டுவது போல் பாசாங்கு செய்துவிட்டு, பிறகு சுடுகாட்டில் நெருப்பால் சுட்டு விடுகின்றனர். இது அன்பாகாது. பிறகு தங்கள் உடம்பைத் தூய்மை செய்வார் போலச் சாடை காட்டித் தங்கள் மனத்திலே உள்ள சிறிது அன்பையும் கழுவித் தொலைத்து விடுகின்றனர்.

“ஒழிந்தார்கள்” என்பதனால், பின்னர் ஒரு போதும் நினைப்பது இல்லை என்ற இழிசெயல் உணர்த்தப்பட்டது. இறந்த உடல் உயிர் உள்ள போது பெற்றிருந்த பெயரை ஒழித்துப் பிணம் என்று குறிப்பிடப்படும். இறந்த உடல் பிணமானதைக் கண்டும், அதுபோல் நாமும் ஒரு நாளைக்கு இவ்வாறு ஆவோமே என்ற நினைப்புக் கொள்ளாமல் வாழ்நாள் வீணாக்குபவரை நோக்கியே “நினைப்பு ஒழிந்தார்கள்” எனப்பட்டது.

‘அழுதிட்டு’ பிணமென்று பேரிட்டு ‘சுட்டிட்டு’ என்ற அடுக்குகள் ஒன்றின் மேல் ஒன்றாக வந்து ‘ஒழிந்தார்களே’ என்று உருக்கத்தோடு பாட்டு முடிகிறது. உறவினர்கள் தண்ணீரில் மூழ்கி, அந்த தண்ணீரைக் கொண்டு இறந்தவனைப் பற்றிய நினைவையே கழுவி விடுகிறார்கள் என்று, மனத்தில் உண்மை பதியும் படி திருமூலர் யாக்கை நிலையாமை பற்றிப் பாடியுள்ளார்.

**“அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்**

**மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்**

**இடப்பக்கமே இறை நொந்ததே என்றார்**

**கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே” – 4.**

என்கிறது மற்றொரு பாடல், மனைவியைச் சமைக்கச் சொன்னார். அறுசுவையான சமையல் ஆயிற்று. சமைக்கும் பொழுது நல்ல மணம் வீசியது. நன்றாகச்

சுவைத்துச் சாதத்தைச் சாப்பிட்டார். மனைவியோடு தனித்து உரையாடினார். இடப்பக்கத்தில் சிறிது வலிக்கிறது என்றார். ஒரு நொடியில் உயிர் பிரிந்து விட்டது.

மனித வாழ்வின் நிலையாமையை உணர்த்தும் இம்மந்திரம் நாடக வேகத்துடன் மனதைக் கவரும் வண்ணம் அமைந்திருக்கிறது.

வாழ்க்கையின் நிலையாமையை மறந்து சுகங்களிலே ஈடுபட்டுக் காலத்தை வீணாக்குகிற பேதை மக்களுக்குக் கண்ணைத் திறந்து காட்டுகிறார் தவயோகி, வாழ்க்கை நிலையில்லாதது எனத் தெரிந்தும் நாம் அகங்காரத்துடன் நடந்து கொண்டால் அவர்தான் என்ன செய்வார். இதனால் யாக்கையின் மீதான புறப்பற்றைத் துடைத்து வாழ்வது சிறப்புடையது.

**சிவவாக்கியர் காட்டும் யாக்கை நிலையாமை:**

**“கறந்தபால் முலைப் புகா**

**கடைந்த வெண்ணெய் மோர்ப்புகா**

**உடைந்து போன சங்கின் ஓசை**

**உயிர்களும் உடற்புகா**

**விரிந்த பூ உதிர்ந்த காவும்**

**மீண்டு போய் மரம் புகா**

**இறந்தவர் பிழைப்பதில்லை**

**இல்லை இல்லை இல்லையே” – 5**

நாம் கறந்துவிட்ட பால் தான் திரும்பவும் போய் முலைக்காம்பில் ஏறாது. எவ்வளவு முயன்றாலும் அதை அங்கு ஏற்க முடியாது. மோரில் இருந்து கடைந்தெடுத்துவிட்ட வெண்ணெய் தான் திரும்பவும் மோரில் கலந்து உறவாட முடியாது. மோரில் தனியாகத்தான் வெண்ணெய் மிதக்கும். நல்ல நிலையில் உடையாமலிருக்கும் போது ‘பம்’ ‘பம்’ என்று முழங்கிய சங்குதான் உடைந்த பின்னர் அச்சங்கின் ஓசை அதைச் சென்றடைந்து ஒலிக்காது. உடம்பை விட்டு நீங்கிப்போன உயிர்களும் திரும்பவும் உடம்பினுள் புகவே புகாது. மலர்ந்து

உதிர்ந்த பூக்களும் உதிர்ந்த காய்களும் மீண்டும் போய் மரத்திலே ஒட்டிக் கொள்ளாது. இதை ஒப்பவே இறந்தவர்கள் எக்காலமும் பிழைத்தெழுவது இல்லை இல்லை எக்காலமும் இல்லை.

அழகானது என்று போற்றப்படும் மனித உடலானது நிலையில்லாதது. நீர்க்குமிழி போன்று தோன்றி மறையும் தன்மை வாய்ந்தது. எனவே, நல்ல உடல் வலிமை இருக்கும் போதே பிறர்க்குத் தம்மால் முடிந்த உதவிகள் செய்து உய்யும் வழியை ஒவ்வொரு வரும் நாட வேண்டும் என்பதை நாலடியார் பின்வருமாறு கூறுகிறது.

**“யாக்கையை யாப்புடைத்தாப் பெற்றவர் தாம்பெற்ற**

**யாக்கையா லாய பயன் கொள்க”**

என்னும் இப்பாடல் வரிகள் உடலில் உயிர் இருக்கும் போதே. பிறருக்கு உதவி செய்து வாழ வேண்டும் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. இதே கருத்தைப் புறநானுறு காட்டுகிறது.

**“நல்லது செய்த லாற்றீ ராயினும்**

**அல்லது செய்த லோம்புமி னதுதான்**

**எல்லாரு முவப்ப தன்றியும்**

**நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே” – 6**

என்கிறது புறநானூறு.

இளமை நிலைத்திருக்கும் போதே அறம் செய்ய வேண்டும். முதுமையில் செய்ய எண்ணினாலும் அருஞ் செயல்கள் செய்வதற்குரிய ஆற்றல் இல்லாது போய்விடும்.

உயிருடன் வாழும் போதே நல்லது செய்யுங்கள். அ∴து இயாலாதாயின் தீவினை செய்தலையாவது கைவிடுங்கள். அதுவே எல்லோரும் விரும்புவது. அதுவே மறுமையில் உம்மை நற்கதிச் சேர்க்கும் வழியுமாகும் என்கிறார் நரிவெரு உத்தலையார்.

**அழுகணிச்சித்தர் கூறும் யாக்கை நிலையாமை**

இந்த உடலை ஊற்றைச்சடலம் என்கிறார் அழுகணிச் சித்தர். இந்த உடலில் மொத்தம் ஒன்பது வாயில்கள் உள்ளன. கண்-2, காது-2, மூக்கு-2, வாய்-1, மலம் வெளியேறும் குதம்-1, சிறுநீர் வெளியேறும் கருவாய்-1, மொத்தம்-9.

காது துவாரத்திலிருந்து கசப்பான கழிவும், சிறுநீர்த் துவாரத்திலிருந்து உப்புக்கரிப்பான கழிவும், மலக்குழியிலிருந்து புளிப்பும் வெளியாகின்றன. இந்த உடலினைத் தினமும் கழுவாவிட்டால் சகிக்க முடியாத துர்நாற்றம் வீசிக் கொண்டிருக்கும். அதனால் இந்த உடலை ஊற்றைச் சடலம் (அழுக்கு) என்றும் உப்பிருந்த பாண்டம் என்றும் கூறுகிறார்.

**‘‘ஊற்றைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி**
**மாற்றிப் பிறக்க மருந்தெனக்கு கிட்டுதில்லையே**
**மாற்றிப் பிறக்க மருந்தெனக்கு கிட்டுமென்றால்**
**ஊற்றைச் சடலம் விட்டே என் கண்ணம்மா**
**உன் பாதஞ் சேரேனோ?’’ – 7.**

என்கிறார். மேலும்,

**‘‘பையூர் லேயிருந்து பாழூரிலே பிறந்து**
**மெய்யூரில் போவதற்கு வேதாந்த வீடறியேன்**
**மெய்யூரிற் போவதிற்கு வேதாந்த வீடறிந்தால்**
**பையூரும் மெய்யூரும் என் கண்ணம்மா**
**பாழாய் முடியாமோ?’’ – 8**

என் தாயின் கருப்பையிலிருந்து இந்த பாழும் ஊரிலே பிறந்த உண்மையான வேதாந்த வீட்டிற்குச் செல்ல வழியறியேன். இரவு பகலைப் போல இன்பம், துன்பம், பிணி, முதுமை, இறப்பு போன்றவை மாறி மாறி வருவதால் இவ்வூரை பாழான ஊர்

என்கிறார். உண்மையான வீடான வேதாந்த வீட்டின் இருப்பிடத்தை அறிந்தால் இந்த ஊரும் உலகும் பாழாய் போய் விடும் உலகம் அழிந்து விடும்.

**‘‘தாயைச் சதமென்றே தந்தையரை ஒப்பென்றே**

**மாயக் கலவி வந்து மதிமயக்க மானேனடி**

**மாயக் கலவிவிட்டு மதிமயக்கம் தீர்ந்தக்கால்**

**தாயு சதமாமோ என் கண்ணம்மா**

**தந்தையரும் ஒப்பாமோ?’’ – 9.**

இந்த உலகில் எதுவும் நிலையானது இல்லை. கடல் இருந்த இடம் மலையாகவும், மலை இருந்த இடம் கடலாகவும் மாறும் தன்மையுடையது. தாயும் தந்தையும் நிலையானவர்கள் என்று நம்பியிருந்தேன். ஆனால் அவர்களையும் சூரையங் காட்டிடை கொண்டு சென்று சுட்டு நீரினிலே மூழ்கி நினைப்பு ஒழிந்தேன். இந்த உலகில் எதுவும் நிலையானது இல்லை என்ற ஞானம் வரப்பெற்றேன்.

**பட்டினத்தடிகள் காட்டும் யாக்கை நிலையாமை:**

உடலின் அழியும் தன்மைப்பற்றி பட்டினத்தடிகளை விட அதிகமாகப் பாடியவர் எவரமில்லை.

**‘‘எரியெனக் கென்னும் புழுவோ வெனக்கெனு மிந்த மண்ணுஞ்**

**சரியெனக் கென்னும் பருந்தோ வெனக் கெனுந் தான் புசிக்க**

**நரியெனக் கென்னும் புன்னாயெனக் கென்னமிந் நாறுடலைப்**

**பிரியமுடன் வளர்த்தேனித னாலென்ன பேறெனக்கே.’’ 10.**

உயிர் பிரிந்தபின் இந்த உடலை எரி என்னும் தீயானது எனக்கென்று சொந்தம் கொண்டாடும். இல்லையில்லை இந்த உடலை எரியூட்டக் கூடாது சமாதி தான் வைக்க வேண்டும் அப்பொழுதுதான் நான் உண்ண இயலும் என்று புழுக்கள் சொந்தம் கொண்டாடும்.

என்னை மறந்து விட்டீர்களே! நான் விட்டு வைத்தால் தானே உங்களுக்கு என்று பருந்து போட்டியிடும். நான் தின்ற மிச்சம் தான் உனக்கு என்று நரிவந்து நிற்கும். இப்படிப் போட்டிப் போட்டுக் கொண்டு இவைகள் சுவைக்கத்தான் இவ்வுடலை இதற்குத்தான் அருமையாக வளர்த்தேனோ? என்கிறார் பட்டினத்தடிகள்.

இதனையே திருவிளையாடற் புராணமும் கூறுகிறது.

**“நாய் நமதென நரி நமதெனப் பிதா,**

**தாய் நமதென நமன் றமாதெனப் பிணி,**

**பேய் நமதென மனமதிக்கும் பெற்றிபோல்,**

**ஆய் நமதெனப் படும்யாக் கையாரதே”.** 11

என்கிறது திருவிளையாடல் புராணம்.

**‘‘ஊற்றைச் சரீரத்தை ஆபாசக் கொட்டிலை ஊன் பொதிந்த**

**பீற்றற் றுருத்தியைச் சோறிடுந் தோற்பையைப் பேசரிய**

**காற்றிற் பொதித்த நிலையற்ற பாண்டத்தைக் காதல் செய்தே**

**ஏற்றுத் திரிந்து விட்டேன் இறைவாகச்சி ஏகம்பனே!”** – 12.

இறைவனே! நாற்றம் பிடித்த இந்த அழுக்கு உடலை பொய் முதலிய நிரம்பிய ஒதுக்கிடத்தை, மாமிசம் நிறைந்த ஒன்பது துவாரமுள்ள துருத்தியை, அன்னமிட்டு அடைக்கும் தோற்பையை, சொல்லொணாத காற்றினால் அடைக்கப்பெற்ற நிலையில்லாத பாத்திரத்தைப் பெரிதும் விரும்பியே சுமந்து அலைந்தேன் என்கிறார்.

நான் எவ்வளவோ செல்லமாயிருந்தேன். ஆனால் என் தாய் கூடத் தான் வளர்த்த என் உடலைப் பிண மென்று இகழ்ந்து உடனே அப்புறப்படுத்தும் முயற்சியில் இறங்கிவிட்டார். பொன்னைப் போல போற்றிக் கொஞ்சிய மனைவியரும் பிணத்தை அப்புறப்படுத்த நல்ல நேரத்தைப் பாருங்கள் என்று கூறுகிறாள்.

தவமியற்றிப் பெற்ற என் மகன்களும் என் சடலத்தின் பின்னே வலம் வந்து குடமுடைக்கின்றனர்.

**"என் பெற்ற தாயரு மென்னைப் பிணமென் றிகழ்ந்து விட்டார்**

**பொன்பெற்ற மாதரும் போவென்று சொல்லிப் புலம்பி விட்டார்**

**கொன்பெற்ற மைந்தரும் பின்வலம் வந்து குடமுடைத்தார்**

**உன்பற்றொழிய வொருபற்று மில்லை யுடையவனே"** – 13.

என்கிறார். நான் உயிருடன் இருக்கும் போது தனிமையை விரும்பிய என் மனைவி இறந்தவுடன் என் உடலருகே தனித்திருக்கப் பயப்படுகிறார். அவள் விரும்பியது என் உயிரை என்றால் இந்த உடல் இல்லாமல் வந்தாலும் 'ஆவி' என்று அலறுகிறாளே! அவள் நேசித்தது என் உடலையும் உயிரையும் சேர்த்து என்றால் மாண்டு போன நான் மீண்டும் உயிர் பெற்றெழுந்தாலும் என்னை மனிதனென்றே ஒத்துக்கொள்வதில்லை. இதனால், வாழ்க்கையின் இறுதியாய் எனக்கு நின்றது இறைவனே! நான் உன் மேல் வைத்த பற்றுதல் மட்டுமே. மற்றவையெல்லாம் என்னைத் துரத்திவிட்டன என்கிறார் பட்டினத்தடிகள்.

**"கட்டியணைத்திடும் பெண்டீரு மக்களுங் காலத் தச்சன்**

**வெட்டி முறிக்கு மரம்போற் சரீரத்தை வீழ்த்திவிட்டார்**

**கொட்டி முழக்கி யழுவார் மயானங் குறுகியப்பால்**

**எட்டி யடிவைப் பரோ விறை வாகச்சி யேகம்பனே"** – 14.

இறைவனே! யமனென்னும் தச்சன், வெட்டி முறித்துத் தள்ளும் மரத்தைப்போல உடலைக்கீழே தள்ளி வீழ்த்தி விட்டால், கட்டித் தழுவும் மனைவியரும் பிள்ளைகளும் பறைகளை அடிப்பிடித்து வாத்தியங்களை முழக்கு வித்துப் புலம்புகின்றவர்களாய்ச் சுடுகாடு மட்டும் போந்து திரும்பி விடுவார்கள். தச்சன் மரத்தை வெட்டிச் சாய்ப்பது போலக் காலத்தச்சனும் சரீரத்தைக் கொன்று சாய்க்கின்றமையான் அவன் தச்சனெனப்பட்டான்.

**“எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத்தார்**

**எம்மாடுஞ் சும்மா டாம் ஏவர் நல்லார்**

**செத்தால் வந்து உதவுவார் ஒருவரில்லை**

**சிறுவிற கால் தீமுட்டிச் செல்லா நிற்பார்” – 15.**

என்கிறார் திருநாவுக்காசர்.

**“முடிசார்ந்த மன்னரு மற்றுமுள்ளோரு முடிவிலொரு**

**பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங் கண்டு பின்னுமிந்தப்**

**படிசார்ந்த வாழ்வை நினைப்பதல் லாற் பொன்னினம் பலவர்**

**அடிசார்ந்து நாமுய்ய வேண்டுமென்றேயறி வாரிலையே” – 16.**

கிரீடந்தரித்த அரசர்களும் மற்றவர்களும் இறுதிக் காலத்தில் ஒரு பிடி சாம்பலாக வெந்து மண்ணாவதையும் கண்டு, மேலும் இப்பூமியில் பொருந்திய வாழ்வை எண்ணாமல் இறைவனின் திருவடியை அடைந்து நாம் பிழைக்க வேண்டுமென்று உணருவோரில்லையே என்கிறார்.

**“ஊருஞ் சதமல்ல வுற்றார் சதமல்ல வுற்றுப் பெற்ற**

**பேருஞ் சதமல்ல பெண்டிற் சதமல்ல பிள்ளைகளுஞ்**

**சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே**

**யாருஞ் சதமல்ல நின்றான் சதங்கச்சி யேகம் பனே” – 17.**

என்ற பாடலின் மூலம் இந்த உலகில் நிலையானது எதுவும் இல்லை என்கிறார் பட்டினத்தார்.

### 3.3 செல்வம் நிலையாமை:

சிலநாளில் தோன்றிச் சிலநாளில் வாழ்ந்து, சிலநாளில் மறைந்து போவதாகிய இம்மக்களுடம்பிற் பிறந்தவர்களான நாம் எந்தவகையான

செல்வத்தைப் பெறுதற்கு முயலவேண்டு மென்றால், என்றும் அழியாததாய், உடம்பு அழிந்தாலும் தான் அழியாமல் நமது உயிரோடு சேர்ந்து நம்மை எல்லாப் பிறப்புகளிலுந் தொடர்ந்து வருவதாய் உள்ள அழிவில்லாத பெருஞ் செல்வமாகிய அறத்தை நாட வேண்டும்.

மக்கள் எந்தக் காரியத்தையும் தம் செல்வத்தைக் கொண்டு முடிக்க முடியும் என்று நம்பி, அப்பொருளினிடத்து விடாப்பற்றுக் கொள்கின்றனர்.

செல்வத்தைத் தேடுவதில் தமது வாழ்நாளை வீணாக்குகின்றனர். பிறகு அச்செல்வத்தை இரவு பகலுமாகப் பாதுகாக்கின்றனர். ஏழை எளியவர்க்கு உதவ மனம் வருவதில்லை. இப்படியெல்லாம் சேர்த்து வைத்து விட்டு தமக்கும் செலவழித்துக் கொள்ளாமல், வேறு நல்ல காரியத்திற்கும் செலவழிக்காமல் அப்படியே சாக்காடு எய்துகின்றனர்.

மனிதப் பிறவியின் பயன் பிறர்க்குத் தம்மால் இயன்ற உதவி செய்து வாழ்தலாகும். இன்று ஒருவரிடம் இருக்கும் செல்வம் நாளை அவரிடம் இல்லாமல் போய்விடும். எனவே பெருஞ்செல்வம் பெற்றிருக்கிறோம் என்ற இறுமாப்பில்லாது நிலையற்ற செல்வத்தின் மீது ஆசை கொள்ளாது தானம் செய்வதைப் பிறகு பார்த்ததுக்கொள்ளலாம் என்ற எண்ணமின்றி அதிக அளவு பொருளீட்டுவதில் வாழ்நாளை வீணாகக் கடத்தாமல் கையில் செல்வம் இருக்கும்போதே பிறருக்கு அதைக் கொடுத்து வாழ வேண்டும்.

செல்வத்தை நிலையற்றது என மதித்து அதன்பால் பற்று இன்றி பற்றற்றான் பற்றினைப் பற்றி கிடக்குமாறு அறிவுறுத்துகிறார்கள் சித்தர்கள்.

**திருமூலர் காட்டும் செல்வம் நிலையாமை:**

> **"தன்னது சாயை தனக்குத வாதுகண்**
>
> **டென்னது மாடென் றிருப்பார்கள் ஏழைகள்**
>
> **உன்னுயிர் போம் உடல் ஒக்கப் பிறந்தது**
>
> **கண்ணது காணொளி கண்டு கொளீரே!" – 18.**

என விளக்கிக் காட்டுகிறார் திருமூலர்.

நம்முடைய நிழலென்று நாம் மிகுதிபடப் பேசுகிறோம். அது நமக்கு எந்தக் காலத்தும் எவ்வகை உதவியும் தந்தது இல்லை. செல்வமும் நம்முடைய கையில் இருப்பதால் நம்முடைய தென்று கூறுகின்றோம். உண்மையில் நோக்கில் அது சிவனுடையதே. இவ்வுண்மை கண்டும் தம்முடையதென்று அறிவிலாா் பலா் எண்ணிக்கொண்டிருக்கிறார்கள்.

தன்னுடைய உடலின் நிழல் தனக்குச் சிறிதும் பயன்படாமை கண்டும் என்னுடையது செல்வம், எனக்குரியது எனக்கொண்டு அதனைப் பிறர்க்கு உதவாது இருப்பார்கள் அறிவிலிகள். கருதத்தக்க உணர்வுடைய உயிரோ உடலைவிட்டுப் பிரிந்து போகும்.

உடலுடன் ஒரு சேரப் பிறந்தது கண். கண்ணான பொருள்களைக் காணுதற்கமைந்த ஒளியாகும். அவ்வொளி உடலில் உயிர் இருக்கும் நிலையினும் ஆற்றல் குன்றிப் பயன்படாமல் போகும். ஏனைச் செல்வங்களும் இவ்வாறு பயன்படாது என்றுணர்ந்து தாமுள்ள காலத்திலேயே தம் உடைமையைப் பிறர்க்கு ஈந்து பயன் கொள்ள வேண்டும்.

எந்த மரமும் தான் உண்டாக்கின பழத்தைத் தானே அருந்துவதில்லை. ஓரறிவு உயிர்களாகிய இவைகள் தன் விளைவைத் தானே பயன்படுத்திக் கொள்ளும் பேராசையும், சுயநல எண்ணமும் பெற்றில்லாதபோது ஆறறிவு உடைய நாம் எவ்வளவு தூரம் நல்லறிவுடையவர்களாக நடந்துகொள்ளவேண்டும் என்பது தெரிகிறது. செல்வத்தைப் பற்றிய இந்த அறிவு முக்கியமாக இருக்க வேண்டும். இவ்வறிவு இல்லாதவர்கள் எவ்வளவுதான் செல்வம் பெற்றிருந்தாலும் அவர்கள் ஏழைகளே ஆவர்.

**“வெயிற்கு ஒதுங்க உதவா உடம்பின் வெறு**

**நிழல்போல் கையிற் பொருளும் உதாவது” – 19.**

என்பது அருணகிரியார் திருவாக்காகும்.

அரிசி உணவு உண்ண முடியாத ஒருவன் ஏராளமான தனது நிலத்தில் விளைந்த நெல்மணிக்குன்றை உடையவராயினும் அவற்றை அவரால் எப்படி

அனுபவிக்க முடியும். இந்தச் செல்வத்தை நம்பாமல் பேரொளிப் பிழம்பாய் உள்ள இறைவனை நாம் நம்ப வேண்டும் என்பதை,

**"ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்**

**கூட்டிக் கொணர்ந்தொடு கொம்பிடை வைத்திடும்**

**ஓட்டித் துரத்திட் டதுவலி யார்கொளக்**

**காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே" – 20**

என விளக்குகிறார் திருமூலர்.

நிலையில்லாத செல்வம் உள்ள போதே நிலையான அறத்தைச் செய்து ஞானமாகிய செல்வத்தைப் பெற்றுவிட வேண்டும். பெறாவிடில் ஈட்டிய செல்வத்தைப் பிறர் கொண்டு செல்வர். தேனீக்கள் பல மரங்களிலிருந்தும் நெடு நாள் சேகரித்து வைத்திருந்த தேனை ஒருநாள் தீயார் எடுத்துச் செல்வர். அதுபோல ஈயார் ஈட்டிய செல்வத்தை வலியார் எடுத்துக் கொள்வர். 'செல்வத்துப் பயனே ஈதல்' என சங்க இலக்கியத்தார் காட்டும் செல்வம் என்பது என்றும் ஒருவனிடம் நிலைத்து இராது. அது வந்து கொண்டும், போய்க்கொண்டும் தான் இருக்கும். அதுவரும் போது ஒவ்வொன்றாய் வரும் போகும்போது விரைவில் ஒருசேர நீங்கி விடும். இதைத்தான் திருவள்ளுவரும்

**"கூத்தாட் டவைக் குழாத் தற்றே பெருஞ்செல்வம்**

**போக்கும் அது விளிந் தற்று" – 21.**

என்கிறார்.

பெரிய செல்வம் வந்து சேர்தல் கூத்தாடுமிடத்தில் கூட்டம் சேர்வதைப் போன்றது; அது நீங்கி போதலும் கூத்து முடிந்ததும் கூட்டம் கலைவதைப் போன்றது.

வண்டுகள் ஈட்டிய தேனைப் பூவின் மணத்தோடு சேர்த்துச் சுவையையும் மீட்டுக்கொண்டு வந்து ஒரு கொம்பில் அடையாக வைக்கும். அறிவிலிகள் பணம் சேர்ப்பது போல அவற்றை வலிவுள்ளவர்கள் எட்டித் துரத்திவிட்டு தேன் அடையைக்

கொள்ள தேனிருந்த விடத்தைக் காட்டிக் கொடுத்த வண்டுகள் கைவிட்டுச் சென்றதை ஒக்கும்.

உய்த்து ஈட்டிய தேனீக்கள் தேனையும் இழக்கின்றன. சிலசமயம் தம் உயிரையும் இழக்கின்றன. இப்படி இவை உயிரிழக்கப் பெறுவதற்கு அவைகள் ஈட்டி அமைத்த கூடுகளே காரணமாகின்றன. நாம் சேர்த்தும் சென்றிருந்தும் இன்னும் பல தொழில்களை ஆற்றியும் சேர்த்திட்ட செல்வமானது நம்மிடம் சேர்த்தும் நம்மைப் பணமுடையவன் எனப் பலரையும் அறியச் செய்கிறது.

தீயோராக இருப்பவர்கள் அந்தப் பொருளைக் கவரும் பொருட்டுக் களவு செய்தும், சில சமயம் கொலை செய்தும் நம்மைப் பொருளிழக்கவும், உயிரிழக்கவும் செய்கின்றனர். பொருட்செல்வம் நம்மைக் கைவிட்டு விடும். அருட் செல்வம் கடைநாளிலும் கை கொடுத்து உய்த்தியங்கும் என்பது துணியப்படும்.

**பட்டினத்தடிகள் கூறும் செல்வம் நிலையாமை**

**“பிறக்கும்பொழுது கொடுவந்த தில்லை பிறந்து மண்மேல்**

**இறக்கும்பொழுது கொடுபோவ தில்லை யிடை நடுவிற்**

**குறிக்குமிச் செல்வஞ் சிவன் தந்த தென்று கொடுக்கறியா**

**திறக்குங் குலாமருக் கென்சொல்லு வேன்கச்சி யேகம்பனே”** – 22

என்கிறார் பட்டினத்தடிகள்.

திருக்காஞ்சியிலெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனே உலகத்தில் பிறக்குங்காலத்தில் ஒரு பொருளுங் கொண்டு வந்ததில்லை. பிறந்து பிறகு இறக்குங் காலத்திலும் ஒன்றுங் கொண்டு போவதில்லை. இடைக்காலத்தில் தோன்றும் பொருட் செல்வம் சிவபெருமானால் அளிக்கப் பெற்றதென்று உறுதிகொண்டு இரப்பவர்க்குக் கொடுக்கத் தெரியாமல் வாளா மாண்டுபோகும் கீழ் மக்களுக்கு என்ன உரைப்பேன் என்கிறார் பட்டினத்தார்.

பிறப்புக்கும் இறப்புக்கும் இடையில் மக்கள் பெறும் செல்வம் சிவனருளால் கொடுக்கப்படுவதாதலால் குறிக்குமிச் செல்வம் என்றார். அறிவுடையோர் பொருளை

வறியோர்க் கீந்து பேறு பெறுவர். அல்லாதார் பொருளைப் பொருளாகக் கொண்டு இடர்ப்படுவர்.

பிறப்பு இறப்பு நினைவுதோன்றும் ஒருவனுக்கு இடை வாழ்வின் நிலையாமையும், அவ்வாழ்விலும் பொருளாராய்ச்சியும், அவ்வாராய்ச்சியால் அது சிவனுடைமை என்ற உணர்வும், அவ்வுணர்வால் கொடைக்குணமும் உண்டாகும். ஆகவே மக்களுக்கு பிறப்பு, இறப்பு நினைவு இடையறாது தோன்றல் வேண்டும்.

மேலும், கூறுகிறார்.

**"தாயும் பகைகொண்ட பெண்டீர் பெரும்பகை தன்னுடைய**
**சேயும் பகையுற வோரும் பகையிச் செகமும் பகை**
**ஆயும் பொழுதி லருஞ் செல்வ நீங்கிலிங் காதலினாற்**
**தோயுநெஞ் சேமரு தீசர் பொற் பாதஞ் சுதந்திரமே"** – 23.

மனமே! இவ்வுலகத்தில் அரிய பொருட் செல்வம் நீங்குமானால் பெற்ற தாயாரும் பகையாவர்; மணஞ் செய்த மனைவியரும் பகைவராவர்; தன் பிள்ளைகளும் பகைவராவார்கள்; சுற்றத்தினரும் பகைவராவர்; இவ்வுலகிலுள்ள மற்றவர்களும் பகைவராவார்கள். ஆனபடியால் நமக்குச் சுதந்தரமாய் உள்ளது திருவிடை மருதூரிலெழுந்தருளியுள்ள சிவபெருமானது திருவடியேயாகும்.

இவ்வாறு நிலையில்லா பொருட் செல்வத்தை நாடுவதை விட நிலையான இறைவனின் திருவடியை நாடுங்கள் என்கிறார்கள் சித்தர்கள்.

**3.4 இளமை நிலையாமை:**

நாம் இளமையை அழகுகளை அனுபவிக்கும் இனியபருவமாக மட்டுமே எண்ணிக் கொண்டிருக்கிறோம். அலட்சியப்படுத்துகின்றோம். ஆலயங்களுக்குச் சென்றால் கூட அங்கு இறைமை பற்றிய சிந்தனைகளுக்கு இடம் தராமல் இளமை கொதிப்புகளுக்கு இதம் தேடுகின்றோம்.

இறைவனைத் தரிசிக்க வேண்டிய விழிகள் இளமைப் பிம்பங்களின் அழகுகளைப் பருகுகின்றன. இறை சிந்தனை நிறைய வேண்டிய இதயத்தில் இனப்பரிமாற்றக் கற்பனைகள் நிறைகின்றன.

இளமை! மனித வாழ்வின் முக்கிய அம்சம். இளமை என்றால் அழகு என்ற பொருள் உண்டு. ஆகவே இளமைப் பருவத்தில் அழகை விரும்புவது மனித இயற்கை.

இந்த அழகுக்காக; மாயக் கவர்ச்சிக்காக மனித மனம் அலையாய் அலைக்கழிகின்றது. ஆனால் இந்த அழகு நீரில் உள்ள குமிழி என்பதை நம்ப மறுக்கின்றது இந்த மனம்.

கண்ணெதிரே தினம் தினம் இந்த அழகு சிதைவதை சின்னாபின்னமாவதை காண்கின்றோம். வியாதியாய், விபத்தாய் கோர நிகழ்ச்சிகளாய், கொலைகளாய் அழிவுகளை நித்தமும் நிகழ்த்தி அநித்யமான சூழலை நமக்கு இறைவன் காட்டுகின்றான். அழியக் கூடிய இந்த உடலழகின் மேல் அளவில்லாத காதல் கொள்ளாதே! பிறகு அழியும் சமயத்தில் அந்த அழிவுக்காக அழுது புலம்பாதே என்று உணர்த்துகின்றான் இறைவன்.

ஆனால், அந்த மோக மாயைக்கு நித்தமும் நாம் ஆட்படுகிறோம். பாரதி கூட ‘‘மோகத்தை அழித்து விடு, இல்லாவிடில் என் மூச்சை நிறுத்தி விடு’’ என்கிறாரென்றால் அந்த மோகத்தின் வலிமைதான் எத்தகைய துன்பம் வாய்ந்தது.

எவ்வளவு அழகான உடல், கற்கண்டே, பாலே, தேனமுதே, திகட்டாத தீங்கரும்பே, தமிழின் சுவையே, தங்கச் சிலையே, தவழும் நிலவே, சதிராடும் பூங்கொடியே என்றெல்லாம் புகழ்ப்படும் இந்த அழகான உடல் உயிர் இல்லாமல் இருக்கும்போது ஏளனப்படுத்தப் பட்டு பிணம் என்று தானே அழைக்கப்படுகின்றது.

இளமையானது மரத்திலிருந்து கனி உதிர்வது போல இளமை வீழ்ந்துவிடும் என்கிறது நாலடியார்.

**‘‘பனிபடு சோலைப் பயன்மரம் எல்லாம்**

**கனி உதிர்ந்து வீழ்ந்தன்று இளமை’’ – 24.**

இளமை கழிந்து போகுமுன் அருமையான செயலைச் செய்துவிடவேண்டும். முதுமையில் செய்ய எண்ணினாலும் அருஞ்செயலைச் செய்வதற்குரிய ஆற்றல் இல்லாது போய்விடும்.

**“அன்றறிவாம் என்னா தறம்செய்க மற்றது**

**பொன்றுங்கால் பொன்றாத் துணை” – 25.**

எனத் திருவள்ளுவர் விளக்கியுள்ளார்.

காலையில் கீழ்த்திசையில் இளமைச் செவ்வியுடையதாய் எழுந்து விரைந்து மேற்சென்ற கதிரவன் நண்பகலில் இளமைத்தன்மை நீங்கிப் பின்னர் முதுமை எய்தி மாலையில் மேற்திசையில் வீழ்ந்து மறைதலைக் கண்ணாரக் கண்டிருந்தும், இளமையெழுச்சி என்றும் நிலையுடையதன்று என்பதனை உணர்ந்தாரில்லை என்பதை

**“கிழக்குகெழுந் தோடிய ஞாயிறு மேற்கே**

**விழக் கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்**

**குழக்கன்று மூத்தெரு தாய்ச் சில நாளில்**

**விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே” – 26.**

என்று எடுத்துக்காட்டுகிறார் திருமூலர்.

தன் வீட்டில் பிறந்த பசுவின் இளங்கன்று சில ஆண்டுகளில் காளைப் பருவம் நீங்கி முதுமையடைந்து எருதாய் செயலற்று இறத்தலைக் கண்ட பின்னரும், இப்பரந்த உலகில் வாழும் மாந்தர் தமது இளமையும் நிலையானதல்ல என்ற உண்மையை அறிந்திலா். சூரியனும் கன்றும் சீக்கிரத்தில் இளமையை இழந்து விடும்போது, மனிதன் மட்டும் எவ்வாறு தோன்றிய படியே இளமையோடு இருக்கமுடியும். அறிவில்லாா் இவ்வுண்மையை உணரவில்லை என இரங்குகிறாா் திருமூலா்.

சூரியன் தோற்றத்தையும், மறையும் நிலையினையும் தினம் தினம் கண்கொண்டு பார்த்தும் கூட, தோன்றிய பொருளுக்கு அழிவுண்டு! என்பதை அறியாது இருந்தவர் விழியிலாமாந்தர் எனப்பட்டனர்.

நிலையாமை பற்றித் தெரிந்து இறைவனை இளமை தொட்டே பற்றி வாழ்தல் சிறந்ததாம். இந்த இளமைப் பருவமானது எவரையும் மதிக்கவிடாத இயல்புடையது. சிலர் இப்பருவ விளைவுகளை முதுமையிலே அடைந்து வருந்தி அழுவர்.

**பட்டினத்தார் பாடலில் இளமை நிலையாமை**

காது நன்றாக இருக்கும் வரைதான் ஊசியானது நூலை சுமந்து கொண்டு கிழிந்த துணிகளைத்தைக்கும். ஆனால் காதறுந்து போனாலோ அதனால் எந்த ஓர் உபயோகமும் கிடையாது. முதுமை வந்துவிடின் இயலாமை வந்துவிடும். இயலாமை மற்றவர்க்கு பாரந்தான்.

**‘‘திதுற்ற செல்வமென் தேடிப் புதைத்த திரவியமென**

**காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே’’**

**‘‘வேதத்தினுட் பொருள் மண்ணாசை மங்கையை விட்டுவிடப்**

**போதித்த வன்மொழி கேட்டிலையோ புண்ணியத்தால்**

**ஆதித்தன் சந்திரன் போலே செய்த வெளிச்சம் தாழ்பொழுது**

**காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே’’ – 27.**

என்ற பாடலில் இளமை நிலையாமையை எடுத்துக்காட்டுகிறார் பட்டினத்தார்.

**3.5 உயிர் நிலையாமைமை:**

உடம்பில் உயிர் என்றும் நிலைத்திருக்காது என்பதைத் திருமூலர்,

**‘‘தழைக்கின்ற செந்தளிர்த் தன்மலர்க் கொம்பில்**

**இழைக்கின்ற தெல்லாம் இறக்கின்ற கண்டும்**

**பிழைக்கின்ற எப்பெரு மானடி ஏத்தார்**

**அழைக்கின்ற போதறி யாரவர் தாமே" – 28.**

என்ற பாடலில் எடுத்துக்காட்டுகிறார்.

தழைத்து வளர்கின்ற தளிர்களையும், குளிர்ந்த மலர்களையும் உடைய மரத்தின் கிளையில் கூட்டினை இழைக்கப் பெற்று வாழ்கின்ற பறவைக் குஞ்சுகள் எல்லாம் அதன் கண்ணேயே தங்கிவிடாமல் காலம் வந்தபோது வேறிடம் நாடிச் செல்லும். இதைக் கண்டும் உயிர் உடம்பிளை வைத்தும் எம்பெருமானாகிய இறைவன் திருவடிகளைப் போற்றி வழிபடாதார் கூற்றுவன் தம்மை அழைக்கும் காலத்து அவர்கள் தாம் செய்வது இன்னது என்றறியாது வருத்துவர் எனக் காட்டுகிறார் திருமூலர்.

மரத்திலிருந்து பழம் நழுவி விழுவதைப் போல் உயிரானது, தான் அடைய வேண்டிய பக்குவத்திற்கு இந்த உடம்பின் இளமையை நீட்டிக்கொண்டு காரியம் முடிந்தவுடன் கழன்று போய் விடுகிறது. உயிர் எப்பொழுதுமே இந்த உடலிலேயே நித்தியமாய் நின்று விடும் என எண்ணிக் கொண்டிருத்தல் தவறு. இளமையை நம்பி ஏமாந்து விடாமல் ஞானமார்க்க நெறியைப் பின்பற்றி இறைவனை வணங்கவேண்டும்.

உயிர் நீங்கிய காலம் அணுகிய பொழுது என்ன செய்வது எனத் தெரியாது வருத்தமுறுவர். அழைப்பு நமக்கு இரண்டு இடங்களிலிருந்து வரும். ஒன்று இயமனிடமிருந்து வரும். மற்றொன்று சங்கரனிடமிருந்து வரும்.

எனவே, உயிர் உடலைவிட்டு எப்பொழுது வேண்டுமானாலும் பிரிந்து விடும். உடலில் உயிர் உள்ள போதே இறைவனை வணங்குதல் வேண்டும். வணங்கி, இறைவன் திருவருள் பெற்றால், இயமன் அழைக்கும்பொது அஞ்சாமல் இருக்கலாம்.

உடம்பின் நிலையாமையைத் தெளிவோடு விளக்கிய திருமூலர், உடம்புக்கும் உயிருக்கும் உள்ள உறவினுடைய தன்மையை பின்வருமாறு கூறுகிறார்.

**"ஐவர்க்கும் ஒருசெய் விளைந்து கிடந்தது**

**ஐவரும் அச்செய்யைக் காத்து வருவார்கள்**

**ஐவர்க்கும் நாயகன் ஓலை வருதலால்**

**ஐவரும் அச்செய்யைக் காவல் விட்டாரே" – 29.**

மெய், வாய், கண், மூக்கு, செவி என்கிற ஐந்து பேருக்கும் பொதுவாக உடம்பு என்னும் வயலில் பயிர் விளைந்து கிடந்தது. அதை இந்த ஐவரும் காத்து வருகிறார்கள். இந்த ஐந்து பேருக்கும் தலைவனிடமிருந்து உத்தரவு வரும் (அதாவது மரணகாலம்) அப்போது ஐவரும் தாங்கள் காத்து வந்த வயலைவிட்டு ஓட வேண்டியதாகும்.

உடம்புக்குள் உயிர் நிற்பது நிலையான சம்பந்தமில்லை. ஓலைவரும் வரைதான் இந்த ஐம்புலக் காவல்பட்டா. இவ்வளவு நிலையற்ற முறையிலே உயிரின் தொடர்பு அமைந்திருக்கிறது. ஆகையால் இந்தக் கொஞ்ச காலத்துக்குள் செய்ய வேண்டிய நல்லறங்களைச் செய்து கடைத்தேற வேண்டும் என்று திருமூலர் கூறுகிறார்.

உடம்பினை நரை திரை முதலான வராது பேணிய சித்தர்களுடைய உடம்புகள், அவர்கள் இறந்து போன பின்னரும், ஏனையோரது உடம்பு கெட்டழிவது பொலக் கெட்டுப் பொகாமல் நீடித்திருக்கும். இந்த உடம்பு நீடித்திருப்பினும், உயிர் இதனுள் நீடித்திருக்க வேண்டும் என்பது நியதியன்று.

இறைவனை அறிந்து போற்றுவது முக்கியமான செயல். சாவுக்கே ஆளாகிக் கழிதல் சால்புடையதன்று. சிவயோகம் செய்தால் சிவனருளால் வாழ முடியும். சிவத்தை அகத்தே தரிசிக்க முடியும். அறம் செய்வோம், ஆண்டவனைப் போற்றுவோம்.

மானிடப்பிறவி கிடைத்தற்கரியது. பொறாமை பேசலாகாது. பிறர் பொருளைக் கவரக் கூடாது. நடுவு நினைத்து பேணி வாழ வேண்டும்.

### 3.6 தானச்சிறப்பு

மக்கள் யாவர்க்கும் கைம்மாறு கருதாது உதவி செய்தல் வேண்டும். இந்த உதவி உணவாலும் ஏனைப் பொருள்களாலும் நிகழ்த்தப்படும்.

ஆதலின் இவ்விருவகை உதவிகளையும் தானம் எனக் கொண்டு, அதன் சிறப்பை நமக்கு அறிவுறுத்துகின்றார் திருமூலர்.

செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருந்து உண்பதே சிறப்புடையது. பொருளை வழங்காமல் இறுகப்பிடித்து வைத்தலால் ஏதும் பயனில்லை. தானமே சமுதாயத்தைத் திருப்தியுடன் வாழச் செய்யும் சிறப்புடையதாகும்.

**“ஆர்க்கும் இடுமின்**

**அவரிவர் எண்ணன்மின்**

**பார்த்திருந் துண்மின்**

**பழம் பொருள் போற்றன் மின்**

**வேட்கை உடையீர்**

**விரைந்தொல்லை உண்ணன்மின்**

**காக்கை கரைந்துண்ணும்**

**காலம் அறிமினே” -30.**

உள்ளத்தில் கருணையை வளர்த்துக்கொள்ளுங்கள். இதுவே மனிதப் பண்பாகும் என்று சொல்லி ஈகையின் சிறப்பை விளக்குகிறார்.

பசித்தவர் யாராயிருந்தாலும் உணவு இட்டு உதவுங்கள் வேற்றுமை பாராட்டாதீர்கள்.

நிதானமாக மென்று சாப்பிட வேண்டும் என்பது உணவு விதி அதுபோல எளியவருக்குக் கொடுத்து விட்டு அதன்பிறகே சாப்பிட வேண்டும் என்பதும் உணவுக்கிரமத்தில் ஒன்றாகும்.

காக்கை உணவைக் கண்டபோது, பிற காக்கைகளையும் அழைத்தே சாப்பிடுகிற இயற்கைக் குணத்திலிருந்து வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்து கொள்ளுங்கள் என்கிறார்.

**அறம் செய்வான் திறன்:**

**"யாவர்க்கும் ஆம் இறை**
**வற்கொரு பச்சிலை**
**யாவர்க்கும் ஆம்பசு**
**வுக்கொரு வாயுறை**
**யாவர்க்கும் ஆம் உண்ணும்**
**போதொரு கைப்பிடி**
**யாவர்க்கும் ஆம்பிறர்க்**
**கின்னுரை தானே" – 31.**

இறைவர்க்கொரு பச்சிலையிடுதல் அனைவருக்கும் இயலும் அறமாம். பசுவிற்கு புல்லளித்தலும், தாம் உண்ணும் போது வறியவர்க்கு ஒரு பிடி உணவளித்தலும் பிறருக்கு இன்னுரை வழங்கலும் ஆகியவை யாவரும் எளிதில் கடைபிடிக்கக் கூடிய அறங்களாகும்.

தாம் உண்ணும்போது, ஒரு கவளம் பிற உயிர்களுக்கு என்று எடுத்து வைப்பது புராதன வழக்கம். இது எல்லோராலும் ஆகக்கூடிய அறச்செயல்தான். இதைத் தவறாமல் செய்ய வேண்டும் என்கிறார் திருமூலர்.

திருமூலர் இதைப் போலவே வேறு சில மனித தர்மங்களையும் எடுத்துக்காட்டுகிறார்.

இனிமையாகப் பேசுவது எளிதான செயல்தான் என்றாலும் மக்கள் அது மறந்து கடுஞ்சொல் பேசுகிறார்கள் என்று வருந்தி அதையும் சேர்த்துப்பாடுகிறார்.

ஆண்டவனை வழிபடுவதும், பிற உயிர்களிடத்தில் கருணை செலுத்துவதும் இனிய பேச்சும், வாழ்க்கைப் பண்பாடாகும்.

இந்தக் கடமைகள் அனைத்தும் எத்துணை ஏழையாக இருந்தாலும் அனைவராலும் செய்யக் கூடியதாகும். இதனை யாவர்க்கும் புரியும்படியாக எளிய தமிழில் எடுத்துச் சொல்கிறார்.

அவர், இவர், அச்சாதி, இச்சாதி என்று எண்ணாதீர்கள் யாவர்க்கும் சோறிடுங்கள். பசிப்பிணி தீர்த்தலே சிறந்த ஜீவகாருண்யமாகும். சுற்றிலுமிருப்பவர் முகம் பார்த்து, அவரை அழைத்து அவருடன் இருந்து உண்ணுங்கள்.

காக்கைக்கு ஒரு பிடிபோட்டு உண்ணல் நம் நாட்டில் தொன்று தொட்டு வரும் வழக்கமாகும். அதை மறக்காமல் கடைபிடித்து வாழுங்கள்.

**அறம் செய்யான் திறன்:**

அறம் செய்யாதவன் அடையும் துன்பங்கள் பற்றிக் கூறி, அறம் செய்ய வேண்டும் என்று வலியுறுத்துகிறார் திருமூலர்.

அறம் செய்யாமையால் நோய்கள் வந்தடையும் மறுமையில் நரகமே கிடைக்கும். அன்புள்ளம் அடைய இறைவனை ஏத்துமின் வறுமை ஒழியப் பெறலாம். வீடுபேறும் அடையப்பெறலாம்.

**“எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன**

**ஒட்டிய நல்அறம் செய்யா தவர் செல்வம்**

**வட்டிகொண் டீட்டியே மண்ணின் முகந்திடும்**

**பட்டிப் பாதகர் பயன் அறியாரே!” – 32.**

விரும்பி நல்ல தானதர்மங்களைச் செய்யாதவர் செல்வமானது, எட்டி மரமானது பழுத்துப் பெரிய பழங்களைக் கீழே வீழ்த்தியிருப்பது போன்றது.

வட்டி பெற்று செல்வத்தைத் தேடிப் பூமியில் சேர்த்திடும் அஞ்சாத பாதகர்கள் செல்வத்தின் பயனை அறியாதவர் ஆவர்.

எட்டிப் பழுத்துக் கீழே விழுந்தாலும் அதனை யாரும் புசியார். அதுபோலச் செல்வத்தைப் பெற்று அறம் செய்யாதவனை எவரும் விரும்பமாட்டார். வட்டிப்

பெற்றுப் பணத்தைச் சேர்ப்பவர் பட்டிகள் என்றும் பாதகர் என்றும் ஈண்டு இகழப்பட்டன.

எட்டி மரம் எவ்வளவுதான் கண்ணுக்குக் கவர்ச்சி கரமான கனிகளைப் பழுத்து நடுவூரில் நின்றாலும், அதன் பால் உள்ள கைப்புத்தன்மையால் எவரும் அப்பழங்களை விரும்பி உண்ணமாட்டார். அம்மரத்தினடியிலும் தங்க மாட்டார். கூடுமானால் அம்மரத்தை அதன் பயனின்மை கருதி, வெட்டி வீழ்த்தவும் முயல்வர்.

இதனை, **" நச்சுப்படா தவன் செல்வம் நடுவூருள்**

**நச்சு மரம் பழுத்தற்று"** - 33.

என்னும் திருக்குறளால் உணரலாம்.

இப்படிப்பட்டது தான் அறம் செய்யாதவன் ஈட்டி சேமித்து வைத்துள்ள பெருஞ்செல்வம் ஆகும்.

**தானம் பெறத் தக்கார், தகாதார்**

கொடைக்குணம் உடையவராக மட்டும் நாமிருந்தால் போதாது, தக்கவர்க்குக் கொடுக்கும் இயல்புடையவராக இருப்பதே நல்லது. தகாதவர்க்கு கொடுத்து உதவுதல் நன்றன்று.

பாம்புக்குப் பாலூற்றினாலும் விஷம்தான் அதிகப்படும். பசுவுக்குத் தண்ணீர் வார்த்தாலும் அதனால் கிடைப்பது நல்ல பாலாகும்.

அறிவுடைய ஒருவனுக்குப் பொருள் கொடுத்தால், அவன் அதனை நல்வழியில் பயன்படுத்துவான். இதனால் கொடுத்தவனுக்கு நன்மை விளையும்.

அறிவில்லாத ஒருவனுக்குப் பொருள் கொடுத்தால் அதனை அவன் தீயவழியில் செலவிடுவான். இதனால் கொடுத்தவருக்கே தீங்கு நேரிடும்.

எனவே நாம் நல்லவர்களை அறிந்து அவர்களுக்கு ஈதலே சிறப்பினைத் தரும்.

எந்தவொரு முயற்சியும் செய்வதற்கு இயலாத உறுப்பறைகள், பிணியாளர்கள் முதலியோர் பிறரிடம் பொருள் எதிர்பார்ப்பது ஒருவாறு பொருந்தும்.

இன்னின்னவர் ஆதரவு பெறுவதற்கு உரியர் என்று கூறுகிறது புறநானூறு.

**“சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்,**

**கூனும் குறளும் ஊமும் செவிடும்**

**மாவும் மருளும் உளப்பட” – 34.**

என்கிறது, புறம்.

**“காணார் கேளார், கால்முடம்பட்டோர்,**

**பேணா மக்கள், பேசார், பிணியோர்,**

**படிவ நோன்பியர், பசிநோய் உற்றோர்,**

**மடிநல் கூர்ந்த மாக்கள் யாவரும்” – 35.**

இவர்களெல்லாம் தானம் பெறத்தக்கவர்கள் என்கிறது மணிமேகலை.

எள்ளளவு பொன்னைச் சிவஞானிக்குக் கொடுத்தலால் மோட்சமும், சித்திகளும், இன்பமும் உண்டாகும் என்கிறார் திருமூலர்.

பூமி அளவு பெறும் பொன்னை அஞ்ஞானிகட்குக் கொடுத்தால் பயன் இல்லை. செல்வ வளமும் குறையும் என்கிறார் திருமூலர்.

**“திலமத் தனைபொன் சிவஞானிக் கீந்தால்**

**பலமுத்தி சித்தி பரபோக மும்தரும்**

**நிலமத் தனைபொன்னை நின்மூடர்க் கீந்தால்**

**பலமற் றேபர போகமும் குன்றுமே” – 36.**

என்கிறார்.

திலம், நிலம் என்பன சிறுமை பெருமைகளைக் காட்ட வந்த உதாரணச் சொற்கள்.

கொடுப்பதை தக்கார் யார்? தகாதார் யார்? என்பதை அறிந்தே கொடுக்க வேண்டும் என்பது இங்கு வலியுறுத்தப்படுகிறது. பாத்திரமறிந்து பிச்சையிடு என்பது பழமொழி.

**இரத்தலின் இழிவு**

இரத்தல் என்பது மிகவும் ஒரு இழிவான செயல் ஆகும். இரவாமல் இருக்கும் நிலையைப் "பிறன் கடைச் செலா அச்செல்வம்" என்று கூறுவர். முற்காலத்தில் ஆக்களுக்கு நீர் வேண்டுமென்று இரப்பது இழிவாகக் கருதப்பட்டது. அவைகளுக்குத் தானே முயன்று நீர் தேடித் தர வேண்டும் என்ற கொள்கையுடையவர்களாக அக்கால மக்கள் இருந்தனர்.

இதன் மூலம் தன் முயற்சியினால் வருகின்ற பொருளையே ஒருவன் செலவு செய்தற்கு உரியவன் என்னும் மேன்மையான கொள்கையை மக்கள் கடைபிடித்திருந்தனர்.

இறையடியார்களுக்கு கொடுத்து உதவவேண்டும் என்று கூறிய திருமூலர் அதனையே இங்கு எதிர்மறையாகக் கூறுகிறார்.

ஒழுக்கமும் நோன்பும் இலார்க்கு ஒன்றைக் கொடுப்பது, அழகான வரட்டுப் பசுவிற்குக் குனிந்து நிமிர்ந்து பசுந்தழைகளை இட்டுப் பாலைக் கறந்து குடிப்பது போலாகும் என்றும், பருவம் தவறிச் செய்த பயிரைப் போன்றதாகும் என்றும் திருமூலர் கூறுகிறார்.

தகுதியில்லாத அறிவிலிகளுக்கு ஒன்றை ஈவதால் பயன் இல்லை என்பதை இவ்விரண்டு உதாரணங்களால் விளக்குகிறார் திருமூலர்.

**"கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்**

**பாலைக் கறந்து பருகுவ தேஒக்கும்**

**சீலமும் நோன்பும் இலாதவர்க் கீந்தது**

**ஞாலம் கழிந்த பயிரது ஆகுமே!" – 37.**

என்கிறார்.

பசு அழகாக இருக்கிறது. அதற்குப் பசுந்தழைகளையும் இடுகிறோம். ஆனால் பால் மட்டும் தராது. இதனால் பயன் இல்லை. பருவகாலத்தில் பயிர் செய்ய வேண்டும். பருவம் தவறிப் பயிர் செய்வதால் பயன் இல்லை. இதுபோன்றது தான் ஒழுக்கமில்லாதவர்களுக்கு ஒன்றைக் கொடுத்தலாகும்.

**“ஈவது யோகம் இயம நியமங்கள்**

**சார்வ தறிந்தன்பு தங்கு பவர்க் கன்றி**

**ஆவ தறிந்தன்பு தங்கா தவர்களுக்கு**

**ஈவ பெரும்பிழை என்று கொள் வீரே” – 38.**

இறைவனுடைய அடியார்களுக்கு ஒரு பொருளை ஈவது நன்மை பயப்பதாகும். இறையடியார்கள் இயமம் என்னும் இயல்பு உடையவராக இருத்தல் வேண்டும். அதாவது ஒருவிதமான தீயபழக்கமும் இத்தகையோரிடம் இருத்தல் கூடாது. நன்மை பல புரிபவர்களாகவும் இருக்க வெண்டும். நன்மை பல புரியும் இயல்புடைமைக்கு நியமம் என்று பெயர். இவர்கள் நீதியுணர்ந்தவர்களாக இருப்பார்.

இவ்வாறு எல்லோரும் இன்புற்றிருக்க வேண்டுமென்கிற அன்பு நாட்டமுடையவராகிய சிவன் முத்தராக இந்த உலகிலே இறை பணியே புரிபவர்கள் சிவஞானியர்.

இத்தகைய சிவஞானியர்களுக்கு ஒரு பொருளைத் தருவது பயனளிப்பதாகும். இவர்களுக்குக் கொடுப்பது இறைவனுக்கேக் கொடுப்பது போலாகும்.

இத்தகைய இயம, நியமங்களை கடைப்பிடிப்பவர்க்கு ஈவதே தக்கது ஆகும். அவற்றை மேற் கொள்ளாதவர்க்குக் கொடுப்பது பெருங்குற்றமாகும் என்கிறார் திருமூலர்.

### 3.7 நல்குரவு:

இவ்வுலக வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. வறுமை கூடாதது. அதனால் திருநீக்கப்பட்டார் இன்னல்களை எண்ணிப்பார்த்து நாம் திருந்தவேண்டியது நம் கடமையாகும்.

**“புடவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை**

**அடையப் பட்டார்களும் அன்பில ரானார்**

**கொடையில்லை கோளில்லை கொண்டாட்டமில்லை**

**நடையில்லை நாட்டில் இயங்குகின் றார்கட்கே” – 39.**

என்று பாடுகிறார் திருமூலர்.

உடுத்திய ஆடை கிழிந்து பயனற்றுப் போனதைப் போல நம் வாழ்க்கையும் பயனற்றது. நம்மால் விரும்பி அடையப்பெற்ற பெண்டிரும் மக்களும் ஏவலரும் நம்மாட்டு அன்பிலராயினர்.

ஆதலின் கொடுப்பதில்லை, வாங்குவதில்லை, கொண்டாட்டம் இல்லை. நாட்டில் நடப்பில்லை.

புடவை மானத்தைக் காக்க உடுத்தப்படுவது. அதுபோல பணமும் மானத்தைக் காக்க வல்லது. ஆதலின் புடவையை உவமை காட்டினார் திருமூலர்.

பொருள் இருந்தால்தான் பலரும் வந்து சேர்வர். அன்பு காட்டுவர். பொருள் இல்லையென்றால் அன்பு காட்டார். பொருள் இல்லாதார் தருமம் செய்ய இயலாது. ஆதலின் கொடையில்லை என்றார்.

கொண்டாட்டம் என்பது பண்டிகை, விழா முதலியன. பணம் இருந்தால் தான் நிமர்ந்து நேரே நடக்க இயலும். அஃது இன்றேல் தலை குனிந்துதான் நடக்க வேண்டும். ஆகவே நடையில்லை எனப்பட்டது.

பொதுவாக நாட்டில் நல்வாழ்க்கை நடைபெறுவதற்கு உடை, வீடு, அன்புடையச் சுற்றம், கொடுக்கல், வாங்கல், கொண்டாட்டம், செல்வாக்கு இவை வேண்டுவனவாம். இவ்வளவும் இல்லாத வாழ்க்கை உப்பில்லாத கறிபோன்று சப்பென்று இருப்பதாகும்.

**“கற்குழி தூரக் கனகமும் தேடுவர்**

**அக்குழி தூர்க்கை யாவர்க்கும் அரியது**

**அக்குழி தூர்க்கும் அறிவை அறிந்தபின்**

**அக்குழி தூரும் அழுக்கற்ற வாறே" – 40.**

தூர்க்க முடியாத குழிபோல்வது வயிறு. ஒருவேளை உணவோடு அது அமையாதது.

**"ஒருநாள் உணவை ஒழியென்றால் ஒழியாய்**

**இருநாளுக்கு ஏல் என்றால் ஏலாய் - ஒரு நாளும்**

**என்நோ வறியாய் இடும்பை கூர் என்வயிறே**

**உன்னொடு வாழ்தல் அரிது" – 41.**

என்ற ஔவையார் பாட்டினால் வயிற்றின் தொந்தரவுகள் அறியப்படுகிறது.

இப்படிப்பட்ட வயிற்றை நிரப்பும் பொருட்டு 'சேவித்தல்' முதலான ஊழியங்களைச் செய்து பொருள் தேடுகின்றனர் உலக மக்கள். அப்படி எவ்வளவு தேடினாலும் அவ்வயிற்றுக்குழி தூர்க்கப்பட முடியாது.

அப்பசியை ஆற்றும் வழி ஒன்றுள்ளது. அது திருவடி ஞானம் அடையப் பெற்றார்க்கு, அழுக்கற்றுப் போவதனால் பசி முதலான துயரங்கள் இலவாம்.

சிவஞானச் செல்வர்க்கு இறைவனே சோறும், தண்ணீரும் வாகனங்களும் பிறவும் நல்கி ஆதரித்தமை வரலாறுகளால் அறியப்படுகிறது.

உதாரணமாக சுந்தரர் வாழ்க்கையில் இறைவனே ஐயமேற்று அன்னம் ஈந்த வரலாற்றைக் கூறலாம். "சுந்தரர் திருக்கச்சூர் சென்று ஆலக்கோயிலினுள்ளே புகுந்து, கண்ணார்ந்த இன்னமுதைக் கையாரத் தொழுது பாடி வழிபட்டு வெளிவந்து மதிற்புரத்தில் நின்றார்.

அமுது செய்துதரும் பரிசனங்கள் வந்து சேராமையால் பசியுடன் இருந்தனர். வன்தொண்டரது பசியைத் தீர்க்கத் திருவுளங்கொண்ட பரமனார் ஒரு வேதியராகி ஓடு ஒன்றை ஏந்தி அன்பரிடம் போய், "ஐயா! நீர் பசித்திருக்கின்றீர் போலும்! சற்று இங்கு வரும் உமக்குச் சோறு இரந்து தருவேன்" என்று கூறித் திருக்கச்சூரிலுள்ள மனைகள் தோறும் போய், அக்கடும்பகலில் அன்னம் இரந்து கொண்டு வந்து,

“ஐயா! இந்தாரும் பசி தீர உண்ணும்”, என்று அளித்தருளினார். ஆரூரர் அவருடைய அருள் திறத்தைப் பாராட்டித் தொழுது வாங்கி அடியார்களுடன் அருந்தினார். உடனே இரந்தளித்த எம்பிரானார் காத்தருளினார். மறையவர் மறைதலும் ‘இறைவரே அவர்’ என்று உணர்ந்து, எந்தையின் இன்னருளை வியந்து திருப்பதிகம் பாடினார்” – 42.

இவ்வாறு இறைவனே அடியவர்க்கு அன்னம் அளித்தமை அறியலாம். வயிறும் ஒரு பள்ளமான இடம். ஆதலின் அ∴து இங்கு குழி எனப்பட்டது. அதன் வன்மை கருதி அதனைக் கற்குழி என்றார்.

ஒருவேளை உணவு கொடுத்து வயிற்றுக்குழியை நிரப்பியதும் மறுவேளை அவ்வயிறு குழியுடன்தான் காணப்படுகிறது. ஆகவே, வயிற்றுக்குழியை அடைக்க முயல்வதைவிட மலமாயையாகிய குழியை அடைக்க முயலவேண்டும் என்று திருமூலர் வலியுறுத்துகிறார். அக்குழியை அடைக்க பொருள் வேண்டாம். அறிவே போதும் என்கிறார்.

அக்குழி தூர்க்கும் அறிவாவது இறைவன் திருவடிக் கண்ணேயே ஒன்றியிருக்கும் திருவடி ஞானம். அத்திருவடி ஞானம் பெற்றோர்க்கு பசி, பிணி முதலியன இல்லை.

எப்படிப்பட்டவர்க்கும் அருள் துணையின்றி அக்குழியைத் தூர்க்க இயலாது. அக்குழியினைத் தூர்க்கும் அறிவாகிய திருவடியுணர்வை உணர்ந்தபின் பல மாயைகள் மங்கலாகி அழுக்கறும். அழுக்கறவே அக்குழி தானே தூரும்.

### 3.8 அன்புடைமை:

அன்பு என்ற குணம் மிகமிகச் சிறந்தது. அன்பு, துன்ப நோய்க்கு மருந்தாகவும் இருக்கிறது. இன்ப விளைவுக்கு ஊற்றுக் கண்ணாகவும் இருக்கிறது. அன்பு தன்னைக் கொண்டவனையும் மகிழ்விக்கிறது; சார்ந்தோனையும் மகிழ்விக்கிறது; இல்லை, அன்பு அவனைப் பைத்தியமாக்கி விடுகிறது. ஆண்டவனாகிய அவன் அன்பிற்கு அடிமையாகின்றான். இரப்பாரைக் காப்பவன், இரப்பவனாக மாறுகின்றான். இந்த அன்பினைப் பெற்று வாழ்வாங்கு வாழ வையத்திலுள்ளோரை வழிநடத்த சித்தர்கள் முயல்கிறார்கள்.

அன்பின் ஊற்றே அறமாய் விரிகிறது. அன்பின்றி அறமில்லை; அருளில்லை, இன்பமில்லை, அன்பினால் உருகியுருகி மணிவாசகப் பெருமான் சிவமயமானார். அன்பின் தீவிரத்தால் ‘சிவம் வாய்க்கும். அன்பே சிவமாகும் என்பர் அறிஞர். தேனும் இனிப்பும், பாலும் வெளுப்பும் போலும் அன்பும் சிவமும் ஒன்றேயாகும்.

தமிழகம் தந்த ஒரு நெறியாகிய சிவநெறி அன்பினையே எல்லாமாக எடுத்துக்காட்டும் நெறியாகும். தமிழ் மறை தந்த திருமூலர் பரம்பொருளாகிய சிவத்தை அன்பு என்றே குறிப்பிடுகிறார். பரம்பொருளை அன்போடு உருகி அகம் குழைந்தால் அவனை எளிதில் பெற்று அனுபவிக்கலாம் என்று குறிப்பிடுகிறார்.

**“அன்பு சிவம்இரண் டென்பர் அறிவிலார்**

**அன்பே சிமாவ தாரும் அறிகிலார்**

**அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்**

**அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே”** – 43.

என விளக்கிக் காட்டுகிறார்.

அன்பாகிய திருவருளும் இன்பமாகிய சிவனும் மணியும் ஒலியும் பொல் ஒன்றே. அவற்றை இருவேறு பொருள்கள் என்று கூறுவோர், மெய்யுணர்வு கைவரப் பெறாதவர் ஆவார். அன்பாகிய திருவருளே இன்பமாகி சிவனுக்குத் திருமேனியாகும். சிவபெருமான் கருணையே உருவானவன் ஆதலால் அவன் அன்பு வடிவினன் என்பது பெறப்படுகிறது.

ஆகவே, அன்பு சிவமயமாயிற்று. கண்ணப்பர் அன்புப் பிழம்பானவர். அதனால் அவர் சிவவடிவினர். அங்ஙனம் சிவத்திற்கும் தனக்கும் வேறுபாடு கருதாத காரணத்தால் தான், இறைவன் கண்ணில் தம் கண்ணை எடுத்து அப்பினார்.

கண்ணப்பனுக்கு இனிய காளத்திநாதனைச் சிவகோசாரியார் என்னும் வேதியர் முறைப்படி பூசனை செய்து வந்தார்; கண்ணப்பன் இறைச்சியைக் கொண்டு திருக்கோயிலில் இட்டதைக் கண்டு செய்வதொன்றறியாது கவலை கொண்டிருந்தார் அவர். அதை உணர்ந்த இறைவன் அவன் கனவிலே தோன்றி,

**“அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்**

**அவனுடைய அறிவெல்லாம் நமையறியும் அறிவென்றும்**

**அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாமென்றும்**

**அவனுடைய நிலையிவ்வாறறி நீயென் றருள் செய்வார்” – 44.**

சேக்கிழார் பெருமான் திருவாக்கு இது.

இதே கருத்தினைக் கம்பரும் காட்டுகிறார். தாயின் சொல்லைத் தலைக்கொண்டு தனக்குரிய நாடு துறந்து கங்கைக் கரையை வந்தடைந்தான் என்று அறிந்த குகன் அக்குரிசிலைக் காணப் புறப்பட்டான். தனக்கினிய கங்கையாற்று மீனையும் கொம்புத் தேனையுமே எடுத்துக் கொண்டு சென்றான். இவ்விரண்டையும் இராமன் திருமுன்பு வைத்து ஐயனே! தேனும் மீனும் திருத்திக் கொணர்ந்தேன். தேவரீர் திருவமுது செய்தருள வேண்டும் என்று இறைஞ்சி நின்றான். அச்செயல் நிகழும் போது இராமனுடன் விருத்த மாதவர் சிலர் உரையாடிக் கொண்டிருந்தனர். அவர்கள் குகனது மனப்பான்மையை அறியாதவராய், தகாத பொருள்களை வேடன் எடுத்துவந்து அபசாரம் செய்து விட்டான் என்றெண்ணி வெறித்து நோக்கினர். அவர்கள் மனத்தில் நிகழ்ந்த கருத்தினை அறிந்த இராமன்,

**“அரியதாம் உவப்ப உள்ளத்து அன்பினால் அமைந்த காதல்**

**தெரிதரக் கொணர்ந்த என்றால் அமுதினும் சீர்த்த வன்றே” – 45.**

என்று விருத்தமாதவரை நோக்கி அருளினான் இராமன்.

**பட்டினத்தடிகள் உருகும் பான்மை:**

**“வாளால் மகவரிந்து ஊட்டவல் லேனல்லன் மாது சொன்ன**

**சூளா லிளமை துறக்கவல் லேனல்லன் தொண்டு செய்து**

**நாளாறிற் கண்ணிடந் தப்பவல் வேனல்ல னெனினிச் சென்**

**றாளாவ தெப்படி யோதிருக் காளத்தி யப்பருக்கே” – 46.**

என்கிறார் முற்றும் துறந்த பட்டினத்தடிகள்.

பெற்ற பிள்ளையை வாளாலறிந்து இறைவனுக்கு இன்னமுது ஊட்ட வல்லேனோ? திருநீலகண்டன் போல் மனையாள் வைத்த ஆணை கடவாது இளமையிலேயே ஐம்பொறிகளையும் வென்று, இன்பம் துறக்க வல்லேனா? ஆறுநாள் பழகிய பான்மையில் ஆராத அன்பு வாய்ந்தது கண்ணைப் பறித்து, இறைவன் கண்களில் அப்ப வல்லேனா? இத்தகைய தன்மையில்லாத யானும் மெய்யடியார் போல் நடித்து வீடகத்தே புகுந்திட விழைகின்றேன் என்று உள்ளத் துறவமைந்த உயரிய அடிகள் உருகுவாராயினர்.

கடந்தோர்க்கும் கடத்தலரிதாய மக்கட் பாசம் நீத்த ஒரு தொண்டர் பெரிய சிறுதொண்டராய் பேறு பெற்றார். மனையாள் மீது வைத்த பாசம் துறந்த மற்றொரு தொண்டர் இறைவனது அன்பிற்குரியவராயினார். கண்ணிற் சிறந்த உறுப்பில்லை என்றறிந்தும், ஈசன்பால் வைத்த அன்பினால் இரு கண்களையும் ஈந்தளிக்க இசைந்த ஒரு தொண்டர் மாறில்லா இன்பத்தில் மகிழ்ந்தார். இவ்வாறு அகம் புறமென்னும் இருவகைப்பற்றையும் அறவே களைந்து இறைவன் பால் அன்பை வளர்த்த அடியாரது நிலையை நினைத்து பட்டினத்தடிகள் உருகும் பான்மை போற்றத்தக்கதாகும்.

**அன்பு செய்வாரை அறிவன் சிவன்:**

அன்பும் இறைவனும் பிரிவிலா நிலையில் நம் உள்ளத்தே ஒன்றாயிருத்தலால் அவன் நம் எண்ணம் முதலாக எளிதில் அறிகிறான். ஆதனால் மெய்யன்பே நாம் மேற்கொள்ள வேண்டும். பக்தியே முக்திக்குரிய நன்மார்க்கமாகும். திருமூலரும் அன்பினாலேயே ஈசனடி காணப் பெற்றார்.

அனைவரிடமும் அன்பு செய்ய வேண்டும். அன்பின் சிறப்பினைத் திருமூலர்.

**“கண்டேன் கமழ்தரு கொன்றையி னான் அடி**

**கண்டேன் கரியுரி யான்றன் கழலிணை**

**கண்டேன் கமல மலர்உறை வானடி**

**கண்டேன் கழலதென் அன்பினுள் யானே” – 47.**

என எடுத்துக் காட்டுகிறார்.

அன்பினால் இறைவனடி அடையலாம் என்பதனைத் தமது சொந்த அனுபவ வாயிலாகக் கூறுகின்றார். கண்டேன் என்று கட்டுரைத்திருக்கிறார். மணம் வீசுகின்ற கொன்றை மாலையை அணிந்த சிவபெருமான் திருவடியைக் கண்டேன். ஆனையை உரித்துப் போர்த்த அரனடியைக் கண்டேன். அடியார்களது உள்ளக் கமலத்தில் உறைபவனாகிய ஞான சொரூபியின் திருவடியைக் கண்டேன்.

எனது அன்பினுள் யானே கண்டேன். இறைவன் அன்பிற்கு எளியனாய் தமக்குக் காட்சி தந்ததைக் கூறி உலகினரைத் தெளிவிக்கின்றார். தாம் காட்சி பெற்றதாகப் படிப்படியே கூறியுள்ள நயம் கவனிக்கத்தக்கது. மனமலரே இங்கு கமலமலர் எனப்பட்டது. ஆணவம் மாயை, கன்மங்களின் வலிபோக்கி, இன்பம் தருதலை இந்நிலைகள் குறிப்பது காணலாம்.

கொன்றைமலர் இறைவனது அடையாளம். காசியில் யானை வடிவுடன் வந்த தயாசுரனைக் கொன்று அதன் தோலை மேலே போர்த்துக் கொண்டனன். இறைவன் தன்னை நினைப்பவரது மனத்தாமரையில் விரைந்து சென்று தங்குவது இயல்பு.

**“மலர்மிசை ஏகினான்”**

என்பது இக்கருத்தை வலியுறுத்தும் சான்றாகும்.

அறம் செய்வதற்கு அன்பே அடிப்படையாகும். அன்பு என்பது ஒரு பண்பு ஆகும். அதனைக் காண முடியாது. அஃது உடையார் மாட்டு உண்டாகும் மெய்ப்பாடுகளால் உணர முடியும்.

### 3.9 கல்வியின் சிறப்பு

சித்தர்கள் கல்வி என்று கூறுவது இறையறிவுறுத்துங் கல்வியோாம்.

பட்டினத்தடிகள் கல்வியின்சிறப்புப்பற்றி அழகாக கூறுகிறார்.

இறைவனே! ஞான நூல்களைப் படியாத குற்றத்தையும், அவைகளைச் சிந்தியாத குற்றத்தையும் மனமிளகி உருகித் திருச்சந்நிதி முன்னர் நில்லாத குற்றத்தையும், இறைவனது நாமத்தைச் செபியாத குற்றத்தையும், இறைவனைத் தோத்திரஞ் செய்யாத குற்றத்தையும் பொறுத்துத் திருவருள் செய்வாய்.

**"கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருதி**

**நில்லாப் பிழையு நினையாப் பிழையுநின் னஞ் செழுத்தைச்**

**சொல்லாப் பிழையும் துதியாப் பிழையுந் தொழாப்பிழையும்**

**எல்லாப் பிழையும் பொருத்தருள் வாய்கச்சி யேகம்பனே" – 48.**

**என்கிறார் பட்டினத்தடிகள்.**

கல்லாப்பிழை என்பது புத்தி பூர்வமாக நிகழ்வன. ஞான நூல்களைப் பயிலாதிருத்தல் பிழை என்றார். கல்வியில்லாதார் உள்ளத்தில் கடவுள் வீற்றிருக்கமாட்டார். இதுபற்றியே ஞான சம்பந்தரும்.

**"கல்லார் நெஞ்சில் நில்லா னீசன்" என்றருளிச் சென்றுள்ளார்.**
**"கற்றதனாலாய பயனென் கொல் வாலறிவன்**

**நற்றாள் தொழாஅர் எனின்" – 49.**

என்கிறார் வள்ளுவர்.

திருமூலரும் இக்கருத்தினையே வலியுறுத்துகிறார்.

இடையறாத அன்பு ஈசன் பால் ஏற்படுவதற்கு அவனைப் பற்றிக் கூறும் மெய்ந்நூல் கற்றல் வேண்டும்.

**"கற்றறி வாளர் கருதிய காலத்துக்**

**கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு**

**கற்றறி வாளர் கருதி உரை செய்யும்**

**கற்றறி காட்டக் கயலுள வாக்குமே!" – 50.**

கற்றிருப்பவர் எத்தகையவர் என நாம் எண்ணிப் பார்த்தால் அவர்கள் கண் தெரியப்பெற்றவர் போல்வர்.

கண் இல்லாதவர்க்குப் பார்வை இல்லை. அதனால் எந்தப் பொருளும் தெரியாது. அதுபோல ஞானக்கல்வி இல்லாத அறிவிலார்க்கு தம் உடல் பற்றிய உண்மையும், தத்துவங்களின் தன்மையும், பாச ஞானமும் தெரிய வராது.

ஆகவே கல்விமான்கள் தம் பிறப்பின் குறிக்கோளை அடைவதற்கு அகக்கண்ணாகிய கல்வி தமக்கு உதவியாக இருக்கும் என்று அறிவர்.

இப்படிக்கற்று ஆய்ந்த மெய்யறிவாளர்கள் உரைசெய்யும் அத்தகைய அகக் கண்களைத் திறப்பிக்கும் சிவஞானக் கலையைக் கற்று அறிதல் வேண்டும்.

**கேள்வி கேட்டமைதல்:**

கற்கும் பொழுது ஏற்படும் ஐயங்கள் நீக்கப்பட வேண்டும். இன்றேல் மடம்படும். ஆதலால் கேட்டதற்குரிய சான்றோரிடமெல்லாம் கேட்டுத் தெளிய வேண்டும்.

நற்கேள்வி சிவகதி தரும். சிவனைக் கேள்மின். கேள்வியில் ஈடுபாடுடையவன் நெஞ்சில் ஈசன் நிற்பான் என்கிறார் திருமூலர்.

**"தேவர் பிரானைத் திவ்விய மூர்த்தியை**

**யாவர் ஒருவர் அறிவார் அறிந்தபின்**

**ஓதுமின் கேள்மின் உணர்மின் உணர்ந்தபின்**

**ஓதி உணர்ந்தவர் ஓங்கிநின் றாரே!"** – 51.

எத்தேவரும் என்றும் ஏத்தும் பெருமாள் சிவன். அவனை அவனருளால் யாவர் ஒருவர் அகத்துணர்வாரோ, அவரே ஓதுவதற்கு உரியர். ஆதலால் அங்ஙனம் உணர்ந்தபின் யாவரும் தீதின்றி இறைவன் திருவடி சேர்தற் பொருட்டு ஓதுங்கள் என்கிறார் திருமூலர்.

அறிஞர் வாயிலாக நூற்பொருளை இடைவிடாது கேளுங்கள். கேட்டவற்றை சிந்தித்திடல் வேண்டும். அங்ஙனம் சுற்று கேட்டு சிந்தித்துணரப் பெற்றவர் சிறப்புடையவர் ஆவர் என்கிறார் திருமூலர்.

**கல்லாமை:**

கல்லாமை என்பது ஒரு குணக்கோடான செயலாகும். திருவருள் நாட்டமில்லாதவர் கல்லார் ஆவர். இறைவன் உண்மையினை அறிந்தவரே கற்றார் ஆவர். கல்லார் மனத்தே இறைவன் விளங்கி நில்லான். கல்லாதார் தவமும், அறமும் புரியாமல் வினைப்போகமே துய்த்து ஈட்டுவர்.

இறைவனை அனுபவித்தலே கல்விப் பயன். கல்லாதார் கூட்டுறவு ஒருபோதும் கூடாது. கடவுளே நம்மை வழிநடத்துபவன்.

**"ஆதிப் பிரான் அமரர்க்குப் பரஞ்சுடர்**

**சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்**

**ஓதி உணரவல் லோமென்பர் உண்ணின்ற**

**சோதி நடத்தும் தொடர்வறி யாரே! – 52.**

திருமூலரின் இப்பாடல் இறைவனது நூல்களைக் கல்லாமையால் வரும் இழிவுகளைக் கூறுகிறது.

உலகத் தோற்றத்திற் கெல்லாம் காரணமாகிய இறைவன் தேவர்களாலும் அறிய முடியாத மேலான சுடர்ப்பொருள். உயிர்களின் உள்ளத்தே நுண்ணிய சோதியாகத் திகழ்பவன். அடியார்களின் அன்பினால் தொடர்ந்து போற்றும் பெருமை வாய்ந்த தெய்வம்.

எல்லா நூல்களையும் கற்றுணர்ந்தோம் எனத் தம்மை வியந்துரைக்கும் உலகத்தார் பலர் உள்ளனர். அவர்கள் உயிருக்குயிராய் உள்நின்ற சோதிப்பொருளாகியவன் இறைவன். உலகினையும் அவன் உயிர்களையும் கலந்து நின்று இயக்கும் அற்புதமானவன் என்பனவற்றை அறியாமல் அவன் திருவடியை வணங்காதவராயினர்.

எனவே, கல்விப் பயன் எதுவெனில் இறைவனுக்கும் நமக்குமுள்ள தொடர்பை அறிந்து அவனை ஆண்டான் எனவும், அடிமை எனவும் ஏற்று நடத்துதலே ஆகும்.

ஞானநூல்களை நான்கு கற்றிடின் இறைவனே நம் உள்நின்று நம்மை நடத்துகிறான் என்ற எண்ணம் ஏற்படும்.

### 3.10 பெரியாரைத் துணைக்கோடல்

நாம் துணையாகக் கொள்வோர் எல்லா நற்பண்புகளையும் உடைய ஞானிகளாவர். அவர்கள் மறதியை மாற்றுவர்; ஞானத்தை விளக்குவர்; விபரீத உணர்வைக் கெடுப்பர்; தம் நடத்தையால் நம்மையும் நன்னெறிக்கண் செலுத்தி வாழ்விப்பர்.

எவர் பெரியவர் என்பதையும், அவர்களை எங்ஙனம் துணை கொள்வது என்பதனையும், அங்ஙனம் துணை கொள்வதின் பயன் பற்றியும் திருமூலர் இங்கு அறிவுறுத்துகிறார்.

பொறுமை நிலைபெற வேண்டுமாயின், அதனை அங்ஙனம் செய்விக்க வல்லவர்களாகிய பெரியார்களை நாம் துணையாகக் கொள்ளல் வேண்டும். பெரியார்கள் என்பவர் முற்றும் உணர்ந்த ஞானிகளாவர்.

இவர்களை நாம் நாடினால் நாமும் படிப்படியாகச் சீலம், நோன்பு, அறிவு முதலியனப் பெறுவோம்.

பெரியோர்களுடன் கூடினால் அவர்கள் நம்மைப் படிப்படியாக ஞானமுறச் செய்வர். ஆதலால் அப்பெரியார்களை இம்மையில் தேடியும் நாடியும் அடைந்து வாழ்தலே நலமாகும்.

**“அறிவார் அமரர் தலைவனை நாடிச்**

**செறிவார் பெறுவர் சிவதத் துவத்தை**

**நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்**

**பெரியா ருடன் கூடல் பேரின்பம் ஆமே!” – 53.**

இறைவனை அன்பினால் நெருங்கினால் அன்றிச் சிவதத்துவத்தை உணரமுடியாது என்பது இதன் கருத்து. தீய வழியில் செல்வாரை நல்வழியில் செலுத்துபவர் பெரியார் என்பதும் இங்கு கூறப்பட்டது.

தேவர்கள் இறைவனைத் தேடி அடைவர். இவ்வாறு நெருங்குகின்றவர்கள் சிவத்தின் உண்மையை அறிவர். ஆகவே, இது நல்வழி என்று அருள் செய்யும் பெரியோர்களுடன் கூடுதல் பேரின்பம் தருவதாகும்.

### 3.11 குலத்தாழ்வு:

சித்தர்கள் காலத்திலேயே சாதி சமய வேறுபாடுகள் இருந்திருக்கிறது என்ற உண்மை அவர்கள் பாடல்களைப் படிக்கும்பொழுது உணர முடிகிறது. சாதி சமய வேறுபாடுகளைப் போக்கி சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்திட்டதையும் அவர்கள் பாடல்கள் மூலமாக அறிய முடிகிறது.

குதம்பைச் சித்தர் சாதிகள் ஒழியவேண்டும் என்பதில் தீவிரமாக இருந்துள்ளார் என்பதற்கு இவரது பாடல்களே உதாரணமாகத் திகழ்கின்றது.

**"ஆண்சாதி பெண் சாதி யாகும் இருசாதி**

**வீண்சாதி மற்ற வெல்லாம் - குதம்பாய்**

**வீண்சாதி மற்ற வெல்லாம்.**

**பார்ப்பார்கள் மேலென்றும் பறையர்கள் கீழென்றும்**

**தீர்ப்பாகச் சொல்வதென்ன – குதம்பாய்**

**தீர்ப்பாகச் சொல்வதென்ன.**

**நீதிமான் என்றே நெறியாய் இருப்போனே**

**சாதிமான் ஆவானடி – குதம்பாய்**

**சாதிமான் ஆவானடி**

**சாதியொன்றில்லை சமயமொன்றில்லை என்று**

**ஓதி உணர்ந்தறிவாய் - குதம்பாய்**

**ஓதி உணர்ந்தறிவாய்" – 54.**

என்கிறார் குதம்பைச் சித்தர்.

சிவவாக்கியரும் சாதி வேறுபாட்டைப்பற்றிப் பாடியுள்ளார்.

**"சாதி யாவ தேதடா**

**சலந்தி ரண்ட நீரலோ**

**பூத வாசல் ஒன்றலோ**

**பூதம் ஐந்தும் ஒன்றலோ**

**காதில் வாளி காரை கம்பி**

**பாட கம்பொன் ஒன்றலோ**

**சாதி பேதம் ஓதுகின்ற**

**தன்மை என்ன தன்மையே" – 55.**

சாதி என்பது ஏது? நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் ஆகிய ஐந்து பருப்பொருள்களும் ஒன்றல்லவா? காதில் அணியும் அணிகலன்களான வாளி, காரை, கம்பி, பாடகம் ஆகியவை செய்யப்பட்ட பொன் ஒன்றல்லவா? எனவே மனிதர்களின் சாதிவேறுபாட்டைக் கூறுவது எத்தன்மையது? என்கிறார் சிவவாக்கியர்.

மேலும்,

**"பறைச்சி யாவ தேதடா**

**பனத்தி யாவ தேதடா**

**இறைச்சி தோலெ லும்பினும்**

**இலக்க மிட்டி ருக்குதோ**

**பறைச்சி போகம் வேறதோ**

**பனத்தி போகம் வேறதோ**

**பறைச்சி யும்ப னத்தியும்**

பகுந்து பாரும் உம்முளே!" – 56.

பறைச்சி என்ற ஒன்று ஏது? பார்ப்பனத்தி என்ற ஒன்றுதான் ஏது? இவ்வுடலில் உள்ள இறைச்சி, தோல், எலும்பு ஆகியவற்றில் இது இன்ன சாதியைச் சேர்ந்தவருடையது என்று அச்சிடப்பட்டிருக்கின்றதோ? பறைச்சியுடன் கொள்ளும் போகத்தினின்றும், பார்ப்பனத்தியுடன் கொள்ளும் போகம் எவ்விதத்தில் வேறுபட்டது. உம் உள்ளத்தினுள், பார்ப்பனத்தியைப் பகுத்துப்பாருங்கள் சாதி வேறுபாடில்லை என்பது தெரியும் என்கிறார் சிவவாக்கியர்.

சித்தர்கள் காலத்திலலேயே சாதி வேறுபாடுகளைக் களைய வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கியிருந்திருக்கிறது என்பதை இப்பாடல்கள் உணர்த்துகின்றன.

இவ்வாறு சித்தர்கள் மனிதர்களைப் பற்றியும் அவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய அறங்களைப் பற்றியும், நிலையாமைபற்றியும், அன்பு, கல்வி, நல்குரவு, சாதிமத வேறுபாடு ஆகியவை பற்றியும் பாடியுள்ளனர் என்பதை அறியமுடிகிறது.

**தொகுப்புரை:**

**3.1 நிலையாமை:**

இவ்வுலகம் நிலையில்லாதது. யாக்கை, செல்வம், இளமை, உயிர் முதலியன நிலையில்லாதது. நிலையான அறத்தை நாட வேண்டும்.

**3.2 யாக்கை நிலையாமை:**

உடல் நிலையில்லாதது - தோன்றி நின்றழிவது - உடலை பாதுகாப்பதிலேயே நேரத்தை செலவிடக்கூடாது.

திருமூலர் பாடல்களில் யாக்கை நிலையாமை – சிவவாக்கியர் பாடல்களில் யாக்கை நிலையாமை – அழுகணிச்சித்தர் கூறும் யாக்கை நிலையாமை – பட்டினத்தடிகள் காட்டும் யாக்கை நிலையாமை – பாடல்கள் மற்றும் விளக்கங்கள்.

**3.3 செல்வம் நிலையாமை:**

செல்வத்தைத் தேடுவதிலேயே வாழ் நாளை வீணாக்குதல் - செல்வம் நிலையற்றது என மதித்து அதன்பால் பற்று இன்றி இறைவனை பற்றுமாறு அறிவுறுத்துதல் - திருமூலர் காட்டும் செல்வம் நிலையாமை பட்டினத்தடிகள் காட்டும் செல்வம் நிலையாமை பாடல்கள் மற்றும் விளக்கங்கள்.

**3.4 இளமை நிலையாமை:**

இளமை நிலையில்லாதது. இளமை நிலையாயிருக்கும் போது அருஞ்செயல்களைச் செய்தல் வேண்டும். முதுமையில் செய்ய எண்ணினாலும் ஆற்றல் இல்லாது போய்விடும். நிலையாமை பற்றித் தெரிந்து இறைவனை இளமை தொட்டே பற்றி வாழ்தல் சிறந்தது. பட்டினத்தார் பாடல்களில் இளமை நிலையாமை.

**3.5 உயிர் நிலையாமை:**

உயிர் நிலையில்லாதது – உயிர் இருக்கும்பொழதே இறைவனை அறிந்து போற்ற வேண்டும் - மானிடப்பிறவி கிடைத்தற்கரியது. பொறாமை படக்கூடாது – பிறர்பொருள் கவரக்கூடாது – நடுவு நினைத்து பேணி வாழ வேண்டும்.

### 3.6 தானச்சிறப்பு:

மக்கள் யாவர்க்கும் கைம்மாறு கருதாது உதவி செய்தல் வேண்டும். அறம் செய்வானுடைய திறம் அறம் செய்யாதவனுடைய திறம் - தானம் பெறத் தகுந்தவர் தானம் பெறத் தகாதவர் - இரத்தலின் இழிவு.

### 3.7 நல்குரவு:

வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது. வறுமை கூடாதது. திருநீக்கப்பட்டார் இன்னல்களை எண்ணிப்பார்த்து திருந்தவேண்டும்.

### 3.8 அன்புடைமை:

திருமூலர் சிவத்தை அன்பு என்று குறிப்பிடுகிறார். அன்பே சிவமாகும். அன்பு செய்பவரை இறைவன் அறிவான். கண்ணப்பன் இறைவனிடம் காட்டிய அன்பு – குகன் இராமனிடம் காட்டிய அன்பு. அன்பு என்பது ஒரு பண்பு – மெய்ப்பாடுகளால் உணர முடியும்.

### 3.9 கல்வியின் சிறப்பு:

சித்தர்கள் கூறும் கல்வி என்பது இறையறிவுறுத்துங் கல்வியே. கல்வி அறிவில்லாதவர்க்கு தம் உடல் பற்றிய உண்மையும், தத்துவங்களின் தன்மையும் அறிய முடியாது. கல்லாதவர்கள் நெஞ்சில் இறைவன் இருக்க மாட்டான்.

### 3.10 பெரியாரைத் துணைக்கோடல்:

எல்லா நற்பண்புகளை உடைய பெரியோர்களைத் துணையாகக் கொள்ள வேண்டும். அப்பெரியோர்கள் தீய வழியில் செல்பவரை நல்வழியில் செலுத்துவர்.

### 3.11 குலத்தாழ்வு:

சித்தர்கள் சாதிசமய வேறுபாடுகளைக் களைந்து சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்திட்டனர்.

## அடிக் குறிப்புகள்:

1. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -724
2. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் - 145
3. சுந்தரர்மூர்த்தி – சுந்தரமூர்த்தி அருளிச் செய்த தேவாரப்பதிகங்கள் - திருவாரூர் பதிகம் - கஅ.
4. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் - 148
5. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனைகள் - பாடல் எண் - 28
6. நரீவெரூ உத்தலையார் - புறநானூறு - பாடல் எண் - 195
7. அழுகணிச்சித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் - 8
8. அழுகணிச்சித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் - 10
9. அழுகணிச்சித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் - 06
10. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் - பாடல் எண் - 60
11. பரஞ்சோதிமுனிவர் - திருவிளையாடற்புராணம்
12. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் - திருவேகம்பமாலை - பாடல் எண் - 26
13. பட்டினத்தார் பாடல்கள் - திருத்தில்லை - பாடல் எண் - 68
14. பட்டினத்தார் பாடல்கள் - திருவேகம்பமாலை - பாடல் எண் - 01
15. திருநாவுக்கரசு – திருத்தாண்டகம் - பதிகம் -276
16. பட்டினத்தார் பாடல்கள் - திருத்தில்லை – பாடல் எண் - 6
17. பட்டினத்தார் பாடல்கள் - திருவேகம்பமாலை - பாடல் எண் - 12
18. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் - 170
19. அருணகிரிநாதர் - திருப்புகழ் - பாடல் எண் - 15
20. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் - 171
21. குறள் எண் - 332
22. பட்டினத்தார் பாடல்கள் - திருவேகம்ப மாலை - பாடல் எண் - 6
23. பட்டினத்தார் பாடல்கள் - திருத்தில்லை - பாடல் எண் - 24
24. சமண முனிவர்கள் - நாலடியார் - பாடல் எண் - 17
25. குறள் எண் - 36.
26. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் - 177
27. பட்டினத்தார் பாடல்கள் - திருத்தில்லை தில்லை - பாடல் எண் - 51

28. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -187
29. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -188
30. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -250
31. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -252
32. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -260
33. குறள் எண் - 1008
34. முதுகண்ணன் சாத்தனார் - புறநானூறு – பாடல் எண் - 28
35. மணிமேகலை – ஆபுத்திரன் திறம் அறிவித்தகாதை பாடல் எண் - 110-115
36. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -501
37. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -505
38. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -506
39. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -209
40. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -211
41. ஔவையார் - நல்வழி – பாடல் எண் - 11
42. திருமுருக கிருபானந்த வாரியார் - சுந்தரர் வரலாறு பக்- 34
43. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -270
44. சேக்கிழார் பெரியபுராணம் - பாடல் எண் 157 (கருள)
45. கம்பராமாயணம் குகப்படலம்
46. பட்டினத்தார் பாடல்கள் - திருத்தில்லை – பாடல் எண் - 28
47. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் - 285
48. பட்டினத்தார் பாடல்கள் - திருவேகம்பாலை – பாடல் எண் -8
49. குறள் எண் - 02
50. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -291
51. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -291
52. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -301
53. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -545
54. தி.நா.அங்கமுத்து முதலியார் சித்தர் பெருமக்கள் (வாழ்க்கை வரலாறு) பக்- 48
55. சிவவாக்கியர் - சிவவாக்கியர் பாடல்கள் - பாடல் எண் - 45
56. சிவவாக்கியர் - சிவவாக்கியர் பாடல்கள் - பாடல் எண் -38

# இயல் - 4

## சித்தர்கள் காட்டும் ஒழுக்க நெறிகள்

4.1 ஒழுக்கநெறி

4.2 ஐம்பெரும்பாவங்கள்

4.3 கொல்லாமை

4.4 புலால் மறுத்தல்

4.5 பொய்யாமை

4.6 கள்ளாமை

4.7 கள்ளுண்ணாமை

4.8 மாதராசையின் இழிவு

4.9 வினைப் பயன்

4.10 பொறையுடைமை

4.11 பட்டினத்தார் காட்டும் பொல்லாதவர்களின் இலக்கணம்

4.12 திருமூலர் கூறும் அருஞ்செயல்கள்

4.13 கடுவெளிச்சித்தர் பாடல்களில் நல்லறிவுரைகள்

4.14 பசித்துன்பம்

# இயல் - 4

## சித்தர்கள் காட்டும் ஒழுக்க நெறிகள்

### 4.1 ஒழுக்க நெறி:

ஒருவன் நன்மை பெறுவதற்காகக் கடை பிடிக்க வேண்டிய நெறிமுறையே ஒழுக்கம் ஆகும். ஒழுக்கத்தை கடைபிடிப்பவன் வாழ்வில் அனைத்து சிறப்புகளையும் பெற்று மேன்மையடைவான். ஒவ்வொரு தனிமனிதனும் தன்னுடைய ஒழுக்கத்தை கடைப்பிடித்து ஒழுகுவது அவசியம்.

உயிர் எல்லாப் பொருளையும் விடச் சிறந்ததே, ஆயினும் அந்த உயிருக்கும் சிறப்புத் தரவல்லதாக ஒழுக்கம் விளங்குகின்றது. ஆகையால் உயிரைவிட ஒழுக்கமே சிறந்ததாகக் கொண்டு காக்க வேண்டும். அறம் பலவற்றையும் ஆராய்ந்து போற்றித் தேர்ந்தாலும் முடிவில் துணையாய் நிற்க காண்பது ஒழுக்கமே, அதனால் ஒழுக்கத்தை வருந்திப் போற்றியும் காக்க வேண்டும், ஒழுக்கத்தைக் காப்பதற்காக எவ்வளவு துன்பம் நேர்வதானாலும் வருந்தி ஏற்க வேண்டும்.

**ஒழுக்கம் பற்றிய குதம்பைச் சித்தரின் பாடல்:**

குதம்பைச் சித்தர் நல்ல ஒழுக்கங்கள் பற்றியும், தவிர்க்கக் கூடிய தீய ஒழுக்கங்கள் பற்றியும்,

**“கள்ளங்கள் காமங்கள் கொலைகள் கபடங்கள்**

**பள்ளத்தில் தள்ளுமடி – குதம்பாய்**

**பள்ளத்தில் தள்ளுமடி**

**கற்புள்ள மாதைக் கலக்க நினைக்கினும்**

**வற்புள்ள பாவமடி – குதம்பாய்**

**வற்புள்ள பாவமடி.**

**கோபம் பொறாமை கொடுஞ்சொல் வன்கோள் இவை**

**பாபத்துக்கு ஏதுவடி – குதம்பாய்**

**பாபத்துக்கு ஏதுவடி.**

**பொருளாசை உள்ள இப்பூமியில் உள்ளோர்க்கு**

**இருளாம் நரகமடி – குதம்பாய்**

**இருளாம் நரகமடி”**.1

முதலான ஒழுக்கங்களைப் பற்றிப்பாடுகிறார்.

மனிதன் உயர்ந்தோன் என்பதை

**‘‘யான் எனது என்னும் இருவகைப் பற்றற்றோன்**

**வானவன் ஆவானடி – குதம்பாய்**

**வானவன் ஆவானடி”** -2.

மனிதனாகப் பிறந்தவன் நான் எனது என்ற இருவகையான பற்றுகளை நீக்கினாலே அவன் தேவர்களுக்கு நிகரானவன் என்று விளக்குகிறார்.

அடுத்ததாகப் பிறவி என்கிற பிணியை நீக்கிய வழியையும் கூறுகிறார்.

**‘‘பிறவியை நீக்கியப் பேரின்பம் நோக்கிய**

**அறிவு பெரிதாமடி – குதம்பாய்**

**அறிவு பெரிதாமடி”** -3.

என்கிறார்

இப்படிக் கண்ணிகளாகத் தம் பாடல்கள் இயற்றி அவற்றின் மூலம் மனிதகுலம் மேன்மையடையப் பாடுபட்டார்.

**4.2 ஐம்பெரும் பாவங்கள்:**

கொலை, களவு, கள், காமம், பொய் கூறலும் ஆகிய இவை ஐந்தும் அஞ்சி நடுங்கத்தக்க பெரும் பாவங்கள் ஆகும்.

**“பொய், கொலை, களவு, காமம், பொருணடை**

**இவ்வகை ஐந்து மடக்கிய தியமம்: -4.**

என்கிறது தொல்காப்பியம்.

இவ்வைந்து பாவங்களையும் நீக்கி எல்லாவற்றுக்கும் மேலாகிய சிவபெருமான் திருவடியை உள்ளத்தால் சார்ந்து வழிபட்டோர்க்கு வரும் துன்பங்கள் இல்லை. ஐம்பெரும் பாவங்களினின்று நீங்கினோர் அவற்றால் ஏற்படும் துன்பங்களின்று நீங்கி பெரு வாழ்வு பெறுவர்.

**திருமூலர்ன் கூறும் பஞ்சமாபாதங்கள்:**

மறுமைத் துன்பத்தை எண்ணிப் பார்த்தேனும் இம்மையிற் கொலை புரியாதிருக்குமாறு திருமூலர் எடுத்துக்காட்டுகிறார். கொடிய செயல்கள் செய்யாமல் வாழ்வோர் உயர்ந்த நிலையை அடைவர் என்கிறார் திருமூலர்.

**“கொலையே களவுகட் காமம் பொய்கூறல்**

**மலையான பாதகமாம் அவை நீக்கி**

**தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்**

**கிலையாம் இவைஞானா னந்தத் திருத்தலே” -5.**

என்று பாடுகிறார்.

நரகத்தில் தள்ளக்கூடிய இந்தக் கொடிய தீச்செயல்களைச் செய்யாதீர்கள் என்று நமது சாஸ்திரங்களும் அறநூல்களும் எச்சரிக்கின்றன. அப்படியிருந்தும் மக்கள் பாதகங்களைச் செய்து அழிகிறார்களே என்று வருந்துகிறார் திருமூலர்.

இப்பாவங்களுக்குப் பதிலாக அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் இவ்வைந்தினையும் மேற்கொண்டு இடையறாது ஒழுகுதல் வேண்டும்.

ஈசனைப் பூசனைப் புரியுங்கள். அகத்தும் புறத்தும் புரியுங்கள். பரிவுடன் புரியுங்கள். கொல்லா விரதத்தோடு புரியுங்கள் வீடுபேறு சித்திக்கும் என்கிறார் திருமூலர்.

**சிவவாக்கியர் கூறும் பஞ்சமாபாதகங்கள்**

சிவவாக்கியர் பஞ்சமாபாதங்கள் செய்வதால் ஏற்பட்ட பாவம் நம்மை விட்டு ஒட வழிகூறுகிறார்.

**"அஞ்சும் மூன்றும் எட்டதாகும் அநாதியான மந்திரம்**

**நெஞ்சிலே நினைந்து கொண்டு நூறுருச் சபிப்பிரேல்**

**பஞ்சமான பாதகங்கள் நூறு கோடி செய்யினும்**

**பஞ்சு போலப் பறக்கு மென்று நான் மறைகள் பன்னுமே" -6.**

அஞ்சும் மூன்றும் எட்டதாகும் என்று சொல்லக்கூடியது. ஓம் நமோ நாராயணா என்கிற மந்திரம். இந்த மந்திரத்தை மனத்தில் நினைத்துக்கொண்டு நூறுமுறை ஒதி மனத்தில் நிலைபெறச் செய்தால் ஐந்து கொடிய பாதகச் செயல்கள் நூறுகோடி அளவில் செய்தாலும் அப்பாவங்கள் இம்மந்திரம் ஒதப் பஞ்சுபோலப் பறக்கும் என்று நான்கு வேதங்களும் கூறுகின்றன என்கிறார் சிவவாக்கியர்.

**பட்டினத்தார் கூறும் பஞ்சமா பாதங்கள்:**

**"கொல்லாமற் கொன்றதைத் தின்னாமற் குத்திரங் கோள் களவு**

**கல்லாமற் கைதவ ரோடிணங் காமற் கனவிலும் பொய்**

**சொல்லாமற் சொற்களைக் கேளாமற் றோகையர் மாலையிலே**

**செல்லாமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே" -7.**

சிதம்பரத்தில் குடிகொண்டிருக்கும் இறைவனே! உயிர்களைக் கொல்லாமலும், கொன்றவற்றை உண்ணாமலும், வஞ்சம் கோள், திருடு முதலியவற்றைக் கற்றுக் கொள்ளாமலும் வஞ்சகருடன் சேராமலும், சொப்பனத்திலும் பொய் பேசாமலும், பொய்ச் சொற்களுக்குச் செவிசாய்க்காமலும் மயில் போன்ற சாயலுடைய மாதர்கள் மாய வலையிற் சிக்காமலுமிருக்கத் திருவருட் செல்வத்தைக் கொடுத்தருள்வாய். இச்செய்யுளில் பஞ்சமாபாதகங்களைப் பற்றி பட்டினத்தடிகள் குறிப்பிடுகின்றார்.

மேலும் பல பாவச் செயல்கள் பற்றி பட்டினத்தடிகள் குறிப்பிடுகின்றார்.

**“ஓடாமற் பாழுக் குழையாம லோர முறைப்பவர் பாற்**

**கூடாம னல்லவர் கூட்டம் விடாமல்வெங் கோப நெஞ்சில்**

**நாடாம னன்மை வழுவாம லின்றைக்கு நாளைக் கென்று**

**தேடாமற் செல்வத் தருவாய் சிதம்பர தேசிகனே” -8.**

சிதம்பரத்தில் வீற்றிருந்தருளும் சிவகுருநாதனே! வயிற்றின் பொருட்டு அங்குமிங்கும் ஓடி அலையாமலும், வீணுக்கு உழையாமலும், பட்சபாதமாய்ப் பேசுபவரிடத்திற் சேராமலும், நல்லவர் கூட்டத்தை வீட்டு நீங்காமலும் கொடிய கோபத்தை மனத்திற் கொள்ளாமலும், நீதி தவறாமலும், இன்றைக்கு நாளைக்கு என்று பொருள் தேடாமலும் வாழத்தகுந்த திருவருட் செல்வத்தைக் கொடுத்தருள்வாய் என்று வேண்டுகிறார்.

**“பாராம லேற்பவர்க் கில்லையென் னாமற் பழுதுசொல்லி**

**வாராமற் பாவங்கள் வந்தனு காமன் மன மயர்ந்து**

**பேராமற் சேவை பிரியாம லன்பு பெறாத வரைச்**

**சேராமற் செல்வந் தருவாய் சிதம்பர தேசிகனே”-9.**

சிதம்பரத்திலெழுந்தருளியுள்ள சிவகுருநாதனே! ஏற்றத் தாழ்வு நோக்காமலும், யாசிப்பவர்கட்கு இல்லையென்று சொல்லாமலும், பிறர் குற்றங் கூறித் திரியாமலும், பாவங்கள் வந்து நெருங்காமலும், மனவெழுச்சி குன்றாமலும், தேவரீரது சேவை என்னை விட்டகலாமலும், அன்பில்லாதவர்களிடங் கூடாமலுமிருக்கத் திருவருட் செல்வத்தைக் கொடுத்தருள்வாய் என்று வேண்டுகிறார்.

இவ்விரு பாடல்களில் எவையெல்லாம் நமக்கு வேண்டுபவை எவையெல்லாம் நமக்கு வேண்டாதவை என்பதைப் பட்டினத்தடிகள் விளக்குகிறார்.

### 4.3 கொல்லாமை

கொல்லாமை என்பது ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர்வரை எல்லாப் பிறப்பினங்களிலும் ஒன்றையும், கொல்லாமை ஆகும். இது ஐம்பெரும் பாவங்களுள் ஒன்று.

**"வாடிய பயிரைக் கண்டபோதெல்லாம் வாடினேன்"**

என்கிறார் வடலூர் வள்ளலார்.

**"ஓர் உயிர்துன்பம் உறுமாறு இன்னா செய்வது**

**தீது, அதுபோலவே உயிர் உடம்பை விட்டு நீங்குமாறு**

**கொலை செய்வதும் தீது, அறமான செய்கை எது**

**என்றால் ஓருயிரையும் கொல்லாமல் இருப்பதே ஆகும்"-10.**

என்கிறார் டாக்டர் மு.வ

கொல்வது என்பது பாவச்செயல் இதனையே வள்ளுவர்

**"அறவினை யாதெனில் கொல்லாமை கோறல்**

**பிறவினை எல்லாந் தரும்"** -11.

அறமாகிய செயல் எது என்றால் ஓர் உயிரையும் கொல்லாமையாகும்; கொல்லுதல் அறமல்லாத செயல்கள் எல்லாவற்றையும் விளைக்கும்.

**"ஒன்றாக நல்லது கொல்லாமை மற்று அதன்**

**பின்சாரப் பொய்யாமை நன்று"** -12

இணையில்லாத ஓர் அறமாக கொல்லாமை நல்லது; அதற்கு அடுத்த நிலையில் வைத்துக் கூறத்தக்கதாகப் பொய்யாமை நல்லது என்கிறார் வள்ளுவர்.

கொலையினால் ஏற்படும் தீமைகளைத் திருமூலர்

**"கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை**

**வல்லடிக் காரர் வலிக்கயிற்றாற் கட்டிச்**

**செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை**

**நில்லிடும் என்ற நிறுத்துவர் தாமே"** -13.

என எடுத்துக்காட்டுகிறார். கொல்லு, எறி, குத்து என்று கூறிய கொடியமக்களை இயமனது கட்டளை பெற்ற வன்மையான ஏவலாளர்கள். வன்மை மிக்க கயிற்றால் கட்டி, மேகத்தில் உண்டாகும் இடிபோல் நில் என்று கூறிக் கொடிய நரகத்தில் இட்டு நிறுத்துவர். மக்கள் என்பன மிருகங்கள். அம்மிருகங்கட்கு அறிவு கிடையாது. அறிவு பெறாத காரணத்தினால் மக்கள் உயிர் இனங்களைக் கொன்றும் குத்தியும் அழிக்கின்றனர்.

கொலைப் பாவத்தை இம்மையிற் கூசாமற் செய்த உயிர் நுண்ணுடலில் நின்று மறுமையில் நரகிடைப்படும் வேதனைகளைத் திருமூலர் இப்பாடலில் காட்டுகிறார்.

நாம் செய்தவினை நம்மிடம் பிரதிபலிக்கும் என்பது நியதியாகும். முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் என்பது பழமொழி நாம் இம்மையில் ஓர் உயிரைப் போக்கும் போது கொல், இடு, குத்து என்று மிருகத்தன்மையால் கூறுகின்றோம். மறுமைத் துன்பத்தை எண்ணிப் பார்த்தேனும் இம்மையிற் கொலை புரியாதிருக்குமாறு திருமூலர் கூறுகின்றார்.

ஒருவன் பசித்து உணவை ஆவலோடு புசிக்கப் புகும் போதும், புசித்துக் கொண்டிருக்கும்போதும் வேறொருவன் அவனை உண்ணவொட்டாமல் தடுத்தால் பசித்தவன் மனம் பதைப்புறும்.

இங்ஙனமே இருப்பது கொலை நிகழ்ச்சியின் போதும், ஆதலால், சிவயோக நெறிபற்றி, அறம் செய்யப்புகுந்தவன் அடைய வேண்டிய தகுதிகளில் விரதம் முதலாவதாக வேண்டப்படுவதாகும். அவ்விரதங்களுள் முதன்மை யானது கொல்லாமையாகும்.

கொல்லாமைப் பற்றிய செய்தி பட்டினத்தார் பாடல்களிலும் காணப்படுகிறது.

**"கொன்றே னனேக முயிரையெல்லாம் பின்பு கொன்று கொன்று**

**தின்றே னதன்றியுந் தீங்குசெய் தேனது தீரகவென்றே**

**நின்றேனின் சந்நிதிக் கேயத னாற்குற்ற நீபொறுப்பாய்**

**என்றே யுனைநம்பி னேனிறை வாகச்சி யேகம்பனே" -14.**

திருக்காஞ்சியிலெழுந்தருளியுள்ள ஏகாம்பரநாதனே! பல உயிர்களையெல்லாங் கொலை செய்தேன்; பின்னர் அவைகளை வதைத்து வதைத்துப் புசித்தேன்; அ஺தல்லாமலும் பல தீமைகள் செய்தேன்; அவைகளை ஒழிக்க என்றே தேவரீர் சந்நிதானத்தை அடைந்து நின்றேன். ஆகையால் இறைவனே என் பிழைகள் எல்லாவற்றையும் பொறுத்தருள்வீர்! என்று இறைவனை வேண்டுகிறார் பட்டினத்தடிகள்.

“கொலையும் புலாலுண்ணுதலுமே பாவங்களுள் தலையாயவை. அவை ஒழித்தவன் எல்லாப் பாவங்களினின்றும் நீங்கினவனாவான்.

**“கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**

**எல்லா உயிரும் தொழும்”**

என்கிறது திருக்குறள்.

**“கொல்லா விரதங் கொண்டோரே நல்லோர்,**

**மற்றல்லாதார் யாரோ அறியேன் பராபரமே”**

**“கொல்லா விரதங் குவலயமெல்லாம் ஓங்க,**

**எல்லார்க்கும் சொல்லுவது என்னிச்சை பராபரமே”**- 15.

என்கிறார் தாயுமானவர்.

தாம் அறியாமல் செய்த கற்றங்களை அறிவு விளங்கிய காலத்துக் கடவுள் முன்னும் உலகத்தவர் முன்னும் முறையிடுவது ஞானிகள் வழக்கம்”-13

வாழ்க்கை சில வேளைகளில் போராட்டமானதாகத் தோன்றும்; மற்றோர் உயிரைப் போக்கினால் அல்லாமல் தன் உயிர் வாழ்க்கைக்கு இடம் இல்லாததுபோல் தோன்றும். இந்த நிலையிலும், தன் உயிர் நீங்குவதானாலும் தான் வேறொன்றன் இனிய உயிரை நீக்கும் கொலையைச் செய்யக் கூடாது என்கிறார் வள்ளுவர்.

**“தன்னுயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**

**இன்னுயிர் நீக்கும் வினை" -16.**

கொலையால் ஏற்படும் நல்ல பயனாகிய ஆக்கம் பெரிது என்றாலும் சான்றோர் அந்த ஆக்கத்தைப் பொருட்படுத்தமாட்டார்கள்; அந்த ஆக்கம் தீநெறியால் வருவது ஆகையால், அதைக் கடைப்பட்டதாகக் கருதுவார்கள். இதனை,

**"நன்றாகும் ஆக்கம் பெரிதெனினும் சான்றோர்க்குக்**

**கொன்றாகும் ஆக்கம் கடை" -17.**

என்கிறார் வள்ளுவர்.

**4.4 புலால் மறுத்தல்:**

கொல்லாமைக்கு அடிப்படையாக வேண்டியுள்ளது புலால் மறுத்தல் ஆகும்.

புலால் உண்போர் இருத்தலால்தான் கொலை நிகழ்த்த வேண்டியுள்ளது. வீடுபேற்றினை நாடிச் சிவபூசனை மேற்கொண்டு ஒழுகுவோர்க்கு மாமிச போசனம் அறவே கூடாதாகும்.

புலால் உண்போர் கீழ்மையர் ஆவர். அவரை இமயதூதர் நரகிடைக் கிடத்தி வருத்துவார் என்கிறது திருமந்திரம்.

**"பொல்லாப் புலாவை நுகரும் புலையரை**
**எல்லாரும் காண இயமன்றன் தூதுவர்**
**செல்லாகப் பற்றித் தீவாய் நாகத்தின்**
**மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே!"-18.**

புலால் உண்போர் உயிர் ஒருபோதும் சிவனடி சேரப் பெறாது. இவர்கள் உயிர் இயமன் தூதுவர் கைப்படும்.

பொல்லாமைக்கு ஏதுவான இறைச்சியுணவை உட்கொள்பவராயிருத்தலால் புலையர் என இழித்துரைக்கப்படுவர்.

**"கொலை வினையராகிய மாக்கள் புலைவினையர்**

**புன்மை தெரிவா ரகத்து" -19.**

என்னும் குறள் கூறுகிறது.

அப்புலால் உண்பவர்க்கு இம்மையிலும் பொல்லாததேயாகும். பிறர் உயிரின் தசை உண்பதற்குத் தகுதியற்றது. ஆதலின் அதனைப் பொல்லாப் புலால் என்றனர். உண்பவர் எக்குடியில் பிறந்தாலும் அவர்கள் தாழ்ந்தவர்களே என்பர்.

மிகத்தீய ஊனை உண்ணும் இழிசினரை இயமதூதர்கள் எல்லாரும் காண செல்லுப்போல வலிந்து பற்றி எரிவாய் நரகத்தில் மல்லாக்கத்தள்ளி வெளிப்போகாத வண்ணம் தடுப்பர்.

உள்ளத்தைக் கெடுத்து விலங்குத்தன்மையை விளைவித்தலால் புலால் பொல்லாததாயிற்று.

**"கொன்றிலாரைக் கொலச் சொல்லிக் கூறினார்**

**தின்றிலாரைத் தினச் சொலித் தெண்டித்தார்**

**பன்றியாய்ப்படி யிற்பிறந் தேழ்நரகு**

**ஒன்றுவார் அரண் ஆணையி துண்மையே" -20.**

மலம் தின்னும் இயல்புடையது பன்றி. ஆதலின் அதன் பிறப்பு இழிவுடையதாயிற்று. இந்த இழிபிறப்புத் தீயவர்கட்கு ஏற்படும் என்பார்.

பன்றியாகப் படியில் பிறப்பர் என்றார். பிறக்க வைப்பது இறைவனே. அரன் ஆணை என்றார். இது மாறா உண்மையாகும்.

### 4.5 பொய்யாமை

பொய் கூறுதல் ஐம்பெரும் பாவங்களுள் ஒன்று. இயமத்திடை நிற்பவன் பொய் கூறக்கூடாது என்கிறார் திருமூலர். ஒருவனுக்குப் பொய் இல்லாமல் வாழ்தலைப் போன்ற புகழ்நிலை வேறொன்றும் இல்லை. அஃது அவன் அறியாமலே அவனுக்கு எல்லா அறமும் கொடுக்கும் என்கிறார் திருவள்ளுவர்.

**"பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை**

**எல்லா அறமும் தரும்" -21.**

என்கிறது குறள்.

**“பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற**

**செய்யாமை செய்யாமை நன்று” -22.**

பொய்யாமை ஆகிய அறத்தை உண்மையாகவே போற்றி வாழ முடிந்தால் மற்ற அறங்களைச் செய்யாத போதிலும் கூட அது நன்மையைத் தரும் என்கிறார் வள்ளுவர்.

பொய்யுரைத்தலால் துன்பத்தில் அகப்பட்டுக் கொண்டு அவதிப்பட நேரிடும் என்கிறார் பட்டினத்தடிகள்.

**“நாப்பிளக்க பொய்யுரைத்து நவநிதியந் தேடி**

**நலமொன்று மறியாத நாரியரைக் கூடிப்**

**பூப்பிளக்க வருகின்ற புற்றீசல் போலப்**

**புலபுலெனக் கலகலெனப் புதல்வர்களைப் பெறுவீர்**

**காப்பதற்கும் வகையறியீர் கைவிடவு மாட்டீர்**

**கவர்பிளந்த மரத்துளையிற் கானுழைத்துக்கொண்டே**

**ஆப்பதனை யசைத்துவிட்ட குரங்கதனைப் போல**

**அகப்பட்டீர் கிடந்துழல வகப்பட்டீரே”-23.**

நா வெடிக்கப் பொய் பேசி, ஏராளமானப் பொருளைச் சம்பாதித்து, நன்மை யென்பதை சிறிதும் உணராத பெண்களைச் சேர்ந்து பூமியானது பிளவுறும்படி வெளிப்படும் புற்றினின்றும் பெறப்படும் ஈசல்களைப் போலப் புலபுலவெனவுங் கலகலவெனவும் பிள்ளைகளைப் பெற்றுவிடுவீர்கள்.அவற்றை காப்பாற்றும் விதத்தை அறிந்துகொள்ள மாட்டீர்கள். கைவிடவும் மாட்டீர்கள். இரண்டாய்ப் பிளந்த மரத்துளையில் காலை நுழைய விடுத்துக்கொண்டு, ஆப்பை அசைத்து அசைத்துப் பிடுங்கிவிட்ட குரங்கைப் போல அகப்பட்டுக் கொண்டீர்கள் என்கிறார் பட்டினத்தடிகள்.

**"பொய் என்று தன் நெஞ்சு அறிந்த ஒன்றைப்பிறர் அறியமாட்டார்கள் என்று எண்ணியும் சொல்லக்கூடாது; பொய் சொன்ன பிறகு, பிறர் அறியாமல் தப்பினாலும், தன்நெஞ்சே தன்னைச் சுடும். ஆகையால், பிறர்க்கு அஞ்சி வாய்மை கடைப்பிடிப்பதை விட, தன் உள்ளத்தின் உணர்வுக்கு (மனச்சான்றுக்கு) இயைந்து வாய்மையைப் போற்றுவதே கடமை" -24.**

என்று விளக்குகிறார் - மு.வ

**"வைதோரை கூட வையாதே; - இந்த**

**வையம் முழுதும் பொய்த் தாலும் பொய் யாதே**

**வெய்ய வினைகள்செய் யாதே; - கல்லை**

**வீணிற் பறவைகள் மீதிலெய் யாதே" -25.**

உன்னைத் திட்டியவர்களைத் திருப்பி அவர்களை நீ திட்டாதே. இந்த உலகம் முழுவதும் பொய் சொன்னாலும் நீ பொய் பேசாதே. கொடுமையான காரியங்களைச் செய்யாதே – வீணாகப் பறவைகளின் மீது கல்லை வீசி அவற்றை வதைக்காதே என்கிறார் கடுவெளி சித்தர்.

உலகமே பொய் சொன்னாலும் நாம் பொய் சொல்லக் கூடாது என்று கடிந்துரைக்கிறார் சித்தர்.

### 4.6 கள்ளாமை(களவு):

"எல்லோரும் வாழவேண்டும் என்னும் அருள் நோக்கம் உடையவன் பிறருடைய பொருளை வஞ்சித்துக்கொள்ளக் கூடாது. அதனால் அருள் நோக்கம் கெடும். பிறருடைய இகழ்ச்சிக்கும் ஆளாக நெரிடும். பிறரால் இகழப் படாமல் வாழ விரும்புகின்றவன், பிறருடைய எந்தப் பொருளையும் வஞ்சனையால் கொள்ளக் கருதாதவாறு தன் நெஞ்சைக் காக்கவேண்டும். குற்றம் எதுவானாலும் செய்வது மட்டும் அன்று எண்ணுவதும் கூடாது. உள்ளத்தில் நினைப்பதே பின் செயலாக்கம் பெறும். எனவே செயலளவில் குற்றம் இல்லாமல் தீமை என்று உணர்ந்து வாழ

வேண்டும். பிறர் பொருளைக் களவு வகையால் வஞ்சித்துக்கொள்வோம் என்று உள்ளத்தில் எண்ணக் கூடாது.

**"எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்தொன்றும்**

**கள்ளாமை காக்க தன் நெஞ்சு" -**

**"உள்ளத்தால் உள்ளலும் தீதே; பிறன்பொருளைக்**

**கள்ளத்தல் கள்வேம் எனல்"**

**"களவினால் ஆகிய ஆக்கம் அளவிறந்து**

**ஆவது போலக் கெடும்"**

**"களவின் கண் கன்றிய காதல் விளைவின்கண்**

**வீயா விழுமம் தரும்"** -26.

இங்கே குறிப்பது இராக்காலத்திலும் பகலிலும் சோர்ந்திருக்கும் போது திருடும் திருட்டு மட்டுமன்று. பிறர் அறியாமல் அவர்களை வஞ்சித்துப் பொருள் கொள்ளும் எல்லாச் செயலும் திருட்டு ஆகும். அவ்வாறு சேர்ப்பதால் பொருள் மிகுவதுபோல் தோன்றும். ஆனால் கடந்து கெடும். களவின் மீது உள்ள ஆசை பயன் விளைக்கும் போது தீராத துன்பத்தைக் கொடுக்கும்" -27.

**கடுவெளிச்சித்தர் பாடலில் களவு:**

எவற்றையெல்லாம் பின்பற்றக்கூடாது என்று கூறுகிறார் கடுவெளிச்சித்தர்

**"கள்ள வேடம் புனையாதே –பல**

**கங்கையிலேயுன் கடம்நனை யாதே;**

**கொள்ளைகொள் ளநினை யாதே; - நட்புக்**

**கொண்டு புரிந்துநீ கோள்முனை யாதே"** -28.

கள்ள வேடம் போடக்கூடாது. பல புண்ணிய நதிகளான கங்கையிலே நீ குளித்தாலும் உன் பாவ உடல் நனையாது. பிறர் பொருளைத் திருட

நினைக்கக்கூடாது. நட்பு கொண்டு கோள் சொல்லக் கூடாது என்று பாடியுள்ளார் கடுவெளிச்சித்தர்.

இப்பாடலில் களவு செய்தலை மனத்தாலும் நினைக்கக்கூடாது என்று கூறுகிறார் கடுவெளிசித்தர்.

**4.7 கள்ளுண்ணாமை**

கள்ளுண்போர் விலங்குகளைவிட இழிந்தோராகக் கருதப்படுவர். காம மயக்கத்திற்கும், கள் மயக்கத்திற்கும் அடிமையாகக் கூடாது. கள் உண்டால் ஆற்றல் அழியும். அறிவும் கெடும்.

**“மயங்கும் தியங்கும் கள்வாய்மை அழிக்கும்**
**இயங்கும் மடவார் தம் இன்பமே எய்தி**
**முயங்கும் நயம்கொண்ட ஞானத்து முந்தார்**
**இயங்கும் இடையறா ஆனந்தம் எய்துமே” -29.**

என்கிறது திருமந்திரம்.

கள்ளானது தன்னை உட்கொண்டவனை மயங்கச் செய்யும். புலம்பச் செய்யும், உண்மையை அழிக்கும், நடமாடும் பெண்களுடைய இன்பமே நாடி அடைந்து அவர்களைத் தழுவியே இருக்க வைக்கும்.

இத்தகைய இயல்புடையவர்கள் நல்ல ஞானத்தில் முந்தி நிற்கமாட்டார்.

அறிவினைக் கெடுத்து அல்லற்படுத்தும் எதுவும் ஆன்றோரால் கள் என்றே கொள்ளப்படும். ஆதலால் தெளிவும் விரிவும் இல்லாத அறிவினர் மலம் நிறைந்த மூடராவர்.

**“காமமுங் கள்ளுங் கலவிகட் கேயாகும்**
**மாமல முஞ்சம யத்துள் மயலுறும்**
**போமதி யாகும் புனிதன் இணையடி**
**யோமய ஆனந்தத் தேறல் உணர்வுண்டே” -30.**

காம வெறியும் கள்ளுண்ணுதலும் நீசர்களுக்குரிய செயல்களாகும். ஆணவமானது மதத்தை உள்ளபடியே தெளியாது வாட்டத்தை உண்டாக்கும். அதனால் தீய செயல்கள் செய்விக்கும் புத்தியே பிரதானமாக விளங்கும். உத்தமர்களுக்கு ஈசனின் சரணகமலங்களின் சிந்தனையால் கிடைக்கப் பெறும்

ஓங்காரமாகிய மதுரம் வாட்டத்தைப் போக்கி உயர் மார்க்கத்தை புகட்டும் என்கிறார் திருமூலர்..

**“கஞ்சாப் புகைப்பிடி யாதே – வெறி**
**காட்டி மயங்கியே கட்குடியாதே;**
**அஞ்ச உயிர் மடியாதே – பத்தி**
**அற்றஅஞ் ஞானத்தன் நூல் படியாதே”** -31.

என்று பாடுகிறார் கடுவெளிச் சித்தர்.

போதைதரும் கஞ்சா இலையினைப் பதப்படுத்தி அதன் புகையை உட்கொள்ள வேண்டாம். வேறியில் மயங்கி கள் என்ற பானத்தையும் குடிக்க வேண்டாம். அஞ்சுமாறு உயிர்களைக் கொல்ல வேண்டாம். பக்தி மார்க்கத்தைத் தராத அஞ்ஞான நூல்களைப் படிக்கவேண்டாம் என்கிறார் கடுவெளிச்சித்தர்.

கள்ளுண்ணுதலால் தீமைதான் ஏற்படும் என்பதை சித்தர்கள் காட்டியுள்ளார்கள்.

## 4.8 மாதராசையின் இழிவு:

உலக ஆசைகள் பலவற்றுள்ளும் பெண்ணாசையொன்றே இறைவனையும் மறக்கச் செய்யும் ஆற்றலுடையது. அவ்வாசைக் கடலில் அழுந்திய ஒருவன் தன் முயற்சியால் கரையேற இயலாதவனாய் வருந்துவான். அதுகாலை அவனுக்குக் கடவுளின் துணையே வேண்டும்.

காமம் முற்றும் துறந்த முனிவர்களைக்கூட ஆட்டிப்படைக்கிறது. ராஜரிஷி விசுவாமித்திரனின் தவத்தைக் கலைக்க தேவேந்திரன் திலோத்தமை என்ற நடனமாதை அனுப்பினான். அவள் விசுவாமித்திரன் தவத்தைக் கலைத்தாள். இருவரும் இணைந்து சகுந்தலை என்பவளைப் பெற்றனர்.

சகுந்தலை துஷ்யந்தன் என்ற இளவரசனைக் கூடி பரதனைப் பெற்றாள். அந்தப் பரதன் இந்தியாவையே ஆண்டான். இந்த சிற்றின்பம் இந்திரன், அகலிகையையும் கூட விட்டு வைக்கவில்லை.

காம மயக்கத்தோடு பிறன் மனைவியை நோக்கும் நோக்கமே ஒழுக்கக் கேட்டிற்கு வழி வகுக்கிறது. அவ்வாறு நோக்காமல் வாழ்வதைத் திருவள்ளுவர் போற்றிக் கூறுகின்றார்.

**"பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு**

**அறன்ஒன்றோ ஆன்ற ஒழுக்கு! "** -32.

என விளக்குகிறார்.

சிவவாக்கியரும் தம்பாடலில் இக்கருத்தினை வலியுறுத்துகிறார்.

**"மையடர்ந்த கண்ணினால்**

**மயங்கிடும் மயக்கிலே**

**மையிறந்து கொண்டு நீங்கள்**

**அல்லல் அற்றிருப்பீர்கள்**

**மெய்யடர்ந்த சிந்தையால்**

**விளங்கு ஞானம் எய்தினால்**

**உய்யடர்ந்து கொண்டு நீங்கள்**

**ஊழிக் காலம் வாழ்வீரே"** -33.

மை தீட்டிக் கலவிப் போருக்கு அழைக்கின்ற கண்களால் மயக்கும் பெண்களின் மயக்கத்தில் சிக்கித் தவிக்காமல் விட்டு விலகி, அந்த இருளில் இருந்து நீங்கி ஒளியில் சேர்ந்து இறைவனை வணங்கினால் அல்லல் இல்லாமல் வாழலாம். உண்மையை உணர்ந்து சுடர்விட்டு ஒளிரும் ஞானத்தை அடைந்துவிட்டால் பிழைக்கும் வழியை அறிந்து ஊழிக்காலம் வரை வாழலாம் என்கிறார் சிவவாக்கியர்.

அயலான் மனையாள்பால் ஆசை வைப்பது இடர் பலவும் தரும், பிறவி எடுத்ததன் பயன் இன்னது என்று அறியாது அயல் மாதரைச் செல்வத்தாலும், பருவத்தாலும், மயக்கத்தாலும் மயங்கி அழிவுறுவர் பிறன்மனை நயப்போர்,

**"ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே**

**காத்த மனையாளைக் காமுறுங் காளையர்**

**காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்**

**ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாரே! – 34.**

கட்டின மனைவி வீட்டில் இருக்கப் பிறரால் பாதுகாக்கப்படுகின்ற மனையாளை விரும்பும் காளைகள் வீட்டுக் கொல்லையிற் காய்த்துள்ள பலாப்பழத்தை உண்ண மாட்டாமல் காட்டில் பழுத்துள்ள ஈச்சம் பழத்தை அடைதற்குத் துன்பம் அடைந்தார் போல என்கிறார் திருமூலர்.

கொலை புரிதலைப் போலவே, பிறர் மனைவியை விரும்புதலும் தீய செயல்,

**"திருத்தி வளர்த்ததோர்**

**தேமாங் கனியை**

**அருத்தமென் றெண்ணி**

**அறையில் புதைத்துப்**

**பொருத்தம் இலாத**

**புளிமாங் கொம்பேறிக்**

**கருத்தறி யாதவர்**

**காலற்ற வாறே!"-35.**

இங்கு மாங்கனி என்பது தான் மணந்த மனைவி, புளிமா என்பது பிறருடைய மனைவி.

ஒழுங்கு படுத்தி வளர்க்கப் பெற்ற தேமாவின் கனியை, தமக்கும் பொருளாவது என்று எண்ணி உண்ணாமல் அறையில் புதைத்து வைத்துவிட்டு, தமக்குச் சிறிதும் பொருந்துவதல்லாத புளிமா மரத்தின் சிறு கிளையில் ஏறி ஒழுக்கத்தின் உண்மைக் கருத்து இன்னதென்று அறியாது. மயங்குவோர் வழியற்று விழிப்பர். அதுவுமல்லாமல் புறத் தொழுக்கம் உடையார்க்குச் சந்ததியற்றும் போதல் இயல்பு என்கிறார் திருமூலர்.

**"இலைநல வாயினும் எட்டி பழுத்தால்**

**குலைநல வாங்கனி கொண்டுண லாகா**

**முலைநலங் கொண்டு முறுவல்செய் வார்மேல்**

**விலகுறு நெஞ்சினை வெய்துகொள்ளீரே!"** -36.

பொதுமகளிர் பரத்தையர் எனப்படுவர். இவர்கள் இருமனப்பெண்டிர் என்பர். இவர்களுக்கு உள்ளத்தன்பு ஒருபோதும் இராது.

இவர்கள் தம் புறத்தொழிலால் ஆடவர் நெஞ்சத்தை நஞ்சூட்டி மயக்குறுவர். அவர்களிடம் மயங்கிவிட்டால் போதும்! தேனில் விழுந்துழலும் ஈப்போலவும், விளக்குட்பட்ட விட்டில் போலவும், பரிச இன்பத்துக்குட்பட்ட மதயானை போலவும் துன்புறுதல் ஒருதலையாம். ஆதலால் இவர்களை எட்டிப் பழம் போல கருதிவிட வேண்டும்.

மணிமேகலையில் சீத்தலைச் சாத்தனார் இப்பரத்தையர்களைப் பற்றிக் கூறுகிறார்.

**"ஆதிரை கணவன் ஆயிழை! கேளாய்!**

**சாதுவன் என்போன் தகவிலன் ஆகி,**

**அணியிழை தன்னை யகன்றனன் போகிக்**

**கணிகை யொருத்தி கைத்தூண் நல்க,**

**வட்டினும் சூதினும் வான்பொருள் வழங்கிக்**

**கெட்ட பொருளின் கிளைகே டுறுதலிற்**

**பேணிய கணிகையும், பிறர்நலங் காட்டிக்**

**காண மிலி யெனக் கையுதிர்க் கோடலும்," -37.**

ஆதிரையின் கணவன் சாதுவன் மனையறம் காக்கும் தகுதியே இல்லாதவனாயினான். அணியிழையாளான ஆதிரையைக் கைவிட்டுப் போய்க் கணிகை ஒருத்தி உணவினைத் தரவும், உண்டு, வட்டாடலினும் சூதாடலினும் தன் மிகுதியான பொருளனைத்தையும் இழந்தான். பொருளினை சாதுவன் இழந்ததினால் அக்கணிகையின் உறவுப் பிணிப்பும் சிதைந்து போயிற்று.

அவனை அதுவரை பேணிய கணிகையும், பிறரின் செல்வ நலங்களைக் காட்டி, "பொன் இல்லாதவன்," எனப் பழித்து அவனைக் கைகழுவி விட்டாள் மணிமேகலை.

எட்டிப் பழம் பார்ப்பதற்கு மிகவும் கவர்ச்சியாக இருக்கும். ஆனால் அதனை உண்ண முடியாது. அதன் கசப்புச் சுவையை எண்ணி அதன் ஆசையை விடுவர். அதுபோலத்தான் கவர்ச்சியான தோற்றத்தைக் காட்டும் மகளிர் மேல் செல்லும் ஆசையை அதன் விளைவு கருதிவிட வேண்டும்.

**4.9 வினைப்பயன்:**

முந்தைப் பிறவியில் செய்த நல்வினைகளின் பயனை அனுபவிக்கவும், தீவினைகளின் விளைவை ஏற்கவுமே மறுபிறவி அமைகிறது. ஊழ் வினைகளில் கணக்குகளைத் தீர்ப்பதற்காகவே அடுத்த பிறவி அமைகிறது.

ஒருவனுடைய மனத்தையும், சொல்லையும், செயலையும் பொறுத்தே அடுத்த பிறவி நல்வினையாவதும், தீவினையாவதும் அமைகிறது.

நல்வினைகளின் பயன் புண்ணியம். தீவினைகளின் பயன் பாவம். நம்முடைய வினைக்கேற்பவே தொழில், வசிப்படம், உணவுப்பழக்கம் முதலியன அமைகின்றன.

ஒருவன் நல்லது செய்ய முற்படும்போது முட்டுக்கட்டை வருவதும், முயற்சிகளில் இடையூறு விளைவிப்பதும், வரவேண்டிய சுகபோகங்களைக் கிடைக்க வொட்டாமல் செய்வதும், வலிமையை இழக்கச் செய்வதும் வினைகளால் ஏற்படுகின்றன.

**சிவவாக்கியர் பாடலில் வினைப்பயன்:**

சிவவாக்கியர் கூறுகிறார் என் ஆன்மா கருவில் கலந்தபோதே நான் இறைவனை கண்டேன். என்னுடைய வளர்ச்சிக் கட்டம் ஒவ்வொன்றிலும் இறைவனை நான் உணர்ந்தேன் என்கிறார்.

**"கருக்கலந்த காலமே கண்டுநின்ற காரணம்**

**உருக்கலந்த போதலோ உன்னை நானுணர்ந்தது**

**விரிக்கிலென் மறைக்கிலென் வினைக்கிசைந்த போதெலாம்**

**உருக்கலந்து நின்றபோது நீயும் நானும் ஒன்றலோ" -38.**

மக்கட் பிறவியின் பயன் இறைவனுடன் கலந்து விடுதல். வினைக்கு இசைந்தபோது இறைவன் உருவமும் என் உருவமும் ஒன்று கலந்து நின்ற போது இறைவனும் நானும் ஒன்று என்னும் நிலை உண்டாகும் என்கிறார் சிவவாக்கியர்.

**"இருக்க வேணு என்ற போது**

**இருக்கலாம் இருக்குமோ**

**மரிக்க வேணும் என்றலோ**

**மண்ணுளே படைத்தனர்**

**சுருக்கமற்ற தம்பிரான்**

**சொன்ன அஞ்செழுத்தையும்**

**மரிக்கு முன் வணங்கிடீர்**

**மருந்தெனப் பதங்கொடீர்" – 39.**

இந்த உலகில் நாம் வாழவேண்டும் என்று உறுதியாக நினைத்தகாலம் எல்லாம் உயிரோடு வாழமுடியாது. ஏனெனில் நம் உடல் நம் வசமில்லை. நாம் பிறந்து இறந்து போவதற்கல்லவா நம்மை இவ்வுலகில் இறைவன் படைத்தள்ளான்.

நாம் முன் பிறவியில் செய்த வினைகளின் பயனை அறுவடை செய்யும் கால அளவு தான் நாம் இந்த உலகில் வாழ முடியும்.

‘‘வினைதான் ஒழிந்தால் தினைப்போதளவும் நில்லாது’’ என்கிறார் பட்டினத்தடிகள். எனவே இறைவனின் உபதேச மொழிகளாகிய அஞ்செழுத்தையம் நீங்கள் உங்கள் உயிர்ப்போகும் முன்னதாகவே வணங்கி சாவாமருந்தாம் அமிழ்தமாம் சிவனை ஏத்துவீர் என்கிறார் சிவவாக்கியர்.

**“கருவினிற் கருவதாய்**

**எடுத்த ஏழு தோற்றமும்**

**இருவினைப் பயத்தினால்**

**பிறந்திறந்து உழன்றிடும்**

**மறுவினை பிறவி மூன்றும்**

**காலமும் வகுத்த பின்**

**உறுவினைப் பயனிதென்று**

**உணர்ந்த ஞானி சொல்லுமே” – 40.**

மாதா கருப்பையில் கருவாகத் தங்கி வளர்ந்து அதன் பயனாகி எடுத்த ஏழு வகைப் பிறவிகளாம் மக்கள், தேவர், விலங்கு, பறப்பன, நீர்வாழ்வன, தாவரம் என்னும் ஏழுவகைத் தோற்றங்களும் நல்வினை, தீவினைப் பயன்களாகி பலப்பல பிறவிகளே பிறந்து இறந்து மறுபடி பிறந்து இறந்து உழலும் படியான மறு வினையால் உண்டாகும் மக்கள், தேவர், நரகர் எனும் முப்பிறவிகளும் இதற்கான காலங்களும் வகுத்து அடைந்த பின்னர் இவை யாவுமே நம்மை வந்தடையும் வினைப் பயனேயாம் என்று நன்குணர்ந்த ஞானிகள் கூறுவார்கள் என்கிறார் சிவவாக்கியர்.

**“கண்டு நின்ற மாயையும்**

**கலந்து நின்ற பூதமும்**

**உண்டு உறங்குமாறும் நீர்**

**உணர்ந்திருக்க வல்லிரேல்**

**பண்டையாறு மொன்றுமாய்ப்**

**பயந்தவேத சுத்தனாய்**

**அண்ட மூர்த்தி யாகிநின்ற**

**ஆதி மூலமூலமே! – 41.**

பண்டைய முற்பிறவியிலே செய்த வினைகள் இப்பொழுது நாம் அனுபவித்தற் கேற்றவாறு அவை நம்மை நோக்கி இங்கு வந்தடைந்ததைக் கண்டு நம் எதிரே நின்று நம்மை மயக்குகின்ற மாயையையும் அதற்கேற்றவாறு அம்முன் வினைகளை அனுபவிக்கப் பிறந்த, ஐம்புலன்களின் சேர்க்கையாம் இவ்வுடம்பையும் முதலில் உணர்தல் வேண்டும். மேற்கூறிய வினைப்பயன்களை யெல்லாம் உண்டு அனுபவித்துத் தீர்த்தல் வேண்டும். அதன்பின் தூங்காமல் தூங்கும் யோக நித்திரையில் ஆழ்தல் வேண்டும். இவைகளில் ஒருவர் சிறந்தவராக இருந்தால் அறுவகை சமயத்தோர்க்கும் வீடுபேறாய் நிற்பவனும் முழு முதற்கடவுளுமான சிவன் நின்று காட்சி தருவான் என்கிறார் சித்தர்.

**குதம்பைச்சித்தர் பாடலில் வினைப்பயன்:**

முந்தைய பிறவியில் செய்யும் நல்வினை, தீவினை பலன்கள் இப்பிறவியில் வ்நது சேரும். ஆனால் பெற்றோர் செய்த பாவ புண்ணிய பலன்கள் வந்து சேராது. அதே போன்று பிள்ளைகள் செய்த தருமபலன்கள் பெற்றோரைச் சென்றடையாது என்கிறார் குதம்பைச் சித்தர்.

அவரவர் வினை அவரவரையே சாரும் என்கிறது குதம்பைச் சித்தர் பாடல்.

**“தந்தைதாய் செய்தவினை சந்ததிக்கு ஆமென் பார்**

**சிந்தை தெளிந்திலரே குதம்பாய்**

**சிந்தை தெளிந்திலரே**

**பிள்ளைகள் செய்த தன்மம் பெற்றோர்க்கு உறுமென்றால்**

**வெள்ளறிவு ஆகுமடி குதம்பாய்**

**வெள்ளறிவு ஆகுமடி" – 42**

என்னுடை பெற்றோர்கள் செய்த புண்ணியம் என்னை காக்க வில்லையே என்று யாராவது புலம்பினால் அது அறியாமை. 'என்னுடைய பெற்றோர் செய்த பாவத்தால் நான் துன்பங்களை அனுபவிக்கிறேன்' என்று யாரேனும் வருந்தினால் அதுவும் அறியாமை. 'இது எனது வினையின் பயன்' என்று உணர்வொர் தெளிந்த அறிவுடையவர்.

**கம்பளிச் சட்டை முனி கூறும் வினைகளின் தாக்கம்:**

அவரவர் தத்தம் வினைப்பயன்களை அனுபவிக்க வேண்டியவர்களாயிருக்கிறார்கள். ஞானியர்க்கு அப்படியில்லை என்கிறார் கம்பளிச் சட்டை முனி ஒருவருடைய சரியை, கிரியை வழிபாட்டு முறைகள் அவரவருடைய முன் பிறவிச் சார்பால் வருகின்றன. யோகமும் ஞானமும் சித்தருக்குத் தாமே வந்தமைகின்றன. ஆகாமியம், சஞ்சிதம், பிராப்தம் என்ற வினைகள் மூன்றும் ஞானம் பெற்றவருக்கு இடையூறு செய்வதில்லை என்கிறார் முனிவர்.

**"ஒத்து நின்ற சரியையொடு கிரியை ரண்டும்**

**உறவாதி செய்தவம்பா நன்றாய்க் கேளு**

**பத்தி நின்ற யோகம் முதல் ஞானம் ரண்டும்**

**பாங்காகச் சித்தருக்கே அடுத்த வாறே**

**அத்தி நின்ற ஆகாம்ய அஞ்சித பிராரத்வம்**

**ஆருக்கு மடுக்குமென்றால் யோகம் எய்தி**

**முத்தி நின்ற ஞானத்திற் புகுந்தோர்க்கு ஐயா**

**மூன்ற மிலை பிரபஞ்சம் முழுதும் போச்சே" -43.**

என்கிறது கம்பளிச் சட்டை முனி என்ற சித்தரின் பாடல்.

**“வினைகள் சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் என மூவகைப்படும்.**

ஓவ்வொரு ஆன்மாவின் கீழ்க்கணக்கிலும் ஒரு பெரிய வினைக்குவியல் இருக்கிறது. அதற்கு ‘சஞ்சிதம்’ என்று பெயர்.

ஆன்மா பூலோகத்தில் மானிடப் பிறவி எடுக்கும்பொது சஞ்சித கா்மத்திலிருந்து ஒரு பகுதியை வாழ்நாளில் கரைத்து விடுவதற்காகக் கொடுக்கப்படுகிறது. அந்தப்பகுதி கா்மத்திற்கு ‘பிராரப்தம்’ என்று பெயர்.

ஆன்மா மானிடனாக வாழும் நாட்களில் சோ்த்துக் கொள்ளும் வினைக்கு ‘ஆகாமியம்’ என்று பெயர்’’ -44.

இந்த மூவகை வினைகளும் ஞானிகளைப் பாதிப்பதில்லை. காரணம் தங்களுடைய ஞான யோகத்தின் மூலம் அவர்கள் பிரபஞ்சத்தையே தழுவிக்கொண்டு விடுகிறார்கள்.

தன்னை உணா்ந்த ஞானியா் பழவினைத் தொடா்பை (சஞ்சிதம்) சிவசிந்தனையால் துண்டித்து விடுகிறாா்கள். மேல் வரும் வினையை (ஆகாமியம்) அவை தோற்றம் பெறும் முன்பே சிதைத்து விடுவா்.

**திருமூலா் கூறும் வினையைக் கடிதல்:**

வினையைக் கடிதல் பற்றித் திருமூலா் பாடுகிறாா்.

**“தன்னையறிந்திடும் தத்துவ ஞானிகள்**

**முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பார்கள்**

**பின்னை வினையைப் பிடித்துப் பிசைவா்**

**சென்னியில் வைத்த சிவனருளா லன்றோ’’ -45.**

தம் தலையில் திருவடி சூட்டி உபதேசித்தருளிய சிவகுருவின் அருள் ஞானத்தால் தம் முதல்வனாகிய இறைவனை இடைவிடாது தியானிக்கும்

சிவஞானிகள் நெடுங்காலமாகத் தங்களைக் தொடர்ந்து பிணித்துள்ள பழவினைத் தொடக்கமாகிய பிணிப்பை அவிழ்த்துக் களைவார்கள்.

உடம்பு முகந்துகொண்ட பிராரப்த வினையை நுகரும் பொழுதே அவற்றிலுள்ள விருப்பு வெறுப்புகளாக வந்து சேரும் ஆகாமிய வினையையும் பற்றிப் பிசைந்து பொடியாகச் சிதறச் செய்வார்கள் சிவஞானிகள்.

தன் உண்மையை உணர்ந்த தத்துவஞானிகள் பழவினையின் பந்தத்தைச் சிவசிந்தனையால் விலக்கி விடுவார்கள்.

சிரசின் மேல் விளங்கும் சிவனது திருவருளாலே மேல்வரும் வினையைத் தோற்றம் எடுக்காமலேயே அழித்து விடுவர் என்கிறார் திருமூலர்.

**பட்டினத்தடிகள் கூறும் வினைப்பயன்**

உடலினின்று உயிர் பிரிந்ததும் உடன் துணையாக வருவது அவரவர்கள் செய்யும் வினைப்பயனே ஆகும். என்கிறார் பட்டினத்தடிகள்.

**“பிறந்தன பிறந்தன பிறவிக டோறும்**

**கொன்றனை யனைத்து மனைத்து நினைக் கொன்றன**

**தின்றனை யனைத்து மனைத்து நினைத் தின்றன**

**பெற்றன யனைத்து மனைத்து நினைப் பெற்றன**

**ஓம்பினை யனைத்துயு மனைத்து நினை யோம்பின**

**செல்வத்துக் களித்தனை தரித்திரத் தழுங்கினை**

**சுவர்க்கத் திருந்தனை நரகிற் கிடந்தனை**

**இன்பமும் துன்பமு மிருநிலத் தருந்தினை**

**ஒன்றொன் றொழியா துற்றனை யன்றியும்” -46.**

நீ பலவாக எடுத்த பிறவிகளிலெல்லாம் பல உயிர்களையும் கொன்றாய்; அவைகளும் உன்னைக் கொன்றன; அவ்வுயிர்களை நீயுண்டாய்; அவைகளும்

உன்னையுண்டன; எல்லாவற்றையும் நீ ஈன்றாய்; அவைகளும் உன்னை ஈன்றன யாவற்றையும் வளர்த்தாய்; அவைகளும் உன்னை வளர்த்தன; செல்வம் வந்துற்ற காலத்து இன்புற்றாய்; வறுமை நேர்ந்த காலத்துத் துன்புற்றாய்; தெய்வலோகத்தில் இருந்தாய்; நரகத்திற் கிடந்தாய் என்கிறார்.

இப்பரந்த உலகத்தில் சுகத்தையும் அனுபவித்தாய்; துக்கத்தையும் அனுபவித்தாய்; ஒவ்வொன்றனையும் விட்டு நீங்காது அதனதன்கண் பொருந்தி அனுபவித்தாய்; என்கிறார் பட்டினத்தடிகள்.

இப்பிறப்பிற் கொலை செய்யப்பட்ட ஒருவனே மறுபிறப்பில் தன்னை முற்பிறப்பிற் கொலை செய்தவனைக் கொலை செய்வன் என்பது போன்ற கருத்துகள் கூறப்படுகின்றன. ''ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும்'' என்று சிலம்பு கூறும் கருத்தினை ஒத்ததாக உள்ளது.

**"வினைப்போக மேயொரு தேகங்கண் டாய்வினை**

**தினைப்போ தளவுநில் லாதுகண் டாய்சிவன் பாதநினை**

**நினைப்போரை மேவு நினையாரை நீங்கிந் நெறியினின்றால்**

**உனைப்போ லொருவருண் டோமன மேயெனக் குற்றவரே- 47**

ஒரு தேக மென்பது முன்னை வினையின் பயனேயாம். அது வினை நீங்கினால் தினையவும் நில்லாது ஆகையால் சிவபெருமான் திருவடிகளைச் சிந்தனை செய்; சிந்தனை செய்வோரைச் சேர்ந் திரு.சிந்தனை செய்யாதவரை விட்டு விலகு. நல்ல நெறியில் நின்றால் மனத்தைப் போல உற்ற துணை வேறு இல்லை என்று வினைப்பயனைப் பற்றி பட்டினத்தடிகள் பாடுகிறார்.

**"அத்தமும் வாழ்வு மகத்துமட் டேவிழி யம்பொழுக**

**மெத்திய மாதரும் விதிமட் டேவிம்மி விம்மியிரு**

**கைத்தல மேல்வைத் தழுமைந் தருஞ்சுடு காடுமட்டே**

**பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே" – 48.**

பொருளும் அதனாலுண்டாகும் வாழ்வும் வீட்டளவிலேயே நின்றுவிடும். மிகுதியாகச் சூழ்ந்திருந்த மனைவி முதலிய பெண்களும் கண்களில் நீர்சிந்தத் தெருவளவிலேயே நின்று விடுவார்கள். இரண்டு கைகளையுந் தலைமேல் வைத்துத் தேம்பித் தேம்பியழும் பிள்ளைகளும் சுடலையளவிலேயே நின்றுவிடுவார்கள். இரண்டு வினைகளாகிய புண்ணியமும் பாவமுமே பின்பற்றிச் செல்லும். எனவே, உலகத்தில் அறம் செய்ய வேண்டும் என்கிறார் பட்டினத்தடிகள்.

**“அன்றறிவா மென்னாது அறஞ்செய்க மற்றது**

**பொன்றுங்கால் பொன்றாத் துணை” -49.**

என்கிறார் வள்ளுவர்.

ஒவ்வொருவரும் துன்பம் இல்லாமல் இன்பமாக வாழவேண்டும் என்று விரும்புகின்றனர். இவ்வாறு விரும்புவதைத் தவிர அதற்கான உரிய வழியைத் தேடுவதில்லை. துன்பங்கள் தன்னை வருத்தக்கூடாது என்று நினைக்கிறவன் தான் மற்றவர்க்குத் துன்பம் செய்யாமல் வாழவேண்டும். இதுவே இன்பத்திற்கான வழி. ஏனெனில் புறத்தில் தோன்றும் பகை எவ்வளவு பெரும்பகையாக இருந்தாலும் ஒருவாறு ஒடி ஒளிந்து தப்பித்துக் கொள்ளமுடியும்; ஆனால் தீவினை என்கிற பகை நம்மை விட்டு நீங்காமல் தொடர்ந்து வந்து வருத்தியே தீரும்.

ஒருவனுடைய நிழல் எங்குச் சென்றாலும் விடாமல் அடியின் கீழ் தங்கியிருப்பதுபோல் தீமை செய்தவனைத் தீவினை விடாமல் தொடரும். எனவே, தன்னைத்தான் தீங்கு நேராமல் காத்துக்கொள்ள வேண்டுமாயின் தீயசெயல்களைச் சிறிதளவும் செய்யாமல் காத்து வருதல் வேண்டும்.

### 4.10 பொறையுடைமை:

அறிவில்லார் நிந்தனைகளையெல்லாம் காதில் வாங்கிக்கொண்டு பதிலுக்கு நிந்திப்பதனால் பலனில்லை. பொறாமையாலும், மடமையாலும், கோபத்தாலும், விளையாட்டாலும் நிந்திப்போரை நாம் பொருட்படுத்தாமல், அவர்கள் நிந்தனைகளைப் பொறுத்துக் கொள்ளும் மனப் பக்குவம் பெறவேண்டும். இத்தகைய மனப்பக்குவம் எளிதில் கிடைக்காது. இந்த மனப்பக்குவத்தையே பொறையுடைமை என்பர்.

இந்த பொறையுடைமையை ஒருவன் உடைமையாகப் பெற்றிடுவானாயின் அவனை எந்த நிந்தனையும் ஏதும் செய்யாது. பொறுமை கடலினும் பெரிது என்பர்.

நம் உள்ளத்தைப் பொறுமைக் கடலாக்கி விட்டால், பிறர் கூறும் பழிச்சொல். அக்கடலினை எதிர்க்கமாட்டாமல் வலிமையும் வேகமும் குன்றி அடங்கிப்போகும்.

இறைவனை அடைய விரும்புபவர்க்குப் பதட்டம் கூடாது. பொறுமையே தேவை. இறைவன் எங்கும் நிறைத்திருக்கும் ஒப்பில்லாதவன். நமக்கு உணவை அளிப்பவன். தேவர்கட்கு அரசனாக இருப்பவன், என்று நினைக்க நினைக்க நம் உள்ளத்தில் பொறுமை அரும்பும். இறைவன் நம்மை விரும்புவான். இதன் பயனாக நாம் இறைவரின் அருளை அடையலாம்.

**“ஓலக்கம் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்**

**பாலொத்த மேனியன் பாதம் பணிந்துய்ய**

**மாலுக்கும் ஆதி பிரமற்கும் மன்னவன்**

**ஞாலத் (து) இவர்மிக நல்லர் என்றானே! – 50.**

“பொறுத்தார்க்குப் பொன்றும் துணையும் புகழ் என்பது தேவர் வாக்கு.

தேவர்கள் பலர் இவ்வாக்குக்கு இலக்கானார் என்று இப்பாட்டில் திருமூலர் விளக்குகிறார்.

தேவர்கள், நம்மிலும் சிற்சில வகைகளில் சிறப்புடையவர் ஆவர். ஆனாலும் பொறாமையடைவதில் நம்மை ஒத்தவரே ஆவர்.

தேவர்களில் மிகவும் சிறப்புடையவர்கள் திருமாலும், பிரமனும் என்பர், இந்த உலகத்தைப் படைப்பதற்காகவும் காப்பதற்காகவும் சிவனால் படைக்கப்பட்டவர்கள்.

இருப்பினும் எல்லாத் தேவர்களும் சிவபெருமானின் பெருமையைக் கண்டு பொறாமை கொள்வர். இவர்களின் பொறாமையால் விளைந்ததுதான் ‘அடிமுடி கண்ட செய்தி’, தக்கயாகச் செய்தி போன்றவை.

சிவபெருமானிடம் ஒறுப்புண்ட பின்னர் உணர்ந்து திருந்துவர். அதன்பிறகு சிவனை மதித்து அவனது திருஓலக்கத்தை அடைவர். இறைவனை வழிபடுவர் வரம் பெறுவர். பெருமான் இத்தேவர்களின் பொறுமை கண்டு உவந்து நீண்ட ஆயுள் அடைய வாழ்த்துவர்.

பொறுமையைப் பொற்றுகின்றவர் நிலத்தைப் பார்த்துக் கற்கவேண்டும். நிலம் தன்னைத் தோண்டுகின்றவரையும் பொறுத்துக்கொண்டு விழாமல் தாங்கிக் கொள்கிறது.

அதனால் நிலத்தின் ஆற்றல் குறைவதில்லை. அதுபோல் தம்மை இகழ்வாரைப் பொறுத்தக் கொள்வதே சிறந்த அறமாகும்.

**“அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை**

**இகழ்வார்ப் பொறுத்தல் தலை” -51.**

என்கிறார் வள்ளுவர்.

**4.11 பட்டினத்தடிகள் காட்டும் பொல்லாதவர்களின் இலக்கணம்**

பட்டினத்தடிகள் மக்களாகப்பிறந்தோர் தீயநெறிகளைக் கடை பிடிக்கக் கூடாது என்கிறார்.

**“பொல்லா தவனெறி நில்லா தவனைம் புலன் கடமை**
**வெல்லா தவன் கல்வி கல்லா தவன்மெய் யடியவர்பாற்**
**செல்லா தவனுண்மை சொல்லா தவனின் திருவடிக்கன்**
**பில்லா தவன்மண்ணி லேன்பிறந் தேன்கச்சி யெகம்பனே”** -52.

பட்டினத்தார் திருக்காஞ்சியிலெழுந்தருளியுள்ள ஏகாம்பர நாதனைப் பார்த்துக் கூறுகிறார். நான் கொடியவன். சன் மார்க்கத்தில் ஒழுகாதவன். ஐம்புலன்களையும் அடக்கத்தெரியாதவன்; ஞானநூல்களைப் படியாதவன்; உண்மை அடியவர்களிடம் சேராதவன்; மெய் பேசாதவன்; இறைவனின் திருவடியில் அன்பில்லாதவன். இத்தகைய தன்மையுடைய நான் பூமியில் பிறந்தது தவறு என்கிறார் பட்டினத்தடிகள்.

உண்மையில்லாதவன், பொல்லாதவன், நன்னெறி நில்லாதவன், புலன்களை வெல்லாதவன், கல்வி கல்லாதவன், மெய்யடியார்பால் செல்லாதவன் இவையெல்லாம் பொல்லாதவர்களின் இலக்கணமாகப் பட்டினத்தார் கூறுகிறார்.

இதே கருத்து நாவுக்கரசரின் திருத்தாண்டகத்திலும் காணப்படுகிறது.

**“குலம்பொல்லேன் குணம்பொல்லேன் குறியும் பொல்லேன்**
**குற்றமே பெரிதுடையேன் கோல மாய**
**நலம் பொல்லே னான்பொல்லேன் ஞானி யல்லே**
**னல்லாரோ டிசைந்திலே னடுவே நின்ற**
**விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தே னல்லேன்**
**வெறுப்பனவு மிகப்பெரிதும் பேச வல்லேன்**
**இலம் பொல்லே னிரப்பதே யீய மாட்டே**
**னென்செய்வான் றோன்றினே னேழை யேனே”** – 53.

என்று கூறுகிறார் நாவுக்கரசர்.

## 4.12 திருமூலர் கூறும் அருஞ்செயல்கள்:

உலக வாழ்வில் மனிதன் கடைப்பிடிக்கக்கூடிய அருஞ்செயல்களை முறைப்படுத்திக் கூறுகிறார் திருமூலர்.

**“கொல்லான் பொய் கூறான் களவிலான் எண்குணன்**
**நல்லான் அடக்கமுடையான் நடுச்செய்ய**
**வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்**
**இல்லான் இமயத் திடை நின் றானே”** - 54.

யோகங்களில் இயமம் என்பது பெரும் பாலும் தீயனவற்றில் மனம் செல்லாது கட்டுப்படுத்துதல் என்பதாகும்.

ஓர் உயிரைக் கொல்லாதவனும், பொய் கூறாதவனும் திருடாதவனும் எண்குணங்களை உடையவனும், அடக்கமுடையவனும், நீதிவழுவாதவனும், பகுத்துண்பவனும், குற்றமற்றவனும், கள் காமமாகிய தீய குணங்கள் இல்லாதவனும் ஆகியவனே இயமம் மேற்கொள்ளத் தக்கவனாவான்.

எண்குணங்கள் என்று கூறப்படுவது. தன் வயத்தனாதல் தூய உடம்பினாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், பேரருள் உடைமை, முடிவிலாற்றுலுடைமை வரம்பிலின்பமுடைமை போன்றவையாகும்.

உயிரை உடம்பினின்றும் பிரிப்பதே வெளிப்படத்தெரிந்த கொலையாகும். உண்மையாக நோக்குவார்க்கு ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாகச் சொல்லப்படும் எவ்வகை உயிர்க்கும் சிறிய, துன்பம் இழைப்பதும் கொலையேயாம்.

கொலை, களவு செய்பவனும், பொய் கூறுபவனும் மன அமைதியொடு இருக்க முடியாது.

கள்ளுண்பவனும், காம வேட்கையுடையவனும், மனவெறியுடையவராதலின் அவரும் யோகம் புரியத் தகுதியில்லாதவராவார்.

ஆகவே, இத்தீமைகளை நீக்கியவனும், ஆராய்ந்து தெரிந்தவனும், மன அடக்கமுடையவனும், ஈத்துவக்கும் இன்பமுடையவனும், மனத்துக்கண் மாசு இல்லாதவனுமே யோகத்துக்குரிய தகுதி பெற்றவனாவான்.

## 4.13 கடுவெளிச்சித்தர் பாடல்களில் நல்லறிவுரைகள்

கடுவெளிச்சித்தர் தம் பாடலில் மக்கள் செய்யத்தக்கன, செய்யத்தகாதன பற்றிப் பட்டியிலிட்டுக் கூறுகிறார்.

**“பாபஞ்செய்யாதிரு மனமே! – நாளைக்**

**கோபஞ் செய் தேயமன் கொண்டோடிப் போவான்” -55.**

கடுவெளிச் சித்தர் மனத்திற்குக் கூறுகிறார். மனமே! உயிர்களைத் துன்புறுத்தும் பாவமான செயலைச் செய்யாதே அப்படிப்பட்ட செயலைச் செய்வாயானால் எமன் உன்மீது கோபங் கொண்டு உயிரைக் கொண்டு சென்று விடுவான்.

ஒருவரை வார்த்தைகளால் சபிக்கக் கூடாது என்கிறார் கடுவெளிச்சித்தர்.

**“சாபம் கொடுத்திட லாமோ ? – விதி**

**தன்னைநம் மாலே தடுத்திட லாமோ?**

**கோபந் தொடுத்திட லாமோ? - இச்சை**

**கொள்ளக் கருத்தைக் கொடுத்திட லாமோ?” -56.**

என்கிறார் சித்தர்.

ஒருவரை கேடு சூழ் மொழிகளால் சபிக்கக் கூடாது. ஒருவரைச் சபிப்பதால் அவருக்கு விதிக்கப்பட்ட விதியை மாற்ற முடியாது. அதனால் கோபம் கொள்ளாது ஆசையைத் தூண்டும் எண்ணத்தை மேற்கொள்ள வேண்டாம்.

ஒருவன் செய்த செயலின்படி அவன் நலமாக வாழ்வான் என்று இறைவன் வகுத்த விதி இருக்குமானால் அவன் நலமாகவே வாழ்வான். அவனைப் பார்த்து ‘‘நீ நாசமாய் போவாய்’’ என்று சபிப்பதால் அவனுக்கு அந்த சாபம் எதுவும் செய்யாது. இறைவனின் தீர்ப்புக்கு முன் சாபத்தால் எதுவும் செய்ய முடியாது. எனவே, யாருக்கும் சாபம் கொடுக்க வேண்டாம்.

**“தூடண மாகச்சொல் லாதே, தேடுஞ்**

**சொத்துக்க ளிலொரு தூசும்நில் லாதே;**

**ஏடணை மூன்றும்பொல் லாதே! – சிவத்**

**திச்சைவைத் தாலெம லோகம்பொல் லாதே”** -57.

யாரையும் ஏளனமாகப் பேசக்கூடாது. அப்படிப் பேசினால் உள்ள சொத்தில் ஒரு தூசி அளவு கூட நிலைக்காது. ஏடணையாகிய மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகிய மூன்றும் பொல்லாதவை. சிவபெருமானை அன்பு கொண்டு வணங்கினால் எமலோகம் நம்மை நெருங்காது.

**“மாவேழ் சனனங் கெடமா யைவிடா**

**மூவேடணை யென்று முடிந்திடுமோ**

**கோவே குறமின் கொடிதோள் புணருந்**

**தேவே சிவசங்கர தேசிகனே”** -58

இவ்வாறு மூவேடணைப் பற்றி அருணகிரிநாத சுவாமிகள் கந்தர் அனுபூதியில் கூறுகிறார்.

**“நல்லவர் தம்மைத்தள் ளாதே; - அறம்**

**நாலெட்டில் ஒன்றேனும் நாடித்தள் ளாதே**

**பொல்லாங்கில் ஒன்றுங்கொள் ளாதே; - கெட்ட**

**பொய்ம் மொழிக் கோள்கள் பொருந்தவிள் ளாதே” -59.**

உத்தமர்களான பெரியோர்களின் உறவினை விட்டு விடக்கூடாது. தருமங்கள் முப்பத்திரண்டில் ஒன்றைக்கூடத் தவறவிடக்கூடாது. தீமையானவைகளில் ஒன்றைக்கூடப் பின்பற்றக் கூடாது. கெடுதலான பொய் பேசுதல், கோள் சொல்லுதல் இவற்றை நீக்கிவிடவேண்டும்.

**32அறங்கள்**

1. மருத்துவசாலை அமைத்தல்
2. ஒதுவார்க்கு உணவு அளித்தல்
3. அறசமயத்தோர்களுக்கு உணவு கொடுத்தல்
4. பசுவிற்கு உணவிடுதல்
5. சிறையிலே உள்ளோர்க்கு உணவு தருதல்
6. பிச்சையிடுதல்
7. தின்பண்டம் அளித்தல்
8. அனாதைக்குச் சோறிடுதல்
9. மகப்பெறுவித்தல்
10. மகவு வளர்த்தல்
11. மகப்பால் வார்த்தல்
12. அனாதைப் பிணம் சுடல்
13. அனாதைக்கு ஆடை வழங்கல்
14. சுண்ணாம்பு தருதல்
15. நோய்க்கு மருந்து அளித்தல்
16. வண்ணார்க்கு உதவுதல்
17. நாவிதற்கு உதவுதல்
18. கண்ணாடி தருதல்
19. காதோலை தருதல்

20. கண்மருந்து தருதல்
21. தலைக்கு எண்ணெய் கொடுத்தல்
22. பெண் போகம் அளித்தல்
23. பிறர் துயர் துடைத்தல்
24. தண்ணீர்ப் பந்தல் அமைத்தல்
25. மடம் கட்டுதல்
26. குளம் வெட்டுதல்
27. சோலை அமைத்தல்
28. ஆவுரிஞ்சு தறி அமைத்தல்
29. விலங்கிற்கு உணவு கொடுத்தல்
30. ஏறு விடுத்தல்
31. விலை கொடுத்து உயிர் காத்தல்
32. கன்னிகா தானம் செய்தல்”-60.

இவையே 32 அறங்களாக தி.நா. அங்கமுத்து முதலியார் கூறுகிறார்.

**“வேத விதிப்படி நில்லு; - நல்லோர்**
**மேவும் வழியினை வேண்டியே செல்லு;**
**சாத நிலைமையே சொல்லு; - பொல்லாச்**
**சண்டாளக் கோபத்தைதச் சாதித்துக் கொல்லு “ -61.**

மறை நூல்களில் கூறப்பட்ட வழிகளில் செல்லவேண்டும். பெரியோர்கள் காட்டிய வழிகளில் விருப்புடன் செல்ல வேண்டும். மன அமைதி தரும் வார்த்தைகளையே சொல்ல வேண்டும். கொடுமையான கோபத்தை அழித்து ஒழிக்கவேண்டும்.

**“பிச்சையென்று ஒன்றும் கேளாதே – எழில்**
**பெண்ணாசை கொண்டு பெருக்கமா ளாதே**
**இச்சைய துன்னையாளாதே – சிவன**
**இச்சை கொண்ட தவ்வழி யேறிமீ ளாதே” -62.**

ஒரு பொருளையும் பிச்சையாக யாசிக்கக் கூடாது. அழகிய பெண்மீது ஆசை கொண்டு அழிந்து போகக் கூடாது. ஆசை உன்னை ஆளாமல் பார்த்துக்கொள். இறைவனாகிய சிவத்தின் மீது பற்றுகொண்டு அவ்வழி மாறாமல் பக்திகொள்.

**“மெய்க்குரு சொற்கட வாதே – நன்மை**

**மென்மேலுஞ் செய்கைமிக அடக் காதே**

**பொய்க்கலை யால்நட வாதே – நல்ல**

**புத்தியைப் பொய்வழி தனில் நடத்தாதே” -63.**

உண்மையான ஆசிரியரின் சொல்லை மீறக்கூடாது. நன்மைதரக்கூடிய செயலை நிறுத்திவிடக்கூடாது. இருட்டில் நடக்கக்கூடாது. நல்ல புத்தியைப் பொய்யான வழியில் செலுத்தக்கூடாது.

வாழ்வும் தாழ்வு வண்டியின் இருசக்கரங்கள் போன்றவை. நல்வினை, தீவினை உடையது இந்த வாழ்க்கை. மரணம் என்பது ஒருநாள் வந்தே தீரும். இறைவன் திருவடியை அடைந்தால் மரணமிலாப் பெருவாழ்வு வாழலாம் என்கிறார்.

**“காசிக்கோ டில்வினை போமோ? அந்தக்**

**கங்கையா டில்கதி தானுமுன் டாமோ**

**பேசும் உன் கன்மங்கள் சாமோ? – பல**

**பேதம் பிறப்பது போற்றினும் போமோ?”-64.**

காசி என்னும் புண்ணியத்தலத்திற்குச் சென்றால் நல்வினை, தீவினைகள் போய்விடாது? அந்த கங்கையான புண்ணியநதியில் குளிப்பதால் மட்டும் நற்கதி கிடைத்துவிடாது. பேசுவதால் வினைகள் அழிந்துவிடாது? நமக்கு வருபவை துதித்தாலும் போகாது.

புண்ணிய நதிகளில் குளிப்பதால் மட்டும் பாவங்கள் போய் விடாது. நல்லதையே செய்து இறைவனை வழிபடு என்கிறார்.

**“பாம்பினைப் பற்றி யாட்டாதே – உன்றன்**

**பத்தினி மார்களைப் பழித்துக் காட்டாதே**

**வேம்பினை உலகிலூட்டாதே; உன்றன்**

**வீறாப்பு தன்னை விளங்க நாட்டாதே”.65.**

பாம்புகளைப் பிடித்து ஆட்டங் காட்டக்கூடாது. உனது மனைவியை இழித்தும், பழித்தும் பிறரிடம் கூறக்கூடாது. கசப்பான கருத்துகளை உலக மக்களிடம் திணிக்கக்கூடாது. உன்னுடைய வீறாப்பினை வெளிக்காட்டக் கூடாது.

இவ்வாறு கடுவெளிச்சித்தர் மக்களுக்கு நல்லறிவுரை கூறுகிறார்.

### 4.14 பசித்துன்பம்

பசியினுடைய கொடுமையை அழுகணிச்சித்தர் பாடுகிறார்.

**"கொல்லன் உலையோலக் கொதிக்குதடி என்வயிறு**
**நில்லென்று சொன்னால் நிலைநிறுத்தக் கூடுதில்லை**
**நில்லென்று சொல்லியல்லோ நிலைநிறுத்த வல்லார்க்குக்**
**கொல்லென்று வந்தமன் என் கண்ணம்மா**
**குடியோடிப் போகானோ" – 66.**

கொல்லனுடைய உலை போலக் கொதிக்கிறது என் வயிறு. இப்படிப்பட்ட வயிற்றுடன். வாழ்வதே வேதனையாக உள்ளது. இப்பசித்துன்பத்தைப் போக்க உபதேசம் கிடைக்குமானால் எமனையே ஓட்டம் பிடிக்கச் செய்து விடுவேன்.

உடம்பை வளர்ப்பதற்காகவே உணவு உண்டேன் என்கிறார் திருமூலர்.

**"உடம்பை வளர்க்கு முபாய மறிந்தேன்**
**உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த்தேனே" -67.**

என்கிறார்.

"பட்டினத்தடிகள் கொங்குநாட்டில் தங்கியிருந்தபோது ஒருநாள் ஒருவன் வீட்டையடைந்து பிச்சையேற்ற காலத்து, அவ்வீட்டுக்காரன் சுவாமிகளைக் கள்வனெனக் கருதிப் புடைத்தனன். அது கண்ட எதிர்வீட்டுககாரன் சுவாமிகளை அழைத்துச் சென்று உபசரித்து அன்னமிட்டனன்" -68.

அது காலை அடிகள் பாடிய பாட்டு. இ∴தெனக் கூறுகிறார் தி.ரு.வி.க.

**"பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்**
**காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல**
**சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தை கெட்டுச்**
**சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே" -69.**

ஒரு சாண் வயிற்றை வளர்க்க அடியேன் படும் துயரம் கொஞ்ச நஞ்சமல்ல. நான் படும் துயரம் தரித்துக்கொள்ளும் ஆபரணங்களுக்காக அல்ல; பொருளைக் குறித்து அல்ல; நிலங்களைக் கொள்ளும் பொருட்டல்ல; பெண்கள் நிமித்தம்

அல்ல; அழகிய பொருள்களைக் கண்டு களித்தற்கு அல்ல; ஆகாயங் கடந்து விளங்குஞ் சிவபெருமான் திருவடிக்கும் அல்ல; என் வயிற்றுக்காகவே நான் படும் துயரமெல்லாம் என்கிறார் பட்டினத்தடிகள்.

**“இருக்கு மிடந்தேடி யென்பசிக்கே யன்னம்**

**உருக்கு முடன் கொண்டுவந்தா லுண்பேன் - பெருக்க**

**அழைத்தாலும் போகே னரனே யென்தேகம்**

**இளைத்தாலும் போகே னினி” -70.**

சிவபெருமானிடம் பட்டினத்தடிகள் வேண்டுகிறார். யான் இருக்கின்ற இடத்தைத்தேடி என்பசிநோய் ஒழியும் பொருட்டு உருக்கமாகச் சோறு கொண்டு வந்தால் புசிப்பேன் அதைவிட்டு தங்களிடம் தேடி வரும்படி வருந்தி அழைத்தாலும் போகமாட்டேன். என் உடல் மெலிந்தாலும் இனிப் போகமாட்டேன் என்கிறார் பட்டினத்தடிகள்.

பசியின் பொருட்டு தாமே இல்லஞ் சென்று இரப்போர் திருவருள் வழி ஒழுகாதவர். திருவருள் வழி நிற்போர் எங்கிருப்பினும் அவர்க்குத் திருவருள் தூண்டுதலால் பலர் தாமே வலிந்து அன்னமிடுவர். உடல்பொருள் அன்னம் மூன்றையும் சிவார்ப்பணம் செய்வோரை காக்கும்கடன் சிவபெருமானுடையது ஆகும்.

பொதுவாக சித்தர்கள் பசியைப் பற்றி அவ்வளவாகப் பாராட்டுவதில்லை. காரணம் சித்தர்கள் பசி உணர்ச்சியையே அறியாதவர்கள்.

தொகுப்புரை:

4.1 ஒழுக்க நெறி :- ஒழுக்கத்தை உயிரைவிட சிறந்ததாகப் போற்றிக் காக்க வேண்டும். குதம்பைச் சித்தர் கூறும் ஒழுக்கம் பற்றிய செய்திகள்.

4.2 ஐம்பெரும்பாவங்கள்:- பொய், களவு, கள், காமம், கொலை ஆகியவை பெரும்பாவங்கள் - திருமூலர் பாடலில் காணப்படும் பஞ்சமாபாதகங்கள். சிவவாக்கியர் பாடலில் காணப்படும் பஞ்சமாபாதகங்கள் - பட்டினத்தார் பாடலில் காணப்படும் பஞ்சமாபாதகங்கள்.

4.3 கொல்லாமை:- கொல்லாமை – ஓரறிவு உயிர் முதல் ஆற்றிவு உயிர்வறை எல்லாப் பிறப்பினங்களிலும் ஒன்றையும் கொல்லாதிருத்தல் - கொலையினால் ஏற்படும் தீமைகள் சிவயோக நெறிகளுள் முதன்மையானது கொல்லாமை.

4.4 புலால் மறுத்தல்: கொல்லாமைக்கு அடிப்படை புலால்மறுத்தல் புலால் உண்போர் இறைவனைச் சேராது நரகிடை சென்று துன்புறுவர்.

4.5 பொய்யாமை: பொய்யாமைத் தவிர புகழ் வேறொன்றில்லை எல்லா அறங்களையும் கொடுக்கும் - பட்டினத்தார் பாடலில் பொய் பற்றிய செய்தி.

4.6 கள்ளாமை: உள்ளத்தால் களவை எண்ணுவதும் தீமை. கடுவெளிச்சித்தர் பாடலில் களவு பற்றிய செய்தி.

4.7 கள்ளுண்ணாமை: கள்ளுண்போர் விலங்குகளைவிட இழிந்தோராவர் - திருமந்திரத்தில் காணப்படும் கள் பற்றிய செய்தி. கடுவெளிச்சித்தர் பாடலில் கள்ளுண்ணாமைப் பற்றிய செய்தி.

4.8 மாதராசையின் இழிவு: உலக ஆசைகள் பலவற்றுள்ளும் கொடுமையானது பெண்ணாசை – காமம் முற்றும் துறந்த முனிவர்களைக் கூட ஆட்டிப் படைக்கிறது – திருமூலர் பாடலில் காணப்படும் காமம் பற்றிய செய்தி.

4.9 வினைப்பயன்: நல்வினைகளின் பயன் புண்ணியம். தீவினைகளின் பயன் பாவம் - வினைக்கேற்பவே ஒருவனுடைய தொழில், வசிப்பிடம் உணவுப்பழக்கம், முதலியன அமையும் - சிவவாக்கியர், குதம்பைச்சித்தர், கம்பளிச் சட்டை முனி,

திருமூலர், பட்டினத்தடிகள்- போன்ற சித்தர்களின் பாடல்களில் காணப்படும் வினைப்பயன் பற்றிய செய்திகள்.

4.10 பொறையுடைமை: பொறுமை கடலினும் பெரிது - இறைவனை அடைய பொறுமை தேவை.

4.11 பட்டினத்தடிகள் காட்டும் பொல்லாதவர்களின் இலக்கணம்: பொல்லாதவன், உண்மையில்லாதவன், ஐம்புலன்களை அடக்காதவன். கல்லாதவன் - மெய்யடியார் பால் செல்லாதவன் இவையெல்லாம் பொல்லாதவர்களின் இலக்கணம்.

4.12 திருமூலர் கூறும் அருஞ்செயல்கள்: கொல்லாமை – பொய்யாமை களவாமை எண்குணன் - அடக்கமுடைமை – பகுத்துண்ணுதல், கள் காமம் போன்ற தீய குணங்கள் போன்றவை.

4.13 கடுவெளிச்சித்தர் பாடல்களில் நல்லறிவுரைகள்:

பாவம் செய்தல், சபித்தல், ஏளனம் பேசுதல், மூவாசைகள் போன்றவற்றை செய்யக்கூடாது என்றல் 32 அறங்களைக் கடைபிடித்தல் - மறை நூல்கள் கூறும் வழியில் நடத்தல் போன்றவற்றை செய்ய வேண்டும் என்றல்.

4.14 பசித்துன்பம்: அழுகணிச் சித்தர், பட்டினத்தார், பாடல்களில் பசி பற்றிய செய்திகள் முதலிய செய்திகள் இவ்வியலில் இடம்பெறுகின்றன.

**அடிக் குறிப்புகள்:**

1. திரு.நா.அங்கமுத்து முதலியார் சித்தர் பெருமக்கள் (வாழ்க்கை வரலாறு) பக்-49.
2. திரு.நா.அங்கமுத்து முதலியார் சித்தர் பெருமக்கள் (வாழ்க்கை வரலாறு) பக்-49.
3. திரு.நா.அங்கமுத்து முதலியார் சித்தர் பெருமக்கள் (வாழ்க்கை வரலாறு) பக்-49.
4. தொல்காப்பியம் - பொருளதிகாரம் - புறம் பா-218.
5. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -200
6. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -17.
7. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் திருத்தில்லை பாடல் எண் -5
8. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் திருத்தில்லை பாடல் எண் -3
9. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் திருத்தில்லை பாடல் எண் -4
10. டாக்டர் முவ – திருவள்ளுவர் (அல்லது) வாழ்க்கை விளக்கம் பக் - 406.
11. திருக்குறள் - குறள் எண் - 321
12. திருக்குறள் - குறள் எண் 323
13. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் - 198
14. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் திருவேகம்பமாலை பாடல் எண் -39
15. திரு.வி.க. பட்டினத்தார் பாடல்கள் - பக் -07.
16. திருக்குறள் - குறள் எண் - 327
17. திருக்குறள் - குறள் எண் - 328
18. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -199
19. திருக்குறள் - குறள் எண் - 329
20. திரு. சம்பந்தம் - திருமூலர் திருமந்திர விருந்து – பக் -127
21. திருக்குறள் - குறள் எண் - 296
22. திருக்குறள் - குறள் எண் - 297
23. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் - தாயாருக்குத்தகன கிரியை செய்கையிற் பாடியது – பாடல் எண்- 40.
24. டாக்டர் மு.வ திருவள்ளுவர் (அல்லது) வாழ்க்கை விளக்கம் பக் -396
25. கடுவெளி சித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -25

26. திருக்குறள் - அறத்துப்பால் - கள்ளாமை – அதிகாரம் -29
27. டாக்டர் மு.வ-திருவள்ளுவர் (அல்லது) வாழ்க்கை விளக்கம் பக் 393
28. கடுவெளி சித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -33
29. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் - 330
30. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் - 326
31. கடுவெளி சித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -29
32. திருக்குறள் - குறள் எண் -148
33. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -61
34. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -201
35. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -202
36. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் -204
37. சீத்தலைச்சாத்தனார் - மணிமேலை – ஆதிரைபிச்சையிட்ட காதை பாடல் (5-10)
38. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனைகள் - பக் -139
39. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -69
40. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனைகள் - பக் -141
41. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -65
42. குதம்பைச் சித்தர் - சித்தர்களின் தியானம், யோகம், ஞானம் - பக் -88
43. கம்பளிச்சட்டை முனி – சித்தர்களின் தியானம், யோகம், ஞானம் - பக் -100
44. சி.எஸ் - தேவநாதன் - சித்தர்களின் தியானம், யோகம், ஞானம் பக-100
45. திரு. சம்பந்தம் - திருமூலர் திருமந்திர விருந்து – பக் 618
46. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் பக்- 30
47. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் திருத்தில்லை பாடல் எண் -47
48. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் திருத்தில்லை பாடல் எண் -54
49. திருக்குறள் -குறள் எண்-36
50. திருமூலர் - திருமந்திரம் - பாடல் எண் 540
51. திருக்குறள் - குறள் எண் 151
52. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் திருவேகம்பமாலை பாடல் எண் -6
53. திருநாவுக்கரசர் - திருத்தாண்டகம் - பாடல் எண் 309
54. திருமூலர் திருமந்திரம் - பாடல் எண் -554
55. கடுவெளிச்சித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பல்லவி

56. கடுவெளிசித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் 1
57. கடுவெளிசித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் 5
58. அருணகிரிநாதசுவாமிகள் - கந்தர் அநுபூதி – பாடல் எண் 39.
59. கடுவெளிசித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் 7
60. தி.நா.அங்கமுத்து முதலியார் சித்தர் பெருமக்கள் (வாழ்க்கை வரலாறு) பக் -57
61. கடுவெளிசித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் 8
62. கடுவெளிசித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் 9
63. கடுவெளிசித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் 11
64. கடுவெளிசித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் 15
65. கடுவெளிசித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் 27
66. அழுகணிச்சித்தர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண 07
67. திருமூலர் - திருமூலர் திருமந்திர விருந்து – பக் -246
68. திரு.வி.க பட்டினத்தார் பாடல்கள் - பக் -138.
69. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் திருத்தில்லை பாடல் எண் -90
70. பட்டினத்தார் - பட்டினத்தார் பாடல்கள் - தாயாருக்குத்தகன கிரியை செய்கையிற் பாடியது – பாடல் எண்- 27.

# இயல் - 5

## சித்தர்கள் கண்ட இறைமை

5.1 .இறைமை

5.2 இறைமை பற்றி சித்தர்களின் கருத்து

5.3 திருமூலர் பார்வையில் இறைமை

5.4 சிவவாக்கியர் காட்டும் இறைமை

5.5 பட்டினத்தார் பாடல்களில் இறைமை

5.6 குதம்பைச் சித்தர் பாடல்களில் இறைமை

5.7 அழுகணிச்சித்தர் பாடல்களில் இறைமை

5.8 கல்லுளிச்சித்தர் பாடல்களில் இறைமை

5.9 திருமூலர் கூறும் அட்டாங்க யோகம்.

# இயல் - 5

## சித்தர்கள் கண்ட இறைமை

### 5.1 இறைமை

நம் உள்ளத்தின் உள்ளே குடிகொண்டிருக்கும் இறைவனை அன்பினால் ஆட்கொண்டு வணங்கினால் அங்கு சிவனை தரிசிக்கலாம் என்பது சித்தர்கள் காட்டும் இறைமையாகும்.

சித்தர்கள் மக்களுக்குச் செய்த மிகப்பெரிய தொண்டு எதுவென்றால் கடவுள் பற்றிய கொள்கையை விளக்கியமையேயாகும்.

இறைவன் ஆலயங்களில் மட்டும்தான் இருக்கிறான் என்று நம்பியிருந்த காலத்தில், கண்மூடித்தனமான மூடப்பழக்கவழக்கங்களால் தமது பொழுதையும், பொருளையும் வீணாக செலவு செய்து வந்த காலத்தில் மிக அரிய கொள்கையான கடவுள் உண்மையை உலகுக்கு உணர்த்தினார்கள் சித்தர்கள்.

**கடவுள் பிரிவினை:**

கலை, கலாச்சாரம், ஆறு கடல், மொழிகளால் பிரிக்கப்பட்ட மனிதன் மேலும் சாதிச்சடங்குகளால் பிரித்துக்கொண்டான். இப்பிரிவினைக்கு உரம் ஊட்டுவது போல சமயமும் சேர்ந்து கொண்டது. இதனால் பல சமயங்களும், தோற்றம் பெற்றன. உங்கள் தெய்வம் எங்கள் தெய்வம் என்ற கருத்துவேறுபாடு ஏற்பட்டன.

கடவுளை நம்புகிறவர்களுக்கு எத்தகைய விளக்கமும் தேவையற்றதாகி விடுகிறது. மற்றவர்கள் கூறும் விளக்கங்களுக்கு அப்பாற்பட்ட அன்பால் இறைவனைத் தரிசிக்கும் அனுபவம் அவர்களுக்கு கிடைத்து விடுகிறது.

**கடவுள் மறுப்பாளர்கள்:**

கடவுளை நம்பாதவர்களுக்கு எவ்வளவுதான் விளக்கங்கள் கூறினாலும் பயனில்லை. காரணம் கடவுள் மறுப்பாளர்கள் விவாதத்துக்குத்தான் தயாராக இருக்கிறார்களே தவிர தாம் கொண்ட கொள்கை சரியா, தவறா என்று ஆராயத் தலைப்படவில்லை. அவர்களின் நோக்கம் எதிரில் இருப்பவனை தர்க்க ரீதியில் மறுக்க வேண்டும் என்பதேயாகும்.

நாத்திகம் பேசும் இவர்களும் தம் வாழ்க்கையின் முக்கியமான திருப்புமுனைகளில், இடர்ப்பாடுகளின் போது இறைவனை உணர ஆரம்பிக்கிறார்கள்.

**இறை நம்பிக்கை:**

மனிதன் அவனுடைய ஆணவமும், செருக்கும், மங்கி பெருந்துன்பங்களும் நோய்களும், தொல்லைகளும் ஏற்படும் பொழுதுதான் இறைவன் பற்றிய எண்ணம் மேலோங்குகிறது.

தன்னுடை அறிவும், முயற்சியும், ஆற்றலும் எல்லாம் ஒரு வரையறைக்கு உட்பட்டனவே என்று உணர ஆரம்பிக்கும்போதுதான், வரையறைக்கு உட்படாத முழு முதற்கடவுளின் துணையைத் தேடி அடைய மனிதன் பெரிதும் முயல்கிறான்.

இன்னதென்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாத ஒரு ஆற்றல் எல்லாப் பொருள்களிலும் ஊடுறுவிநிற்கிறது. அதனை நாம் பார்க்க முடியாவிட்டாலும் ஒரு சக்தி உள்ளது என்று உணரும் கட்டாயத்தில் உள்ளோம். காண முடியாத இந்த ஆற்றல்தான் இறைவன் என்று உணரவேண்டும்.

**இறைவன் நிலையானவன்:**

உலகம் நிலையற்றது. மனிதனால் இன்று முடியாத செயல் என்று எதுவும் இல்லை. இன்றுள்ள உலகைப் போல இன்னுமொரு புதிய உலகத்தைக் கூட படைத்துக் காட்ட மனிதனால் முடியும். அறிவியல் வளர்ச்சியில் மனிதன் இன்று கடவுளுக்கே சவால் விடும் நிலையில் உள்ளான்.

என்னதான் படைப்பின் இரகசியத்தை மனிதன் அறிந்துகொண்டாலும் கூட மரணத்தின் மௌனத்தை அவனால் அறிய முடியாமல் திண்டாடுகிறான். எதையும் வெல்வேன் என்ற ஆணவத்துடன் இருக்கும் மனிதனுக்கு ஒரு சறுக்குக்கல்லாய் மரணத்தை மறைத்து வைத்திருக்கிறான் இறைவன்.

முடிசார்ந்த மன்னரும் மற்றும் உள்ளோரும் முடிவில் ஒரு பிடி சாம்பல் ஆகியே ஒழிகின்றனர். நாம் நிலையானவை என்று நம்பும் அனைத்தையும் நிலையானதில்லை அழியக்கூடியது என்று இறைவன் உணரவைக்கிறான்.

## 5.2 இறைமை பற்றி சித்தர்களின் கருத்து

இறைவனை வணங்குதல் என்பது முதுமையின் முதிர்ந்த நிலையில் மட்டும் உணரப்படும் ஒரு செயல் என்ற தவறான எண்ணம் மனிதர்களிடையே நிலவுகிறது.

உண்மையில் இறைமை என்பது இளமையில் பின்பற்றவேண்டிய ஒரு கொள்கை என்பது சித்தர்கள் கூறும் வாதம். மழை பெய்யும் காலத்தில்தானே ஏரியில் நீரைச் சேமிக்க இயலும். வறண்ட காலத்தில் வாய்க்கால்களை வெட்டி காணா மழைக்காக காத்திருப்பது வீண்தானே. எனவே, உடல்நல்ல நிலையில் இருக்கும் காலத்தில் தானே இறைமையைப் பற்றிய சிந்தனைகளை எத்தகைய இடர்ப்பாடும் இல்லாமல் தொடர இயலும்.

காலன் நம்மை அழைக்கும் நேரத்தில்தான் இறைவனைப் பற்றிய எண்ணமே நமக்கு உண்டாகிறது.

ஆலயத்தை அடைகின்றோம். ஆடம்பரமாகப் பூசை செய்கின்றோம். அங்கப்பிரதட்சணம் செய்கின்றோம். காவி அணிகின்றோம். கால் வலிக்க நடக்கின்றோம். களபலியும் இடுகின்றோம். கத்தையாய் முடிமழித்து காணிக்கையும் அளிக்கின்றோம். ஆனால் இவையெல்லாம் பொய்த்தவவேடங்கள்.

மூடப்பழக்க வழக்கங்களினால் கட்டுப்பட்டு அஞ்ஞான இருளில் மூழ்கி ஆகாயம் சென்று இறைவனைத் தரிசிப்பது என்பதை விட, நம் உள்ளத்தே உறையும் இறைவனை கண்டு கொண்டு வணங்குவதே சிறப்பு என்பதே சித்தர்கள் கூறும் இறைமையாகும்.

நம் உடம்பை பிராணாயாமப் பயிற்சியால் பக்குவநிலைக்கு உயர்த்தி, பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை போன்ற மூவாசைகளை ஒழித்து, சிவன் நாமத்தை ஒலிக்கச் செய்தால் அங்கு இறைவன் தென்படுவான் என்கிறார்கள் சித்தர்கள்.

மூச்சடக்கல் முதலிய பயிற்சிகளினால் நம் தேகத்தை இளமையில் நிலைநிறுத்தி வைத்தலும், சித்துக்களை இறைமை நிலையில் பயிலுமாற்றையும் சித்தர்கள் தம் பாடலில் கூறியுள்ளனர்.

**தெய்வக்கொள்கை:**

தெய்வத்துக்கு கைகால் முதலியன இருக்குமா என்று கேட்பவருக்குப் பதில் சொல்லத் தெரியாது விழிக்கிறார்கள் மக்கள்.

கடவுளை எவ்வாறு தரிசிக்கலாம் என்று இராமலிங்க அடிகள் பாடுகிறார்.

**“அன்பெனும் பிடியு ளகப்படு மலையே**

**அன்பெனும் குடில்புகு மரசே**

**அன்பெனும் வலைக்குட் படும்பரம் பொருளே**

**அன்பெனும் கரத்தம ரமுதே**

**அன்பெனுங் கடத்து ளடங்கிடுங் கடலே**

**அன்பெனு முயிரொளி ரறிவே**

**அன்பெனு மணுவு ளமைந்தபே ரொளியே**

**அன்புரு வாம்பர சிவமே”** -1.

என்கிறார். மனிதர்கள் செலுத்துகின்ற அன்பினில் இறைவனைக் காணலாம் என்கிறார் இராமலிங்க அடிகள்.

அன்பிற்கு இறைவன் ஆட்படுவான் என்பதை உணர்த்தக்கூடிய கதை. இது சங்கர விஜயத்தில் உள்ளது. “பத்மபாதர் என்ற பட்டப்பெயர் பெற்ற சனந்தனர் என்ற சீடர் ஒருவர் சங்கரருக்கு உண்டு. அகோபிலத்தில் அடர்ந்த ஆரண்யத்தில் வலை வலையாக இலை இலையாக வனமே பின்னி வைத்திருந்த இருட்டுப் பந்தலுக்குக் கீழே நரசிம்மர் அருள் வேண்டித் தவம் செய்கிறார் பத்மபாதர். ஊர் உலகின் இடையூறு இன்றி, ஊண் உறக்கமின்றிக் கடுந்தவம் செய்து, கடவுள் அருள் பெறுவது அவர் நோக்கம். இமைக் கதவுகளைத் தாழ்விட்டு, இதயக் கதவுகளைத் திறந்து வைத்து நரசிம்மருக்கான மந்திரத்தை உதடு உச்சரிக்க, எப்படியும் மந்திர பலத்தால் நரசிம்மர் தரிசனம் உண்டு என்று உறுதியாக இருந்தார் அவர்.

வேட்டைக்கு வந்த காட்டு மனிதனுக்கு இந்த காட்சி வேடிக்கையாக இருந்தது. மேலும் கொடிய மிருகங்கள் திரியும் காட்டில் இப்படிக் கண்மூடி ஒருவர் உட்கார்ந் திருப்பது ஆபத்தாயிற்றே! கேலியாகச் சிரிக்கத் தொடங்கியவன் கருணையாய்ச் சிரித்து முடித்தான்.

''ஐயோ….. இது என்ன பைத்தியக்காரத்தனம். கண்ணை மூடிக்கிட்டு காட்டில் என்ன பண்ற…. கனவு காண்றியா?'' பாமரத்தனம் அவன் பாஷையில் படை எடுத்தது.

கண்ணைத் திறந்தார் சனந்தனர். அவன் அறிவீனத்தைப் பார்த்து அவர் அறிவு நகைத்தது 'தவம்' என்பதை அவனுக்கு எப்படிப் புரிய வைப்பது? வேதமும் சாஸ்திரமும், கடவுள் கல்வியும் எள்ளளவும் இல்லாத காட்டு மனிதனுக்குத் தவத்தை எப்படிப் புரிய வைப்பது? அவன் பாஷையிலேயே சொன்னார்…. ஒரு மிருகத்தைத் தேடி வந்தேன்…. அதைத் தேடுகிறேன்.

''ஐயோ… கண்ணை மூடிக்கிட்டா எப்படி சாமி மிருகத்தைப் புடிக்க முடியும்…. மிருகமில்ல உன்னைப் புடிச்சிரும்….. கண்ணைத் திறந்து தேடு சாமி….'' வேடுவன் அன்பொழுகச் சொன்னான்.

''அப்பா அந்த மிருகத்தைப் பற்றி உனக்குத் தெரியாது… எனக்குத்தான் தெரியும். கண்ணை மூடிக் கொண்டு தேடினால் தான் கிடைக்கும்!'' அவர் கல்வி சவால் விட்டது.

''மிருகத்தைப் பத்தி என்கிட்ட சொல்லறியா சாமி… அந்த மிருகம் என்ன மிருகம்னு சொல்லு… நான் போய் நொடியில புடிச்சிட்டு வர்றேன்.''

வேடுவன் ஆர்வத்தைப் பார்த்து பத்மபாதரின் ஆணவம் சிரித்தது. 'யுகம் யுகமாய்த் தவம் செய்து தேடித் தெரிய முடியாத நரசிம்ம தெய்வத்தை இவன் நொடியில் பிடிப்பதாவது? முட்டாள்…''

''சிங்கத்தலை… மனுஷ உடம்பு… பிடிக்க முடியுமா உன்னால?'' சீறினார் பத்மபாதர்.

‘அப்படி ஒரு மிருகம் உண்டா? இதுவரை பார்த்தது இல்லையே’ என்று சந்தேகப்பட்டாலும் அந்தணர் பொய் சொல்ல மாட்டார் என்ற உண்மையாக நம்பினான் வேடுவன்.

“நாளைக் குள்ளாற புடிச்சி உன் முன்னாடி நிறுத்தல. நான் செத்தே போய்டுவேன், ஆமாம்!” சபதமிட்டான் வேடுவன்.

பத்மபாதர் ஆணவம் மீண்டும் சிரித்தது.

“சிங்கத் தலை… மனுஷ உடம்பு… சிங்கத் தலை மனுஷ உடம்பு”. அதே செபம்… அதே தேடுதல், ஊண் இல்லை… உறக்கம் இல்லை… வேறு எண்ணம் எதுவும் இல்லை. காட்டின் இண்டு இடுக்கெல்லாம் புகுந்து அந்த நரசிம்மத்தைத் தேடி அலைந்தான் வேடுவன். இரவும் தீப்பந்தம் ஏந்தி, வளைய வளைய வந்து, ஒரு வெறியுடன் “சிங்கத் தலை… மனுஷ உடம்பு” என்று தேடித் தேடி அலைந்தான். பாவம், மறுநாள் அந்நேரம் வரை தேடியும் கிடைக்கவில்லை.

‘அந்தணர் பொய் சொல்ல மாட்டார். நாம்தாம் வாக்கின்படி அந்த மிருகத்தைத் தேடிக் கொடுக்கவில்லை’ என்று முடிவு செய்து, தூக்கில் தொங்கத் தீர்மானித்துக் காட்டுக் கொடிகளைக் கயிறாகத் திரித்துத் தலையை நுழைத்தான் வேடுவன். சத்தியத்துக்காக உயிர் விடத் துணிந்தான். அடுத்த நிமிடம் காடே அதிரும்படியான சிரிப்பொலி… செங்கட்சீயம்’ என்ற கம்பன் கவிதைப்படியே ‘ஹ ஹ் ஹா என்று சிரித்தபடி நரசிம்மம் எதிரில் நின்றது! தேடி அலைய வைத்த காரணத்தால், அந்தச் சிங்கத்தை உரிமையோடு இரண்டு அடி வைத்து, காட்டுக் கொடிகளால் கட்டி, சனந்தனர் முன் கொண்டு நிறுத்தினான்.

“ஐயரே… இதுதானே நீ கேட்ட சிஙகத் தலை… மனுஷ உடம்பு!” கர்சித்தான் வேடன்.

அறிவு கொடுத்த அலட்சியத்தோடு விழிகளைத் திறந்தார் சனந்தனர். வெறும் காட்டுக் கொடிகள் மட்டும் தெரிந்தன. அவர் சிரித்தார். “உனக்கென்ன பைத்தியமா? எங்கே இருக்கிறது சிங்கத்தலை? எங்கேயிருக்கிறது மனுஷ உடம்பு?”

‘‘இதோ, இதோ’’ என்று தடவிக் காட்டினான் வேடுவன்.

சனந்தனருக்குத் தெரியவில்லை. ‘‘இல்லையே’’ என்றார்.

நரசிம்மம் மீண்டும் சிரித்தது. வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தார் பத்மபாதர்.

‘‘கல்விச் செருக்கு உன் கண்களை மறைக்கிறது. சனந்தா… பலநாள் தேடியும் உனக்கு அகப்படாத நான், இவனுக்கு அகப்பட்டது ஏன் தெரியுமா? ஏகாக்ரக சித்தத்தோடு என்னைத் தேடுவது மட்டுமே லட்சியமாயக் கொண்டு, கள்ளம் கபடமற்ற நம்பிக்கையோடு தேடினான். எனவே அகப்பட்டேன்’’.

சனந்தனரின் கண்கள் பனித்தன.

‘‘என் குரலைக் கேட்கும் பாக்கியம் நீ எப்படிப் பெற்றாய் தெரியுமா? நரசிம்மம் நிறுத்தியது.

கண்களில் நீர் மல்க, ‘‘சொல்லுங்கள் ஸ்வாமி’’ என்றார் சனந்தனர்.

**‘‘இவனுடைய சம்பந்தம் உனக்கு இருந்ததே… அந்தப் பாக்யத்தால் தான்!’’ என்றார் பெருமாள்’’** -2

இக்கதை, இறைவனை இடைவிடாத முயற்சியாலும் அன்பாலும் அடையலாம் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

**வியாசரின் கூற்று:**

கடவுளின் உருவத்தையும், தன்மையையும் பற்றி

‘‘வடமொழியில் விளங்கும் ஆங்கிர சம்ஹிதை எனும் நூலில் வியாசர் கூறுவதாக இடம்பெறும் கருத்து.

**‘‘ரூபமே உனக்குக் கிடையாது; அப்படிப்பட்ட உன்னைப் பல ரூபங்களில் இருப்பதாகக் கற்பனை செய்து சுருக்கி விட்டேன். எவ்விதத்திலும் அறிந்து உணரமுடியக்கூடிய உன்னைப் பலவித ரூபங்களில் இருப்பதாகக் கற்பனை செய்து சுருக்கி ஸ்தோத்திரச் சொற்களால் வரம்புகளமைத்தேன். எங்கும் விரிந்து**

**பரந்திருக்கும் உன்னை சில புண்ணிய ஸ்தலங்களில் இருப்பதாக அவற்றுக்கு உயர்வு காட்டி உனது பரந்த தன்மையைக் குறுக்கிவிட்டேன். பரம்பொருளே என்னுடைய அறிவின் குறைவால் ஏற்பட்ட இந்த மூன்று பிழைகளையும் மன்னிப்பாயாக என்று பதினெட்டுப் புராணங்களையும் இயற்றிய வியாசர் இறைஞ்சுகின்றார்"-3.**

புராணங்கள் கடவுளைப் பற்றிப் பல்வேறு கற்பனைக் கதைகளை புனைந்துரைத்துள்ளன. மேகத்தில் தூய்மையாயிருந்த மழைத்துளி, காற்றுமண்டலம் மண் இவைகளில் விழுந்து சேற்றுக்குழம்பானது போல் புராணங்களால் புனையப்பட்ட கதைகள் அனைத்தும் கற்பனைக் கூட்டி உண்மையை மறைக்கும் மார்க்கமே அன்றி முக்தி மார்க்கமல்ல என்பதைத் தெள்ளத் தெளிவாக கூறுகின்றார்கள் சித்தர்கள்.

### 5.3 திருமூலர் பார்வையில் இறைமை:

திருமந்திர மாலை என்னும் மறைநூற்பொருளை விரித்துரைக்கத் திருவுளங்கொண்ட திருமூலர், இடையூறு நீக்கி இன்னருள் புரியும் விநாயக்கடவுளை முதற்கண் போற்றுகின்றார்.

**"ஐந்து கரத்தனை**
**ஆனை முகத்தனை**
**இந்தின் இளம்பிறை**
**போலும் எயிற்றனை**
**நந்தி மகன்தனை**
**ஞானக் கொழுந்தினை**
**புந்தியில் வைத்து, அடி**
**போற்றுகின் றேனே!" -4.**

கணபதி சிவன் மகன். ஞானக்கொழுந்து. ஐந்து கரங்களையுடையவன். யானை முகத்தன், இளம்பிறைக் கொம்பன் அவனை எனது புத்தியாகிய கோயிலில் வைத்து தியானத்தால் போற்றுகிறேன் என்கிறார் திருமூலர்.

**கணபதியின் பெருமை:**

எல்லாம் ஓம்; பிரமம் ஓம்; வேதாசாரம் ஓம்; வேத முடிவு ஓம்; என்றனர் அருட்புலவர்.

அந்த ஓங்காரமே கணபதியின் திருவடிவமாகும். ஐந்து கைகளும், ஆனை முகமும், இளம் பிறை போன்று வளைந்து ஒளியோடு திகழ்கின்ற வெண்கொம்பு ஒன்றும் உடையவரான விநாயகரை 'நந்தி மகன்' எனவும், ஞானக்கொழுந்து எனவும் பக்திப் பரவசத்தோடு பாடுகிறார் திருமூலர்.

'நந்தி' என்பது சிவபெருமானுக்கே உரிய பெயர். திருமூலர் தம் திருமந்திரத்தில் பல இடங்களில் சிவபெருமானால் 'நந்தி' என்ற பெயராலேயே பாடுகிறார்.

கல்லிலும் செம்பிலும் தெய்வ உருவங்களைச் செய்து வழிபடுவதுபோல, தம்முடைய உணர்வைக் கொண்டு ஐந்து கரங்களும் ஆனைமுகமும் ஒற்றைக் கொம்புடைய திருஉருவத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபடுகிறேன் என்கிறார்.

ஐந்து திருக்கரங்களிலும் பாசம், அங்குசம். கலசம், ஒடிந்த கொம்பு, மோதகம் என்றும் ஐந்தினையும் கொண்டுள்ளார் விநாயகர்.

இவ்வைந்தும் ஆன்மாக்களைப் பிணித்துள்ள ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதானம் என்னும் ஐந்து மலங்களையும் தொழிலினையும் குறிப்பன என்றும், படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலைச் செய்யும் ஐந்தெழுத்தின் உருவாகிய இறைவர் விநாயகர் என்பதைக் குறிப்பன என்றும் கூறுவர்.

**விநாயகர் புரியும் ஐந்தொழில்கள்:**

பாசத்தை வைத்துள்ள கரம் - கை – படைப்புத் தொழிலைச் செய்கிறது.

‘‘அஞ்சேல்! என்று சொல்லி நம்முடைய பயத்தைப் போக்குகிறது. அங்குசம் தாங்கிய கை அழித்தல் என்ற தொழிலைச் செய்கிறது.

மோதகம் ஏந்திய கையானது ‘கரப்பு’ என்ற தொழிலைச் செய்கிறது. கரப்பு என்றால் மறைத்தல் ஆகும்.

உயர் அனுபவங்களை நமக்குக் கொடுத்து மெய்ப்பொருளை நமது பார்வையிலிருந்து மறைந்து விடுவது. இதையே ‘திரோதான சக்தி’ என்று வடமொழியில் கூறுவர்.

விநாயகருடைய வரதகரம் - வரம் தரும் கரம். மக்கள் கேட்கும் வரங்களை நல்குகிற திருவருளைக் காட்டுகிறது.

இப்படி ஐந்து செயல்கள் ஒருங்கே இணைந்த திருவுருவமே ஆனை முகக் கடவுள் ஆகும்.

**கடவுள் வாழ்த்து:**

திருமூலர் இயற்றிய திருமந்திரத்தில் கடவுள் வாழ்த்துப் பாடல் இது.

**“ஒன்றவன் தானே**

**இரண்டவன் இன்னருள்**

**நின்றனன் மூன்றினுள்**

**நான்குஉணர்ந் தான் ஐந்து**

**வென்றனன் ஆறு**

**விரிந்தனன் எழும்பர்ச்**

**சென்றனன் தானிருஞ்**

**தான் உணர்ந்து எட்டே”-5.**

‘‘குழந்தைகளுக்கு ஒன்று, இரண்டு, மூன்று என்று சொல்லிக் கொடுப்பது போலச் சொல்லி இறைவனுடைய இயல்புகளை விளக்குகிறார்.

வேதத்துள் ஏகம் எனப்படும் பரம்பொருள் சிவபெருமானாகிய அவனே!

அவனுடன் வைத்து இரண்டாவதாக எண்ணப்படுவது அவனின் வேறல்லாத இனிய திருவருளாகிய சக்தியே.

அம்முதல்வன் குரு, லிங்க, சங்கமம் என்னும் மூன்றினுள்ளே நிலைபெற்றுள்ளான்.

உயிர்கள் உய்யுமாறு நான்கு மறைகளையும் அருளிச் செய்தனன்.

மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளையும் வென்று அடக்கியருளுகின்றான்.

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிப்பூரகம், அனாகதம், விசுத்தி, ஆக்ஞை ஆகிய ஆறு ஆதாரங்களிலும் விரிந்துள்ளான்.

ஏழண்டங்களுக்கும் அப்பாலாய்க் கடந்து சென்றுள்ளான்.

**மன்னுயிர்கள் தன்னை எளிதில் உணர்தற் பொருட்டு நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், ஞாயிறு, திங்கள், ஆன்மா என்னும் எட்டினும் பிரிவின்றி எழுந்தருளியுள்ளான் என்கிறார் திருமூலர்". -6.**

**இறைவனது பெருமை:**

**"சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை**
**அவனொடொப் பார் இங்கு யாவரும் இல்லை**
**புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்**
**தவனச் சடைமுடித் தாமரை யானே" -7.**

தனக்கு உவமை இல்லாதவன் இறைவன் என்பதை உணர்த்துகிறது இப்பாடல்.

சிவனாகிய அவனை ஒப்பாவார் இவ்வுலகில் யாருமில்லை. சிவபெருமானுக்கு ஒப்பான தெய்வம் அறிவு நூல்களின் துணை கொண்டு தேடினாலும் அத்தகையதொரு தெய்வம் எங்கும் இல்லை. படைத்தற் கடவுளும், காத்தற்

கடவுளுமாகிய இருவர் அம்முதல்வனைத் தேடிக் காணப்புகுந்த அன்று நான்முகன் அன்னமாய் விண்ணிற் பரந்து சென்றும் காணவொண்ணாத செம்மையான சடைமுடியையும், திருமால் கேழலாய் நிலத்தினை அகழ்ந்து தேடியும் காணவொண்ணாத செந்தாமரை மலர்போலும் திருவடியையும் உடையான அம்முதல்வன்.

தன்னையொப்பாவார் ஒருவருமில்லாத தனிமுதல்வன் அவன் என்று அறிவுறுத்த எண்ணிய திருமூலர் மூவர் கோனாய் நின்ற அம்முதல்வனது இறைமைத் தன்மையை விளக்கும் புராணச் செய்திகளுள் திருமால், பிரமன் அடிமுடியறியாப் பெருஞ் சோதியாய் நின்ற செயலைக் குறிப்பால் உணர்த்துகிறார்.

**இறைவனின் இயல்பு:**

இறைவனுடைய இயல்புகளை திருமூலர் விளக்குகிறார்.

**"தீயினும் வெய்யன்**

**புனலினும் தண்ணியன்**

**ஆயினும் ஈசன்**

**அருளறி வார்இல்லை**

**சேயினும் நல்லன்**

**அணியன்நல் லன்பர்க்குத்**

**தாயினும் நல்லன்**

**தாழ்சடை யோனே!" -8.**

இறைவனாகிய சிவபெருமான் தீயைக்காட்டிலும் வெம்மையுடையவன். நீரைக்காட்டிலும் குளிர்ச்சியுடையவன். ஆனாலும் அவனின் அருள்திறத்தை அறிவார் ஒருவரும் இல்லை. அவனின் அருள் திறத்தை அறிய வல்லவர்க்கு தாழ்சடையுடைவனாகிய இறைவன் சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாதவனாயினும், எல்லார்க்கும் தன்திருவருள் நலத்தை அளிக்கவல்லவன்.

நன்மையாகிய அறத்தினையுடையவராய்த் தன்பால் அன்புடையார்க்கு மிகவும் அணுகியவனாய் ஒளி தந்து, ஈன்றதாயினும் சிறந்த பேரன்பினனாய்நலம் செய்பவனாவான்.

அவன் மக்களுடைய பாவங்களை எரிப்பதில் தீயைக்காட்டிலும் வெப்பமுடையவன். மாசு நீக்கி, அன்பர் மனங்குளிர, உடல் குளிர ஆட்கொள்வதில் நீரை விட குளிர்ச்சியானவன்.

அவன் வஞ்சமற்றவன். நாம் குற்றம் செய்தாலும் மனதில் வைத்துக்கொள்ளமாட்டான். அவன் குழந்தைத் தன்மையை விட அன்புடையவன். தாயை விடச் சிறந்தவன்.

இவ்வளவு நல்ல தன்மைகள் பெற்ற இறைவனின் தன்மையை யாரும் அறியவில்லை என்கிறார். திருமூலர்.

**இறைவனின் உறவு:**

சிவபெருமானின் உறவுக்கு நிகர் வேறு எந்த உறவும் இல்லை என்கிறார் திருமூலர்.

**“காய மிரண்டுங் கலந்து கொதிக்கினும்**

**மாயங் கத்தூரியதுமிகு மவ்வழி**

**தேசங் கலந்தொரு தேவனென் றெண்ணினும்**

**ஈசன் உறவுக்கு எதிரில்லை தானே”** -9.

வெங்காயமும், வெள்ளைப்பூண்டும் கலந்து கொதித்தாலும் கஸ்தூரியின் மணம் வீசாது. அதுபோல தேசமெல்லாம் கலந்து, ஒரு தேவனை அரசனைத் தேர்ந்தெடுத்துப் போற்றிப் பணிந்தாலும் எல்லாத் தேவர்க்கும் இறைவனான பரமன் உறவிற்கு ஈடாகாது.

இறைவனே போற்றத்தக்கவன்; தலைவன்; முதல்வன். எவ்வளவு பெரியவரானாலும் உலகிலுள்ளவர்களுடைய உறவுகள் எல்லாம் நிரந்தரமானது

இல்லை. சிவனுடைய உறவே, சிவனுடன் இரண்டறக் கலப்பதே, நமக்கு நிலையான உறவு என்கிறார் திருமூலர்.

**இறைவனின் அருள்:**

இறைவனின் அருளைப் பெறுவதற்கு வழிகாட்டுகிறார் திருமூலர்.

**"அப்பனை நந்தியை ஆரா வமுதினை**

**ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை**

**எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்**

**அப்பரி சீசன் அருள்பெற லாமே! -10.**

எல்லா உயிர்களுக்கும் தந்தையாக இருக்கக்கூடியவனும், நந்தி என்னும் திருப்பெயரையுடையவனும், தெவிட்டாத அமிழ்தம் போன்றவனும், இவ்வுலகத்தில் ஒப்பில்லாதவனும், வள்ளலும், ஊழிக்காலத்திலும் கேடின்றியுள்ளவனாகிய முதல்வனும் ஆகிய சிவபெருமானை எந்த முறையினாலாயினும் போற்றித் துதிக்கலாம். அப்படித் துதித்தால் எல்லாமாகிய இறைவனின் திருவருளைப் பெற்று இன்புறலாம்.

உலக மக்கள் அவரவர்கள் விரும்பிய சமயக் கொள்கையில் நிற்போராய் எந்த உருவிலாயினும், எந்த பெயரிலாயினும், எந்த மொழியிலாயினும், எந்த இடத்திலாயினும், எந்த நெறியிலாயினும் எம் தந்தையாகிய இறைவனை மறவாது ஏத்துதல் மக்களது நீங்காக் கடமை என்று வற்புறுத்துகிறார் திருமூலர்.

**"அஞ்சியாகிலும் அன்பு பட்டாகிலும்**

**நெஞ்சம் வாழி நினைநின்ற யூரை நீ**

**இஞ்சி மாமதி லெய்திமை யோர் தொழக்**

**குஞ்சி வான் பிறை சூடிய கூத்தனே" -11.**

என்று அப்பர் அடிகளும் அருள் மொழிகிறார்.

எந்த வழியில் சென்று வழிபட்டால் இறைவனை எளிதில் அடையலாம் என்று பக்தர்களுக்குள்ளே சந்தேகம் ஏற்படுவதுண்டு. பூசனை முறைகளும், மூர்த்தி பேதங்களும் இவற்றை நாடும் வழிகளும் பலவிதமாக நமது முன்னோர்கள் அறிவுறுத்தியுள்ளார்கள்.

இந்தப் பலவிதமான வழிபாட்டு முறைகளிலே எதைக் கொண்டும் இறைவனைப் பணிந்து கடைத்தேறலாம் என மயங்கும் மக்களுக்குத் திருமூலர் அறிவுறுத்துகிறார்.

எந்த நிலையில் எப்படி வைத்து இறைவனை வணங்கினாலும் அந்த நிலையில் நின்று அவன் அருளத் தயாராயுள்ளான். நாம் எந்த வழியில் செல்லுகிறோமோ, அதே பாதையில் வந்து நம்மை எதிர்கொண்டு அருள்புரிவான் அவன் என்ற உறுதியை நமக்கு அன்பு கூர்ந்து அருள்கின்றார் திருமூலர்.

காளஹஸ்தியில் இறைவனுக்குத் தன் கண்ணையே கொடுத்த கண்ணப்பர் எந்தக்குருவிடமும் சென்று உபதேசம் பெறாமலே இறைவன் அருளுக்குப் பாத்திரமானார்.

சிவகோசாரியர் போன்று ஆகமவழியில் சென்று இறைவன் அருள் பெற்ற பெரியோர்களும் உண்டு.

**இறைவனே அருள்வான்:**

இறைவனே அல்லும் பகலும் அன்பர்களுக்கு அருள்புரிகின்றான் என்கிறார் திருமூலர்.

**“வல்லவன் வன்னிக் கிறையிடை வாரணம்**

**நில்லென நிற்பித்த நீதியுள் ளீசனை**

**இல்லென வேண்டா இறையவர் தம்முதல்**

**அல்லும் பகலும் அருளுகின் றானே!”** -12.

இறைவன் நாம் நினைத்ததை அறிகின்றான். நாம் ஆழ்ந்து தியானித்தால் நமது மனத்தில் அழகுற எழுகின்றான். பிறவித் துயரினின்றுத் தப்பிப் பிழைக்க உறுதிபூண்டு அவனது திருவடி பற்றி நிற்கும் அன்பரைக் காப்பாற்றுகின்றான்.

நாம் அவனை நோக்கி ஒரு அடி எடுத்து வைத்தால் போதும்; அவன் நம்மை நோக்கி பத்தடி எடுத்து வைக்கிறான்.

அவன் மாசறு தூயன். அவனையே போற்றி இசைந்துப் புகழ்ந்து, அவன் திருவடித்திரத்தை அறிந்துகொள்ள வேண்டும். மாந்தர்கள் பிறவித் துயரைப் போக்க வேண்டுமானால் அத்துயர் கடந்த கடவுளைத் தொழுங்கள்.

அவனருள் நமக்குக் கிடைக்கும் என்று நம்பி நாளும் சிவனை வணங்கினால் அவன் நம் புத்தியினுள் புகுந்து நிற்பான். அவனையே வணங்கி நிற்கும் அன்பர்க்கே அவன் வழித்துணையாவான்.

**“வானின் றழைக்கும் மழைபோல் இறைவனுந்**

**தானின் றழைக்குங்கொல் என்று தயங்குவர்**

**ஆள்நின் றழைக்கும் அதுபோல் என் நந்தியை**

**நான்இன் றழைப்பது ஞானங் கருதியே”** -13.

இறைவனை முறையிட்டழைக்க வெண்டும். வாடும் பயிர்கள் வானை அழைக்கின்றன. இதோ வந்து விட்டேன் பசுஞ் சேய்காள் என்று கருணை மழை பரிந்து பொழிகிறது.

அதுபோல் இறைவனும் அருளுவான்; நம்மைத் தழுவிக்கொள்வான், தயக்கம் வேண்டாம். ஆனால், கேவலமான உலகசுகபோகங்களுக்காக அவனை அழைக்கவேண்டாம். ஞானங் கருதி அழையுங்கள் என்கிறார் திருமூலர்.

**“விண்ணின்று இழிந்து**

**வினைக்கீடாய் மெய்கொண்டு**

**தண்ணின்ற தாளைத்**

**தலைக்காவல் முன்வைத்து**

**உண்ணின்று உருக்கிஓர்**

**ஒப்பில்லா ஆனந்தக்**

**கண்ணின்று காட்டிக்**

**களிம்பறுத் தானே!" -14.**

அண்டத்திற்கு அப்பாலனாகிய இறைவன் பரமாகாயமாகிய பெருவெளியினின்றும் இறங்கி வந்து உயிர்களது வினைப் பக்குவத்திற்கு ஏற்பக் குருவடிவம் கொண்டு, அருளாகிய தண்மை நிலைபெற்ற திருவடியை என்தலை மேல் வைத்து தீட்சை செய்து என் உள்ளத்தில் புகுந்து நெஞ்சினையுருக்கி ஒப்பில்லாத பேரின்பத்தை விளைக்கும் சிவஞானமாகிய கண்ணினைக் காட்டி முன்னின்று காட்சி தந்து என்னைப் பற்றியுள்ள ஆணவ மலத்தொடர்பினை அறுத்து அருள் செய்தான் இறைவன் என்கிறார் திருமூலர்.

உயிர் தத்துவமானது விண்ணிலிருந்து இறங்கி வருகிறது. அது படைக்கப்படாமல் அனாதியாக நின்ற தத்துவம். இறைவனைப் போலவே ஆரம்பமும் முடிவும் இல்லாத பொருள் அது.

இந்த ஆன்ம தத்துவமானது அதனதன் வினைக்கு ஏற்ப உடல்தாங்கி உலகிலே பிறக்கிறது.

இறைவனுடைய கருணை நிரம்பிய திருவடியே உயிருக்கு முன்னதாக நடந்து, உடம்பிலே உயிரைக்கூட்டி காவல் அமைக்கிறது. அப்படிக் காவல் அமைத்து முன் நிற்பதும் போதாதென்று, உள்ளத்திலுள்ளேயே நின்று துணைபுரிகிறான் இறைவன்.

இறைவன் ஆனந்தமாகிய கண்ணிலே பேரின்பமாகிய தரிசன நிலையிலே உயிருக்குக் காட்சிதருகிறான். காட்சி தந்து களிம்பை அறுக்கும்போதே உயிருக்கு ஓர் ஒப்பில்லாத ஆனந்தத்தையும் கூடவே தருகிறான்.

**களிம்பறுத்தல்:**

ஆன்மாக்கள் உடலை மேற்கொள்வது தாமாக அன்று. இறைவன் அந்தந்த ஆன்மாக்கள் செய்த பாவ புண்ணியங்களுக்கு ஈடாக உடலோடு கூட்டுகின்றார். உயிர்கள் மேற்கொள்கின்றன.

களிம்பு என்பது பெரும்பாலும் தூயவாய பொருள்களைத் தான் சார்ந்தமையான் அத்தூய பொருளும் கெட்டுப்போகும். இதனை அழகிய திருக்குறளிலும் காணலாம்.

**"பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நண்பால்**

**கலந்தீமையால் திரிந் தற்று" -15.**

திருமூலர் பாடுகிறார்.

**"களிம்பறுத் தான் எங்கள்**

**கண்ணுதல் நந்தி**

**களிம்பறுத் தான் அருட்**

**கண்விழிப் பித்துக்**

**களிம்பணு காத**

**கதிரொளி காட்டில்**

**பளிங்கில் பவளம்**

**பதித்தான் பதியே" -16.**

களிம்பு என்பது ஆணவம். அருட்கண்விழிப்பித்தல் என்பது ஞானக் கண்ணைத் திறக்கச் செய்வது. கதிர்ஒளி காட்டுதல் என்பது ஞான ஒளியினைக் காட்டுதல்.

ஆணவ மலம் நீங்கப்பெற்ற மனம் தூயதாய்ப் பளிங்குபோல் இருப்பினும், சிவபூசை, அடியார் வழிபாடு ஆலயதரிசனம், ஐந்தெழுத்து ஒதுதல்

முதலானவற்றைச் செய்யாமல் மறக்கும்போது, ஆணவ இருள் மீண்டும் வந்து சூழ்தல் இயல்பாதலின், அவ்வாறு ஆணவ மலம் சூழாதிருக்க இறைவன் திருவருட் சக்தியைப்பதிய வைப்பான். இப்படிப் பதிய வைத்தலையே பளிங்கில் பவளம் பதித்தான் பதியே என்றார் திருமூலர்.

**ஞானம் பயப்பன:**

**“தெளிவு குருவின்**

**திருமேனி காண்டல்**

**தெளிவு குருவின்**

**திருநாமம் செப்பல்**

**தெளிவு குருவின்**

**திருவார்த்தை கேட்டல்**

**தெளிவு குருவின்**

**சிந்தித்தல் தானே!”** -17.

குருவின் திருமேனியைத் தரிசிப்பதும், அவருடைய திருநாமத்தைச் சொல்லுவதும், அவருடைய உபதேச மொழிகளைக் கேட்பதுவும், அவருடைய திருவுருவைத் தியானிப்பதுவும் அனைத்தும் ஞானத்தைப் பயப்பனவாம்.

காண்டல், கேட்டல், சிந்தித்தல், செப்பல் ஆகிய நான்கு தொழிலும், நமக்குக் காட்டியும், கேட்பித்தும், சிந்திக்கச் செய்தும், செப்பு வித்தும் பழக்கி ஒரு நிலையில் நிறுத்திய உபகாரியாகிய இறைவன் திருமேனியும் பெயரும் உருவமுமாகவே இருத்தல் வேண்டும்.

இறைவனே குருவாக வந்து ஞானத்தை ஊட்டுகிறான் என்பது நம்முடைய சமயக் கொள்கைகளின் அடிப்படையாகும்.

ஆசாரியனைத் தெய்வமாகக் கொண்டு வழிபடுவதும் ஒன்றே பூட்டைத் திறப்பதற்குரிய திறவுகோலாகும். குருவின் உருவத்தில் வந்து நமக்கு திருவருள்

புரிகின்ற இறைவனின் அந்தத் திருமேனியைத் தரிசிப்பதே ஞானத்துக்கு வேண்டிய பயிற்சி.

காண்பது அவனுடைய திருமேனியை, மந்திரம் அவனுடைய திருநாமம், கேட்பது அவனுடைய வார்த்தை, சிந்திப்பது அவனுடைய திருஉருவத்தை இவையெல்லாம் ஞானத்தை அடையும் வழிகளாகும்.

**திருக்கோயில் இழிவு:**

திருக்கோயில் உள்ளத்தூய்மைக்கு உதவுகிறது. கலைகளை வளர்க்கிறது. நீதியை நிலைநாட்டுகிறது கல்வி கற்பிக்கிறது. யோகம் புரியக்கூடிய இடமாகிறது.

கோயில் அமைக்கும் எவரும் அது தம் ஒருவருக்கே பயன்படவேண்டும் என்று அமைக்கவில்லை. எல்லோரும் இறைவனின் திருவருள் பெற்று பயனடைய வேண்டும் என்ற எண்ணத்துடன் அமைக்கின்றனர். இவ்வாறு அமைக்கப்படும் கோயிலை நாம் இழிவுபடுத்தக்கூடாது. அவற்றின் புனிதம் கருதி போற்றப்படவேண்டும்.

கோயிலின் முக்கியமான இடம் கருவறையாகும். அங்கு நிறுவப்பட்டுள்ளதே சிவலிங்கம். சிவலிங்கம் அருவுருவமானது. எவரும் எத்தெய்வத்தையும் கருதி இதனை வழிபடலாம்.

ஆலயக் கண்காணிப்பை அரசரும், துறவிகளும், அந்தணரும் கவனிக்கவேண்டும். இறைவனுக்குப் பூசைகள் தங்குதடையின்றி நடைபெறுவதற்கு ஏற்பாடுகள் செய்ய வேண்டும். பூசனைக்கான ஏற்பாடுகள் இல்லா விடில் நாட்டில் மழை பொழியாது. விளைச்சல் குறையும். களவு அதிகரிக்கும். உலகம் ஒழுங்கற்றதாகிவிடும்.

**“தாவர லிங்கம் பறித்(து) ஒன்றில் தாபித்தால்**

**ஆவதன் முன்னே அரசுநிலை கெடும்;**

**சாவதன் முன்னே பெருநோய் அடுத்திடும்**

**காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே! – 18.**

நிலைபெற்றிருக்கும் சிவலிங்கத்தைப் பெயர்த்தெடுத்து வேறோர் இடத்தில் வைத்து தாபித்து சிவலிங்கம் இருந்த இடத்தில் வேறு ஓர் உருவை அமைத்தால், இந்நிகழ்ச்சி நிகழ்வதற்கு முன்பே அரசு நிலைகுலையும் என்கிறார் திருமூலர்.

இலிங்கத்தை எடுத்து அப்புறப்படுத்தியவன் இறப்பதற்கு முன்பு, குஷ்ட நோயால் துன்புறுவான்.

இறைவன் திருவுருக்கொண்டு இடமாக உள்ள இடத்திலிருந்து பெயர்த்து வேறு இடத்தில் அமைத்தால் பெருந்தீங்குகள் விளையும் என்கிறார் திருமூலர்.

‘நன்னடை நல்கல் வேந்தர்க்குக் கடனே’ என்று நூல்கள் கூறுகின்றன. நம் நலத்தை ஒரு சிறிதும் கருதாமல் சமுதாயத்தின் நலனையே நாடிப்பாடுபடுவதே ஆட்சிப் பொறுப்பினரின் கடமையாகும்.

உயிரினும் சிறந்ததாகக் கருதப்படுவது ஒழுக்கம். ஒழுக்கத்தை நிலைநாட்டும் உயிர் போன்றதே தெய்வ நம்பிக்கையும் தெய்வ வழிபாடும் ஆகும்.

திருக்கோயிலை இழிவுபடுத்துவார்களுக்கு இவ்வாறெல்லாம் கேடுகள் விளையும் என்று திருமூலர் தாமே கூறாமல் இறைவன் நந்தி கூறியுள்ளதாகக் கூறுகிறார்.

**பூசைகள் தடைபடுவதால் ஏற்படும் தீமை:**

கோயிலில் பூசைகள் தடைபடக்கூடாது என்பதை வற்புறுத்திக் கூறுகிறார் திருமூலர்.

**“முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்**
**மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றம்**
**கன்னம் களவு மிகுந்திடும் காசினி**
**என்னருள் நந்தி எடுத்துரைத் தானே” -19.**

எல்லார்க்கும் எப்பொருட்கும் முன்னவனாய் உள்ள இறைவனாம் பரமசிவப் பெருமானின் கோயில் பூசைகள் தடைப்படின், உலகில் அரசர்கட்குத் தீங்குகள் பலவாகும்.

மழையின் வளம் குறையும் கன்னக்கோல் கொண்டு செய்யும் திருட்டு மிகும் என்று நந்தி எடுத்துரைத்துள்ளார்.

இருதயம் நில்லாமலும் இயல்பாகவும் ஓடிக்கொண்டேயிருக்க வேண்டும் என்று நாம் விரும்புகின்றோம். இப்படித்தான் திருக்கோயிலென்பது ஊருக்கு இருதயமாக உள்ளது. அந்த கோயிலான இருதயம் இயல்பாக ஏதும் தடையின்றி இயங்கிக் கொண்டிருக்க வேண்டும். இதன் தடையற்ற இயக்கம் என்பது திருவருளாகும்.

**அந்தணர் என்போர் அறவோர்**

சிவத்தை அகத்தும் புறத்தும் எப்போதும் பார்த்துக் கொண்டிருப்பவர்கள் பார்ப்பார் எனப்படுவர்.

**"பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தால்**

**போர்கொண்ட வேந்தர்க்கும் பொல்லா வியாதியாம்**

**பார் கொண்ட நாட்டுக்குப் பஞ்சமும் ஆம் என்றெ**

**சீர் கொண்ட நந்தி தெரிந்துரைத்தானே"** -20

என்று பாடுகிறர் திருமூலர்.

**"அந்தணர் என்போர் அறவோர் மற் றெவ்வுயிர்க்குஞ்**

**செந்தண்மை பூண்டொழுக லான்"** -21.

என்கிறது குறள்.

அந்தணர்களை அறவோர் என்பர். இவர்கள் சிவனின் அருளைப் பெற்றவர்கள். ஆதலால் சிவனைக் காணும் பேறு பெற்றவர்கள்.

பெயர் அளவில் பிராம்மணன் என்று சொல்லிக்கொண்டு சிவதீட்சை, ஆகமநூல் அறிவு, பிறப்பு ஒழுக்கம் முதலானவை இன்றி, இறைவனைப் பூசிப்பானாயின் நாட்டில் தீயநோய்கள் உண்டாகும். பஞ்சம் ஏற்படும் என்கிறார் திருமூலர்.

பிறப்பினால் மட்டும் உயர்ந்தவர் என்று கூறல் கூடாது. பிறப்புக்கு ஏற்ற ஒழுக்கம் இருத்தல் வேண்டும். பிராமணராக மட்டும் பிறந்த காரணத்தால் இறைவன் பூசை நடத்துதற்கு உரியர் ஆகார். அவர்கள் அர்ச்சகராகவரின் ஆகம அறிவு, சிவதீட்சை முதலானவற்றைப் பெற்றிருக்க வேண்டும்.

**மகேசுவர பூசை:**

சிவனடியார்களைச் சிவனாகவே கண்டு வழிபடுதல் வேண்டும் என்கிறார் திருமூலர்.

**“படமாடக் கோயில் பகவற்கொன் றீயில்**

**நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா**

**நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்**

**படமாடக் கோயில் பகவற்க தாமே” -22.**

கோயிலில் இறைவனுக்கு செய்யும் நிவேதனம் அடியார்களுக்குச் சென்று சேராது. ஆண்டவனுக்கு ஈவதை அடியார்க்கு ஈந்தால் இஃது ஆண்டவனைச் சேரும்.

சித்திரம் போன்று அமைந்த மாடங்களையுடைய கோயிலுள்ளே இறைவனுக்கு ஏதேனும் நைவேத்தியம் செய்தால், நடக்கின்றமாடக் கோயில்களாக விளங்கும் சிவனடியார்களுக்குப் போய்ச் சேராது.

ஆனால் நடமாடும் கோயிலாகவுள்ள சிவனடியார்க்கு ஏதேனும் கொடுத்தால் அது மாடக் கோயிலுள்ள இறைவனுக்குத் திருப்தியளிப்பதாகும்.

**உள்ளம் பெருங்கோயில்:**

ஆலய அமைப்பு, நம் உடம்பிலேயே உள என்பது இம்மந்திரக் கருத்து.

**“உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்**

**வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்**

**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்**

**கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே” -23.**

நமது மனமே பெரிய கோயில். அக்கோயிலின் மூலட்டானம் தசையால் ஆன உடம்பு. அன்பர்களின் குறிப்பறிந்து கொடுத்தருளும் இறைவனுக்கு வாய்க் கோபுரவாசல். நன்கு அறிந்த ஞானிகளுக்கு ஆன்மாவே சிவலிங்கமாகும். மனத்தைத் திருட்டு வழியில் இழுத்துச் செல்லும் ஐந்து புலன்களும் அழகிய விளக்காகும்.

பேரருள் வள்ளலாகிய இறைவனுக்கு மக்களது ஊனுடம்பே கோயில் வளாகமாகிய ஆலயமாகும்.

உள்ளமே அம்முதல்வன் வீற்றிருந்து அருளம் கர்(ப்)ப இல்லாகிய பெருங்கோயிலாகும்.

அவ்வாலயத்தின் கோபுர வாசலாகத் திகழ்வது வாயாகும்.

இறைவனை வழிபட்டுப் போற்றும் முறையினைத் தெளிவாக உணர்ந்த சிவஞானியர்க்கு அவர்தம் ஆன்மாவே இறைவனை ஆவாகித்துப் பூசித்தற்கேற்ற சிவலிங்கத் திருமேனியாகும்.

வஞ்சனையை விளைக்கும் ஐம்புலன்களும் அடங்கிய நிலையே அவ்வழிபாட்டுக்குரிய உள் ஒளியினைத்தரும் திணிந்த இரத்தின தீபமாம் என்கிறார்.

**ஐந்தெழுத்து ஓதல்:**

**“சிவசிவ என்கிலர் தீவினை யாளர்**

**சிவசிவ என்றிடத் தீவினை மாளும்**

**சிவசிவ என்றிடத் தேவரு மாவர்**

**சிவசிவ என்னச் சிவகதி தானே!” -24.**

சிவ என்னும் மந்திரம் இறைவனையும் இறைவியையும் குறிக்கும். சி- இறைவன் வ-இறைவி. ஆகவே இம்மகா மந்திரத்தை ஓத அம்மையப்பனை நினைத்ததாகும். அவர்கள் அருளையும் பெறலாம்.

சிவசிவ என்பது சைவாகமம் கண்ட மகா மந்திரமாகும். சிவாயநம, சிவாய, சிவசிவ என்பன முறையே படி முறையாகக் கூறப்பட்டவையாம்.

சிவசிவ என்ற மகாமந்திரத்தைத் தெளிந்தவர் சிவசக்தியாகவே அமைவர்.

முற்பிறவியில் செய்த தீவினையின் காரணமே சிவசிவ என்று ஓதாமல் இருப்பதாகும்.

சிவசிவ என்று கூறுவாராயின் எத்தகைய தீவினையாளரும் அவர்கள் செய்த தீயவினைகள் கெட்டு ஒழியும்.

மேலும் அவர்கள் தேவசரீரம் பெற்று விளங்குவர். அவர்களுக்கு அவ்வாறு கணிப்பதால் சிவகதியும் அமையும்.

இவ்வாறு சிவாய நம என்னும் ஐந்தெழுத்தின் மகிமையை திருமூலர் விளக்கிக்காட்டுகிறார்.

### 5.4 சிவவாக்கியர் காட்டும் இறைமை:

எங்காவது ஒரு கோயில் தென்பட்டால் போதும் உடனே நம் மக்கள் சிறிது மஞ்சள் பூசி ஒரு பொட்டும் இட்டும் கடவுள் என்று வணங்க ஆரம்பித்து விடுகிறார்கள். நாளடைவில் அதுவே கருவறையாகிச் சுற்றுப் பிரகாரங்கள் எழும்ப ஆரம்பித்துப் பெரிய கோயிலாக உருமாறுகின்றது.

**"நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பஞ் சாத்தியே**

**சுற்றிவந்து முணமுணென்று சொல்லுமந்திர மேதடா**

**நட்டகல்லும் பேசுமோ நாதனுள்ளி ருக்கையில்**

**சுட்ட சட்டி சட்டுவங் கறிச்சுவைய றியுமோ" -25.**

என்று பாடுகிறார் சிவவாக்கியர்.

நாடு தோறும் ஊர்தோறும் தெருக்கள் தோறும், நடப்பட்டுள்ள கற்சிலைகளையும் கல்லையும் தெய்வம் என்று கருதி மூட நம்பிக்கையுடன் நாலைந்து மலர்களை அவைகளுக்கு சாத்தி அதையும் அக்கல்லைச் சுற்றி

அமைத்துள்ள கோவிலையும் சுற்றிச்சுற்றி வந்து சொல்லும் படியான மந்திரங்கள் என்ன மந்திரங்களோ? இதனால் பயன் ஏதுமில்லை. நீங்கள் கும்பிட்டு வணங்க வெண்டிய இறைவன் உங்கள் உள்ளத்திலேயே இருக்கும்போது அந்த நட்டு வைத்த கற்கள் உங்களிடம் பேசாது. மண்ணால் சட்டியாய் சட்டுவமாய் செய்து சூளையிலே சுடப்பட்டு எடுத்த அந்தப் பாத்திரங்கள் தன்னிலே வைக்கப்பட்டுள்ள கூட்டு பொறியலாம் கறிச்சுவையை அறியக் கூடிய தன்மையை உடையது அன்று என்கிறார் சிவவாக்கியர்.

ஆயிரமாயிரம் தவறுகள் செய்தாலும் அத்தவறுகளை மன்னிக்கும் கேந்திரம் ஆலயம். அந்த மன்னிப்பை அருள்கின்றவன் இறைவன். அவனே இந்தக் கல்லாகிய உருவங்கள் என்று நினைக்கின்றனர் பலர்.

கறி சமைக்கப்டும் பொழுது கறியின் சுவையை சமைத்த சட்டி அறியாது. அதனுடைய சுவையை அதனைச் செய்த நாம்தான் அறிகின்றோம். அதுபோல மனிதர்களாகிய நாம் நமது தவறுகளை மன்னிக்கும் அதிகாரம் இறைவன் ஒருவனுக்கே தான் உண்டே தவிர அவனால் இயக்கப்படும் மனிதர்களுக்கோ அவனுடைய உருவமாகக் கருதப்படும் கற்சிலைகளுக்கோ இல்லை என்கிறார் சிவவாக்கியர்.

**இறைவனின் இருப்பிடம்**

**“கோயிலாவ தேதடா**

**குளங்களாவ தேதடா**

**கோயிலும் குளங்களும்**

**கும்பிடும் குலாமரே**

**கோயிலும் மனத்துளே**

**குளங்களும் மனத்துளே**

**ஆவதும் அழிவதும்**

**இல்லை இல்லை இல்லையே” -26.**

கோயில் என்று ஒன்று சமைக்கப்பட்டு கடவுளென உள்ளே கருப்ப கிரகத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளதால் பயன் ஒன்றும் இல்லை. அக்கோயிலின் பக்கத்திலே தீர்த்தங்கள் என்று பேர்பண்ணி பெரிய பெரிய குளங்களை வெட்டி, அதிலே நீராடுகின்றதால் ஒரு பயனும் இல்லை. இந்த வகையான கோயில்களையும், குளங்களையும் கும்பிடும் அறிவிலிகளே! நீங்கள் இந்த உண்மையைத் தெரிந்துகொள்ளுங்கள். கோயிலும் குளங்களும் உங்கள் மனத்தின் உள்ளேதான் உள்ளன. மற்றபடி ஆவதும், அழிவதும் எதுவும் இல்லை இல்லையே! என்கிறார் சிவவாக்கியர்.

உலகில் குளத்தில் மூழ்கியும் கோயில்களில் பணிந்தும் நன்மை பெறலாம் என்று உறுதியாக நம்பும் அறியாமை மிகுந்த மக்கள் பலர் இருக்கின்றனர். அவர்களுக்கு உள்ளத்தில் இறைவன் இருக்க, அவனை எங்கோ இருப்பதாகத் தேடித் தலங்கள் தோறும் திரியும் உலகியலின் நன்மைகளைப் பெற விழையும் அறியாத மக்களை நோக்கி அறிவு கொளுத்துகிறார். அதனை உறுதிபட உரைக்க இல்லை இல்லை இல்லையே என மும்முறை அடுக்கியும். தேற்றேகாரம் கொடுத்தும் தெளிவுபடுத்துகிறார் சிவவாக்கியர்.

**“தூரம் தூரம் தூரமென்று**

**சொல்லுவார்கள் சோம்பர்கள்**

**பாரும் விண்ணும் எங்குமாய்ப்**

**பரந்த இப்ப ராபரம்**

**ஊரும் நாடு காடு மோடி**

**உழன்று தேடும் ஊமைகாள்**

**நேர தாக உம்முளே**

**அறிந்து ஊர்ந்து கொள்ளுமே!”** -27.

இறைவன் இருக்குமிடம் மிகவும் தொலை தூரம் என்று சோம்பல் உறும் மக்கள் அவனைததேடி ஊரும், நாடும், காடும் கடந்து துன்புற்று அவனைத்தேடி அலைவார்கள். ஆனால் இறைவன் நேரே உள்ளத்தினுள்ளேயே இருக்கிறான்.

இறைவன் இப்பூமியிலும் ஆகாயத்திலும், மற்றும் எல்லா இடத்திலும் நிறைந்தாலும் அவன் நம் உள்ளத்தினில் குடிகொண்டிருக்கிறான்.

**“சீர் ஆர் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே**

**ஊர்ஆகக் கொண்டான் உவந்து”** என்னும் மணிவாசப் பெருமானின் பாடலும் இதே கருத்தினை தெரிவிக்கிறது.

**“கோயில் பள்ளி ஏதடா?**

**குறித்து நின்ற தேதடா?**

**வாயினால் தொழுது நின்ற**

**மந்திரங்கள் ஏதடா?**

**ஞானமான பள்ளியில்**

**நன்மையால் வணங்கினால்**

**காயமான பள்ளியில்**

**காணலாம் இறையையே!” -28.**

பெரிய பெருங்கோயில்களும் அதனைச் சார்ந்த சிறுசிறு கோயில்கள், பள்ளி வாசல்கள் இவையாவும் யாருடைய பயனுக்காக உள்ளன? அவைகள் யாரைக் குறித்து கட்டப்பட்டு நிற்கின்றன. நீங்கள் வாயினால் முணுமுணுத்து கை கூப்பித் தொழுகின்ற மந்திரங்கள் தாம் எப்பயனை விளைவிக்கும்? ஆனால் உண்மையான ஆன்மீக ஞானமார்க்கத்திலே பயிலவேண்டியதாய பள்ளியைச் சார்ந்து முறைப்படி பயின்று நல்ல நெறியில் நின்று நன்மை பெற இறைவனை உள்ளத்தில் வைத்து பூசித்து வணங்கி நின்றால், நம் உடம்பாம் பள்ளியிலேயே இறைவனை நிச்சயம் அடையலாம் என்கிறார் சிவவாக்கியர்.

**“பண்டு நான் பறித்தெறிந்த பன்மலர்கள் எத்தனை**

**பாழிலோச பித்துவிட்ட மந்திரங்கள் எத்தனை**

**மிண்ட னாய்த்தி ரிந்தபோது இரைத்த நீர்கள் எத்தனை**

**மீள வுஞ்சி வாலயங்கள் சூழவந்த தெத்தனை**

**அண்டர் கோன்இ ருப்பிடம் அறிந்து ணர்ந்த ஞானிகள்**

**பண்ட றிந்த பான்மை தன்னை யாவர் அறிய வல்லரே**

**விண்ட வேதப் பொருளையன்றி வேறு கூறவகையிலாக்**

**கண்ட கோயில் தெய்வமென்று கையெடுப்பதில்லையே" -29.**

முன்பு இறைவனுக்குப் பூசை செய்ய யான் பறித்து எறிந்த மலர்கள் எத்தனை? வீணாக நான் செபித்த மந்திரங்கள் எத்தனை? அறிவில்லாதவனாகத் திரிந்தபோது அர்ச்சனை செய்து இரைத்த நீர்கள் எத்தனை? மீண்டும், மீண்டும் சிவனுடைய ஆலயங்களைச் சுற்றி வந்தது எத்தனை முறை? தேவர்களுக்குத் தலைவனான இறைவன் இருக்கும் இடத்தை அறிந்து உணர்ந்த ஞானிகள் இறைவனைப் பண்டு உணர்ந்த தன்மையை உணர வல்லவர் யாரே! இறைவன் உணர்த்திய வேதத்தின் பொருளையன்றி வேறு கூற இயலாத நிலையில் காணும் கோயிலில் உள்ள தெய்வங்களைக் கும்பிடக் கைகளை எடுப்பதில்லை என்கிறார் சிவவாக்கியர்.

**இறைவனின் தன்மை:**

இறைவன் யாராலும் அறிய முடியாத தன்மையுடையவன் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன்.

**"ஊரிலே உள்ள மனிதர்கள்**

**ஒரு மனதாய் கூடியே**

**தேரிலே வடம் பிடித்து**

**செம்பை வைத்திழுக்கிறீர்**

**ஆரினாலும் அறியொணாத**

**ஆதி சித்தநாதரை**

**பேதையான மனிதர் பண்ணும்**

**குறளி பாரும் பாருமே"-30.**

ஊரிலே குடியிருக்கும் எல்லா மனிதர்களும், ஒரே உள்ளத்தினராய் ஒன்று கூடி, அந்த ஊர்க் கோயிலிலே தேர்த்திருவிழா செய்கின்றனர். அந்தத் தேர்மீது செம்பால் செய்யப்பட்டச் சிலையை வைத்து அலங்கரித்து மாலைபல கூட்டி ஒப்பனை செய்யப்பட்ட தேர்மீது பிணித்து, அத்தேரின் வடக்கயிற்றைப் பிடித்து இழுத்துக்கொண்டு ஊர்வலம் வருகிறார்கள். இறைவன் யாராலும் அறிய முடியாத தன்மையன். அவன் ஆதிசித்தநாதன். அவன் அந்தச் செப்புச்சிலையிலே உள்ளதாகக் கருதி அவனுக்குத் தேர்த்திருவிழா எடுக்கின்றீர்களே பேதை மனிதர்களே! இது என்ன குறளி வித்தையா? இறைவன் கல்லிலும் செம்பிலுமா இருக்கிறான்? என்று கேட்கிறார் சிவவாக்கியர்.

முதல் சித்தனான இறைவன் கல்லிலும் செம்பிலும் இல்லை. அவன் எல்லா இடத்திலும் எல்லாப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்திருக்கின்றான். அவனை எவராலும் அறிந்துகொள்ள முடியாது என்கிறார் சித்தர்.

இறைவன் 'தூணிலும் இருப்பான் துரும்பிலும் இருப்பான்' என்பதற்கேற்ப இறைவன் எல்லாப் பொருள்களிலும் உறைகிறான் என்கிறார் சிவவாக்கியர்.

**"மண்ணும் நீ! விண்ணும் நீ!**

**மறிகடல்கள் ஏழும் நீ!**

**எண்ணும் நீ எழுத்தும் நீ!**

**இசைந்த பண் எழுத்தும் நீ!**

**கண்ணும் நீ மணியும் நீ!**

**கண்ணுள்ளாடும் பாவை நீ!**

**நண்ணும் நீர்மை நின்றபாதம்**

**நண்ணுமாறு அருளிடாய்" -31.**

இறைவன் மண்ணுலகமாகி விளங்குகின்றான். இறைவனே எங்கும் பரந்து விளங்கும் விண்ணாகி உள்ளான். அலைகள் மறித்தெழும் ஏழுகடல்களுமாக உள்ளான். அவனே எண்ணாகவும் எழுத்தாகவும் விளங்குகின்றான். இசையைச் சார்ந்து நிற்கும் பண் எழுத்தாயும் உள்ளான். கண்ணாகவும் கண்ணின் மணியாகவும், கண்ணுள் இயங்குகின்ற பாவையுமாக உள்ளான் இறைவன். இறைவனை அடையக்கூடிய வழியை அருள்வாயாக என்று வேண்டுகிறார் சிவவாக்கியர்.

இறைவன் உலகில் அனைத்துப் பொருள்களிலும் நீக்கமற நிறைந்துள்ளான் என்கிறார் சிவவாக்கியர்.

**"அரியுமல்ல அயனுமல்ல**

**அப்புறத்தின் அப்புறம்**

**கருமை செம்மை வெண்மையைக்**

**கடந்து நின்ற காரணம்**

**பெரியதல்ல சிறிய தல்ல**

**பெண்ணும் ஆணும் அல்லவே!**

**துரியமும் கடந்து நின்ற**

**தூரம் தூரம் தூரமே" -32.**

இறைவன் என்பவன் அரியோ, அயனோ அல்லன். அவர்கள் இருவரையும் கடந்து நின்ற அப்புறத்திற்கு அப்புறமாகி நிற்பவன் அவன். அதுமட்டுமல்ல அவன், கருமையையும், செம்மையையும், வெண்மையையும் இப்படிப் பற்பல நிறங்களையும் கடந்து நின்று, எல்லாவற்றுக்கும் மூலகாரணமாகி விளங்குபவன் அவன். அவன் பெரியவனோ, மகத்தானவனோ அல்லன். அவன் அளத்தற்கு அரியன். அவன் சிறியவனோ, அணுவோ அல்லன். அணுவை சதகூறாக்கிய பரமாணுவாம் நுண்மையானவன். அவன் பெண்ணும் அல்ல, ஆணும் அல்ல. அவன் துரியநிலை கடந்து நின்ற தூரதூரமானவன் அவன்.

ஆன்மா உந்திப் பிரதேசத்தில் பிராணனோடு இலயித்து நிற்கத், தன்னையே பொருளாக்கும் நான்காம் ஆன்ம நிலைதான் துரியம் எனப்படும். இது யோகியர் தன் மயமாய் நிற்கும் உயர் நிலை ஆகும்.

இறைவன் இப்படிப்பட்டவன், இத்தன்மைகளையுடையவன் என்று கூறமுடியாதபடி எல்லாவற்றையும் கடந்துநிற்பவன் என்கிறார் சிவவாக்கியர்.

**"மாறுபட்டு மணி துலக்கி**

**வண்டின் எச்சில் கொண்டு போய்**

**ஊறுபட்ட கல்லின் மீது**

**ஊற்று கின்ற மூடரே!**

**மாறுபட்ட தேவரும்**

**மறிந்து நோக்கும் என்னையும்**

**கூறுபட்டு தீர்க்கவோ**

**குருக்கள் பாதம் வைத்ததே!" -33.**

இறைவன் அன்பர் உள்ளத்திலேதான் வசிக்கிறான். அவன் நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன் என்றும், இறைவனைக் கண்டறிந்த ஞானியர்களின் கருத்திலிருந்து மாறுபட்ட கருத்தினையுடையவர்களாய், கோயில் பூசையில் ஙண, ஙண என்று ஒலிக்கும் மணியைத் துலக்கி வைத்துத் தேனை உறிஞ்சி உண்ணுகின்ற வண்டுகளின் எச்சிலாகிய மலர்களைப் பறித்துத் தட்டில் வைத்து – கல் உளியினால் செதுக்கி ஊறுபடுத்திய கற்சிலை மீது, தண்ணீரைப் பெய்து மலர்களைச் சாத்தி மணியை ஙண, ஙண வென ஒலித்து பூசை செய்கின்ற மூடர்களே! மாறுபட்டு ஒழுகும் தேவர்களும் திரும்பிப் பார்க்கின்ற என்னைப் பிற பொய் மதக் கூட்டத்திலிருந்து விலக்கி தனிப்பட்ட முறையில் ஒளி கொடுப்பதற்காக இறைவன் குருவடிவாக வந்து என்தலைமீது பாதம் வைத்த திருவடிதீட்சையைத் தந்தருளினார்.

இறைவன் நினைப்பவர் மனதில் கோயில் கொள்வான் என்கிறார் சிவவாக்கியர்.

**இராம நாமத்தின் பெருமை**

**"அந்தி மாலை உச்சிமூன்று ஆடுகின்ற தீர்த்தமும்**

**சந்தி தர்ப்பணங்களும் தபங்களும்செ பங்களும்**

**சிந்தை மேவு ஞானமும் தினம்செ பிக்கு மந்திரம்**

**எந்தை ராம ராம ராம ராம என்னும் நாமமே"** -34.

அந்தி நேரத்திலும் மாலை நேரத்திலும் உச்சிக் காலத்திலும் புனித நீராடும் பொழுதும் சந்தியாவந்தன பூசை செய்யும்பொழுதும் தர்ப்பனம் விடும்போதும் தபங்கள், செபங்கள் செய்யும்பொதும் ஞானம் சிந்தையில் பொருந்தும்போதும் செபிக்கும் மந்திரச்சொல் இராம இராம என்னும் நாமமே.

இங்கு சிவவாக்கியர் சிவன், திருமால் ஆகிய இரு கடவுள்களையும் போற்றும் காழ்ப்பற்ற சமயப்போக்கு தென்படுகின்றது. இவரின் சமயப்பிணக்கு இன்மைக்கு இது எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

**"கதாவு பஞ்ச பாதகங்களைத்து ரந்த மந்திரம்**

**இதாமி தாமி தல்லவென்றிங் கெய்த்துழலும் ஏழைகாள்**

**சதாவிடாமல் ஓதுவார் தமக்கு நல்ல மந்திரம்**

**இதாமி தாமி ராம ராம ராம என்னும் நாமே"** -35.

இராம மந்திரத்தின் பெருமையை இப்பாட்டிலும் விளக்குகின்றார். தம்மைத்தேடி வந்தடையும் ஐந்து மாபாதகங்களையும் விலக்கும் மந்திரம் இதுதான் என்றும் இ∴தன்று என்றும் தடுமாறித் தடுமாறித் துன்புறும் அறிவுக் குறைபாடு உடையவர்களே! இடைவிடாமல் ஓதுபவர்களுக்கு உற்ற மந்திரம் ராம ராம என்னும் நாமமே.

**"நான தேது நீயதேது நடுவில் நின்ற தேதடா**

**கோன தேது குருவதேது கூறிடுங்கு லாமரே**

**ஆன தேதழிவதேதே அப்புறத்தில் அப்பறம்**

**ஈன தேதி ராம ராம ராம என்னும் நாமமே" -36.**

சிவவாக்கியர் கூறுகிறார். நான் என்ற ஒன்று ஏது? அல்லது நீ என்ற ஒன்று தான் ஏது? இந்த இரண்டிற்கும் நடுவில் நிற்பது தான் ஏது? தலைவன் என்பது ஏது? குரு என்பது தான்ஏது? பொருளைச் செலவழிக்காத உலோபிகளே! ஆகிவந்தது என்பது ஏது? அழிவு வந்தது என்பது ஏது? அப்பாலுக்கு அப்பால் இருக்கும் உள்பொருள் என்பது ராம ராம என்னும் மந்திரமே.

**"நான்ஆர்? என் உள்ளம் ஆர்? ஞானங்கள் ஆர்? என்னை**

**வானோர்பிரான் என்னை ஆண்டிலனேல்"**

**ஊன் ஆர்? உடைதலை உண்பலிதேர் அம்பலவன்**

**தேன் ஆர் கமலமே சென்றூதாய் கோத்தூம்பி"-37.**

என்று பாடுகிறார் மாணிக்கவாசகர்.

**எல்லாம் அவன் செயல்:**

**"பேசுவானும் ஈசனே,**

**பிரம்ம ஞானம் உம்முளே**

**ஆசையான ஐவரும்**

**அலைந்தலைகள் செய்கிறார்**

**ஆசையான ஐவரை**

**அடக்கி ஓர் எழுத்திலே**

**பேசிடா திருப்பரேல்**

நாதம் வந்தொலிக்குமே” -38.

சிவவாக்கியர் பாடுகிறார்.

நான் பேசும் செயலைச் செய்வதும் அந்த ஈசன் செயலேயாம். அவனே பேசச் செய்கிறான். நாம் பேசக் கூடாததை அவனே இடைநின்று மறந்துவிடச் செய்து தடைவிதிக்கிறான். அதோடு பிரம்ம ஞானத்தை நம்முளே விளைத்து வளர்த்தி ஒங்கச் செய்பவனும் அவனே. ஆனால் ஆசை மிகுந்துள்ள ஐம்புலன்களும் நம்மை அலையச்செய்து வருத்துகின்றன. அப்படி ஆசை வயப்பட்ட ஐம்புலன்களாம் ஐவரையும் ஓர் எழுத்தாகிய ஓம் என்னும் பிரணவத்தால் அடக்கி ஒடுக்கி வைத்து, பேசாத பேரின்ப நிலையில் நிட்டையில் லயித்து நின்றால் அங்கே நாத ஒலி கேட்கும். இறைநிலை வந்தடையும்.

‘அவனருளாலே அவன்தாள் வணங்கி’ என்று மாணிக்கவாசகர் கூறுவதுபோல் நம்முடைய செயல்கள் அனைத்திற்கும் காரணமானவன் அவன். எல்லாம் அவன் செயல் என்று எண்ணுகின்ற எண்ணம்கூட இறைவன் தோற்றுவித்தது தான் என்ற கருத்தினைக் கூறுகிறார்.

**இறைவனுக்கு செய்யும் பூசை**

**“பூசை பூசை என்று நீர்**

**பூசை செய்யும் பேதைகாள்**

**பூசை யுள்ள தன்னிலே**

**பூசை கொண்ட தெவ்விடம்**

**ஆதி பூசை கொண்டதோ?**

**அனாதி பூசை கொண்டதோ?**

**ஏது பூசை கொண்டதோ!**

**இன்ன தென்றியம்புமே”** -39.

இறைவனுக்குப் பூசை செய்கிறேன் என்று பெயரிட்டு தோத்திரங்களை முணுமுணுத்து பூசை அறையில் அமர்ந்து தன் கை ஒன்று செய்ய விழி ஒன்றை நோக்க கருத்து ஒன்றை எண்ணி, பொய் ஒன்றையே பேசும் வாயால் துதித்துப் பூசைசெய்யும் புல்லர்களைப் பார்த்துக் கூறுகிறார் நீர் செய்யும் பூசைகளை ஏற்றுக்கொண்டது. ஆதி மூலமான அதுவா? அல்லது அனாதி மூலமான அதுவா? எது நீ செய்யும் பூசையை அது இன்னதுதான் என்று எனக்குக் கொஞ்சம் இயம்புங்கள் என்று கேட்கிறார்.

**“நித்தமும் மணி துலக்கி**

**நீடு மூலை புக்கிருந்து**

**கத்தியே கதறியே**

**கண்கள் மூடி என்பயன்**

**எத்தனைபேர் எண்ணினும்**

**எட்டிரண்டும் பத்தலோ**

**அத்தனுக்கு இது ஏற்குமோ**

**அறிவிலாத மாந்தரே” -40.**

ஓவ்வொரு நாள் காலையிலும் பூசை மணியைத் துலக்கி பளிச்சென மிளிர வைத்து உமது பூசை அறையில் ஒரு மூலையில் அமர்ந்து சத்தமிட்டுத் தோத்திரப்பாடல்களைக் கத்தினாலும், கதறி அழுதாலும் பலன் இல்லை. கண்களை மூடிக்கொண்டு சிந்தையை சிதறவிட்டு இருந்தாலும் அதனால் பலன் இல்லை. எத்தனைபேர் அடுத்தடுத்து எண்ணி எண்ணிப் பார்த்தாலும் எட்டும் இரண்டும் கூட்டுத்தொகை பத்து என்பது தான் வரும். அகரமும் (எட்டு) உகரமும் (இரண்டு) ஓகாரமே ஆகும்.

இந்த வகையில் நீங்கள் செய்யும் பூசை தப்புக்கணக்கே ஆகும். அறிவற்ற மக்களே நீங்கள் செய்கின்ற மேற்கூறிய பூசையை அத்தனாகிய சிவன் ஏற்றுக் கொள்ளமாட்டார்.

**“எட்டிரண்டும் கூடியே**

**இலிங்கமான தேவனை**

**மட்டதாக உம்முளே மதித்து**

**நோக்க வல்லிரேல்**

**கட்டமான பிறவியேன்**

**கருங்கடல் கடக்கலாம்**

**இட்டமான வெளியினூடு**

**இசைந்திருப்பீா் காண்மினே!” -41.**

எட்டு(அ) இரண்டு (உ) இவையிரண்டுடன் கூடி ஓங்கார வடிவுடன் (அ+உ=ஓ) அமைத்து இலிங்கமான தேவனை நெஞ்சினுள்ளே தியானிக்க வல்லீரானால், கஷ்டமான பிறவிக்கடல் என்ன, உலகத்தையே சுற்றி வளைத்துள்ள, கருங்கடலையும் கடந்து விடலாம்.

மேலும், மேற்கூறியவாறு தியானம் செய்தால் இறைவனோடு இரண்டறக் கலந்து இசைந்து வாழலாம் என்கிறார் சிவவாக்கியர்.

**எல்லாம் ஆனவன் இறைவன்:**

**“தந்தை தாய் தமரும் நீ**

**சகல தேவதையும் நீ**

**சிந்தை நீ தெளிவு நீ**

**சித்திமுத்தி தானும் நீ**

**விந்தும் நீ விளைவும் நீ**

**மேலதாய வேதம் நீ**

**எந்தை நீ இறைவன் நீ**

**என்னை ஆண்ட ஈசனே” -42.**

என்று சிவவாக்கியர் பாடுகிறார். என்னை ஆட்கொண்டு என் ஆன்மாவோடு இறைவனை ஒன்றித்து பேரின்ப பெருவாழ்வு அளித்தவன் அவனே அவன் மட்டுமே என் தந்தையும், தாயும், சுற்றத்தினரும் ஆவான். இறைவனன்றி எனக்குத் தந்தை தாய், சுற்றத்தினர் வேறு எவருமிலர். சகலவிதமான தேவர்களாகவும் தேவதைகளாகவும் இருப்பன் இறைவன் ஒருவனே. என் சிந்தையாகவும், அச்சிந்தையின் தெளிவுமாகவும் உள்ளவன் இறைவன். இக்காரணங்களால் நான் அடைந்த சித்திகளும் முத்தியாய் பரலோக நிலையும் இறைவனே வழங்குகின்றான். இறைவன் ஒருவன் மட்டுமே உலகம் யாவற்றுக்கும் விந்தாகி விளங்கி அதன் விளைவாகவும் தோற்றமளிக்கிறான். மேலானதாகப் போற்றப்படும் வேதங்கள்யாவும் இறைவனே. அவனே என் தந்தையாவான் என்று கூறுகிறார்.

**ஐந்தெழுத்து மந்திரம்:**

**“மந்திரங்கள் கற்று நீர்**

**மயங்குகின்ற மாந்தரே**

**மந்திரங்கள் கற்று நீர்**

**மரித்த போது சொல்வீரே**

**மந்திரங்கள் உம்முளே**

**மதிக்க நீறும் உம்முளே மந்திரங்களாவது**

**மனத்தின் அஞ்செழுத்துமே!” -43.**

உலகில் மந்திரங்கள் பல உள்ளன. தேள்கடி, பாம்புக்கடி வசியம், மரணம், கூட்டி வைக்க, பிரித்து வைக்க எல்லா வற்றுக்கும் மந்திரங்கள் உள்ளன. இப்படிக் கணக்கற்ற மந்திரவாதிகள் பலர் ஊர்தோறும் உள்ளனர். இவர்கள் எல்லா மக்களையும் மயக்கி ஏமாற்றுகின்றனர். இதன் மூலமே இவர்களும், தங்களது வாழ்க்கையிலேயே மயங்கி சங்கடப்படுகின்றனர். இந்த மந்திரங்களை கற்றுணர்ந்த மாந்தர்களே உங்களுக்கே மரணம் வந்துற்ற காலை மந்திரத்தைச் சொல்லி

மரணத்தை வெல்வீர்களா? மந்திரம் உங்களைக் காப்பாற்றுமா? இவையெல்லாம் ஏமாற்றும் மந்திரங்களே என்கிறார் சிவவாக்கியர்.

ஆனால், உண்மையான மந்திரம்தான் உள்ளத்தைத் தூய்மையாக்கி ஆன்மலாபம் தரும் மந்திரங்களே ஆகும். இது, உதடு வாக்குகளால் நெஞ்சுள் பயிலும் மந்திரம்.

மந்திரம் என்பது மனத்துள் உச்சரிக்கும் அஞ்செழுத்தே ஆகும். நமசிவாய என்னும் அஞ்செழுத்து மந்திரமே நம்மைக் காப்பாற்றும் என்கிறார் சிவவாக்கியர்.

**“அஞ்செழுத்தும் மூன்றெழுத்தும்**

**என்றுரைக்கும் அன்பர்காள்**

**அஞ்செழுத்தும் மூன்றெழுத்தும்**

**அல்லகாணும் அப்பொருள்**

**அஞ்செழுத்தை நெஞ்சழுத்தி**

**அவ்வெழுத்தறிந்த பின்**

**அஞ்செழுத்து மூன்றெழுத்து**

**அவ்வுமாம் சிவாயமே!”** -44.

“நமசிவாய – சிவாயநம என்னும் ஐந்தெழுத்தும், சிவாய என்று சொல்லப்படும் மூன்றெழுத்தும், அவனைச் சென்றயுடையும் மூலமந்திரங்கள். இவற்றின் உண்மையான பொருள் அஞ்செழுத்து, மூன்றெழுத்து என்பதல்ல இந்த அஞ்செழுத்தையும், மூன்றெழுத்தையும் நெஞ்சிலே அழுத்தமாக நிலைநிறுத்தி அதிலேயே உள்ளம் ஒன்றி தியானித்தல் வேண்டும்.

**“தெள்ளமுதூறச் சிவாய நம வென்று**

**உள்ளமுதூற ஒருக்கால் உரைத்திடும்”** -45.

என்கிறது திருமந்திரம்.

இது ஐந்தெழுத்து எனப்படும் தூல பஞ்சாக்கரம். இந்த ஐந்தெழுத்தின் தியானத்தின் முடிவிலே உள்ளதே சூக்கும் பஞ்சாக்கரம்.

**"தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்**

**ஓதும் சிவாய மலமற்ற உண்மையே" -46.**

என்பதும் திருமூலர் வாக்கு.

அதிசூக்கும் பஞ்சாக்கரமாவது சிவாய என்பது மேலும் சுருங்கி சிவ என்பதே ஆகும். நமவென்னும் நாமத்தை நாவில் ஒடுக்கி சிவ என்னும் நாமத்தைச் சிந்தையுள் ஏற்ற வேண்டும் என்கிறார் சிவவாக்கியர்''.

''நமசிவாய'' என்ற ஐந்தெழுத்திலே பிறந்து ஐந்து எழுத்திலே வளர்ந்து நாளும் ஐந்து எழுத்துக்களை ஒதுகின்ற நிலம், நீர், தீ, வளி, விசும்பு என்ற ஐந்து பூதங்களால் ஆன உடம்பையுடைய பாவிகளே, ஐந்தெழுத்தைப் பொருள் உணராது ஒதுவதை விடுத்து மனதார உணர்ந்து ஓர் எழுத்தை ஓத உங்களால் இயலுமானானல் அஞ்ச வெண்டாம் என்று ஆறுதலளிக்கும் வண்ணம் இறைவன் அம்பலத்தில் நம் கண்முன் ஆடுவார்.

**"அஞ்செ ழுத்தி லேபிறந் தஞ்செ ழுத்தி லேவளர்ந்**

**தஞ்செ ழுத்தை ஒதுகின்ற பஞ்ச பூத பாவிகாள்**

**அஞ்செ ழுத்தில் ஓரெழுத் தறிந்து கூற வல்லிரேல்**

**அஞ்ச லஞ்ச வென்றுநாதன் அம்ப லத்தில் ஆடுமே"-47.**

என்று சிவவாக்கியர் பாடுகிறார்.

**"அஞ்சும் அஞ்சும் அஞ்சுமே அனாதி யான தஞ்சுமே**

**பிஞ்சு பிஞ்சு தல்லவோ பித்தர் காள்பி தற்றுவீர்**

**நெஞ்சில் அஞ்சு கொண்டு நீர நின்றொ துக்க வல்லிரேல்**

**அஞ்சும் இல்லை ஆறுமில்லை அனாதி யாகித் தோன்றுமே" -48.**

இந்த உள்ளமானது ஆதியற்றதாகிய பொருளைக் கண்டு பெரிதும் அஞ்சும் பிஞ்சின் தன்மை அல்லவோ இது. பித்தர்களே நீங்கள் பெரிதும் பிதற்றுகின்றீர்கள். நெஞ்சில் ஐந்தெழுத்து கொண்டு அச்சம் ஒதுக்க வல்லவர்களானால் அஞ்சும் இல்லை. ஆறும் இல்லை. அனாதியான தொன்றே நெஞ்சில் பொருந்தும். அஞ்சும் இல்லை ஆறும் இல்லை என்றது உலகு வழக்கை நோக்கி. இவ்வாறு கூறியுள்ளார் சிவவாக்கியர்.

**ஐந்தெழுத்தின் பெருமை:**

‘நமசிவாய என்ற ஐந்தெழுத்தின் பெருமை இதில் கூறப்படுகின்றது.

அண்டம் என்பது இம்மண்ணுலகம். நாம் வாழும் உலகம். இதுபோல உயிர் வாழக்கூடிய அல்லது வாழ முடியாத பல கோள்கள் உள்ளன. இப்படி உள்ள எல்லா உலகங்களையும் சேர்த்துப் பேரண்டம், பகிரண்டம், அகல் அண்டம், அகண்டம் என்று பலவாறாகக் கூறுவார்கள். இப்படி எண்ணமுடியாத பெருவெளியில் பொருந்தி உள்ள அண்ட பகிரண்டங்கள் எல்லாம் அளவில் எவ்வளவு தான் பெரியதாக இருந்தாலும் ‘நமசிவாய’ என்னும் ஐந்தெழுத்துள் அடங்கிவிடும். அதாவது, பேரண்டம் முழுவதும் இறைவனுள் அடக்கம். இந்த ஐந்தெழுத்தினுள் இவ்வுலகின் பழமையான தெய்வங்களாகிய அரி, அரண், அயன் என்னும் மூவரும் அடக்கம் ஐந்தெழுத்தினுள் வீடும் மகாரமும் அடங்கும்.

ஐந்தெழுத்தினுள் அடங்காதது ஒன்றுமில்லை.

**“ஆன அஞ்செ முத்துளே அண்டமும் கண்டமும்**

**ஆன அஞ்செ முத்துளே ஆதி யான மூவரும்**

**ஆன அஞ்செ முத்துளே அகார மும்ம காரமும்**

**ஆன அஞ்செ முத்துளே அடங்க லாவ துற்றவே” -49.**

என்று பாடுகிறார் சிவவாக்கியர்.

சிவனுக்கு வணக்கம் என்னும் பொருளையுடையது ‘நமசிவாய’ என்னும் ஐந்தெழுத்து. சைவர்களின் மூலமந்திரம். மறைமொழி ஒலிக்கும் மூலமாக

விளங்கும் சிவபெருமானைக் குறிப்பது. மாணிக்கவாசகர் தாம் இயற்றிய திருவாசகம் என்னும் நூலில் தொடக்கமாக அமைத்த சிவபுராண வரிகள்.

**“நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க”**

என்பது

அப்பரும் நமது நமச்சிவாய பதிகத்தில்,

**“கற்றுணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்**

**நற்றுணை யாவது நமச்சி வாயமே”** -50.

என்றார்.

அப்படிப்பட்ட நமச்சிவாயம் ஆதியும் அந்தமும் ஆனது. நமச்சிவாயம் என்னும் மந்திரத்தைப் பன்னிரண்டு நூறு தேவர்களும் தம் துயர்தீர உச்சரித்தனர். ஓம் என வளைந்த அப்படிப்பட்ட ஓர் எழுத்தை உள்ளத்தில் நினைத்துச் சிவவாக்கியம் சொல்லுவேன். தோடாது ஓடவும் அதாவது தோஷமானது ஓடவும் பாவமும் மாயையும் விட்டுவிலகி ஓடும்படியாகக் கரிய முகத்தையுடைய கற்பகத்தைத் தொழுகிறேன். கலைகள், நூல்கள், ஞானம் இவை என் கருத்தில் தோன்றி நிற்க வேண்டும் மற்றும் பெரியவர்கள் சிறியவர்கள் கற்றுணர்ந்த பேர்களைத் தாம் பெரிதாக எண்ணிப் பாடும் பிழையைப் பொறுக்கவேண்டும் என்று சிவவாக்கியர் பாடுகிறார்.

**“அரிய தோர்ந மச்சிவாயம் ஆதி அந்தம் ஆனதும்**

**ஆறி ரண்டு நூறுதேவர் அன்று ரைத்த மந்திரம்**

**கரிய தோர்எ ழுத்தையுன்னிச் சொல்லு வேன்சிவ வாக்கியம்**

**தோட தோட பாவமாயை தூரத் தூர ஒடவே**

**கரியதோர்மு கத்தையுற்ற கற்ப கத்தைக் கைதொழக்**

**கலைகள் நூல்கள் ஞானமும் கருத்தில் வந்து திக்கவே**

**பெரிய பேர்கள் சிறிய பேர்கள் கற்றுணர்ந்த பேரெலாம்**

**பேய னாகி ஒதிடும் பிழைபொ றுக்க வேண்டும்" -51.**

என்று பாடுகிறார்.

**சிவபெருமானின் சிறப்பியல்புகள்:**

**"அண்ட வாசல் ஆயிரம் பிரசண்ட வாசல் ஆயிரம்**

**ஆறி ரண்டு நூறுகோடி ஆன வாசல் ஆயிரம்**

**இந்த வாசல் ஏழைவாசல் ஏக போக மானவாசல்**

**எம்பி ரானி ருக்கும்வாசல் யாவர் காண வல்லரே!" -52.**

உலகத்திற்கு வாசல் ஆயிரம். கடுமையான உலகத்திற்கும் வாசல் ஆயிரம். பன்னிரண்டு நூறுகோடிக்கும் வாசல் ஆயிரம். ஆனால், இந்த வாசல் ஏழைகளின் வாசல். அது ஏழைகளுக்கே உரிய தனிவாசல். அது எம்பிரான் இருக்கும் வாசல். இதை யாராலும் காண முடியாது.

வாசல் என்பது வாழும் குடிலுக்குள் நுழையும் வாயில். எனவே ஏழைகளின் இதயமே இறைவன் குடியிருத்தற்குரிய வாசல். இதனை யாராலும் அறிய முடியாது என்கிறார் சித்தர்.

**"சாம நாலு வேதமும் சகல சாத்திரங்களும்**

**சேம மாக ஒதிலும் சிவனை நீவிர் அறிகிலீர்**

**காம நோயை விட்டுநீர் கருத்தி னுள்ளே உணர்ந்தபின்**

**ஊமையான காயமாய் உள்ளி ருப்பன் ஈசனே" -53.**

சாம வேதம் முதலிய நான்கு வேதங்களும், மற்றும் உள்ள எல்லாச் சாத்திர நூல்களும், நம்மைக் காக்கும் வண்ணம் கற்றாலும். சிவனை நீங்கள் அறிந்தவர்கள் ஆகமாட்டீர்கள். விருப்பம் என்னும் காம நோயை விட்டுவிட்டு உம்முளே மனத்துள்

இறைவனை உணர்ந்தால், மௌன உருவமாக உள்ளத்துள் அமர்ந்து இருப்பான் ஈசன்.

இங்ஙனம் சிவபெருமானின் சிறப்பியல்புகள் கூறப்பட்டுள்ளது.

**வேதம் ஒதுவதால் ஒரு பயனும் இல்லை:**

சிவவாக்கியர் வேதம் ஒதுவதால் ஒரு பயனும் இல்லை என்கிறார்.

**"வாயி லேகு தித்தநீரை**

**எச்சில் என்று சொல்லுறீர்**

**வாயி லேகு தப்புவேதம்**

**வேதம் என்னக் கடவதோ**

**வாயில் எச்சில் போகவென்று**

**நீர தனைக்கு டிப்பீர்காள்**

**வாயில் எச்சில் போன வண்ணம்**

**வந்தி ருந்து சொல்லுமே!" -54.**

வாயிலிருந்து வெளியே தெறித்த நீரை எச்சில் என்று சொல்கிறோம். ஆனால் வாயில் குதப்பும் வேதத்தை மட்டும் வேதம் என்பது ஏன்? வாயிலில் உள்ள எச்சிலைப் போக்க நீரைக் குடிக்கின்றீர்கள். அப்படிக் குடித்தாலும் அந்த எச்சில் போயிற்றா என்று கூறுங்கள்.

**"ஓது கின்ற வேதமெச்சில்**

**உள்ள மந்தி ரங்களெச்சில்**

**போத கங்க ளானவெச்சில்**

**பூத லங்கள் ஏழுமெச்சில்**

**மாதி ருந்த விந்துமெச்சில்**

**மதியு மெச்சில் ஒளியுமெச்சில்**

**ஏதில் எச்சில் இல்லையில்ல**

**தில்லை இல்லை இல்லையே" -55.**

நாம் ஓதுகின்ற வேதமும் எச்சில். வேதத்திலுள்ள மந்திரங்களும் எச்சில் அவற்றில் போதிக்கப்படுவனவும் எச்சில். ஏழுலகங்களும் எச்சில் சூரியனும் எச்சில் சந்திரனும் எச்சில் அவற்றின் ஒளியும் எச்சில். நாம் காணும் பொருள்களில் எதில் தான் எச்சில் இல்லை.

நாம் ஓதும் வேதம் எச்சில் முன்னமே பலரால் ஓதுப்பட்டது. நாம் உச்சரிக்கும் மந்திரம் முன்னமே உச்சரிக்கப்பட்டது. அவை போதிப்பனவும் முன்னமே அறியப்பட்டது. ஏழுலகங்களும் நமக்கு முன்பே பலர் வாழ்ந்த இடம். சூரியன், சந்திரன் ஒளி ஆகியன நமக்கு முன்பே பலர் பார்த்து மகிழ்ந்தவைகள். எனவே இவற்றையும் எச்சில் என்றார். எஞ்சி நிற்பது எச்சம் எனப்பட்டது என்றும் கொள்ளலாம்.

**"தூமை தூமை என்றுளே**

**துவண்ட லையும் ஏழைகாள்**

**தூமை யான பெண்ணிருக்கத்**

**தூமை போன தெவ்விடம்**

**ஆமை போல மூழ்கி வந்து**

**தநேக வேதம் ஓதுறீர்**

**தூமை யுந்தி ரண்டு ருண்டு**

**சொற் குருக்கள் ஆனதே" -56.**

தூய்மை தூய்மை என்று மனத்துள் துவண்டு அலையும் அறிவுக் குறையுடையவர்களே! தூய்மையான பெண்ணிருக்கத் தூய்மை போனது எவ்விடம்? ஆமையானது தன் கூட்டிற்குள் முடங்குவதுபோல் நீருள் மூழ்கி வந்து பல

வேதங்களை ஒதுகின்றீர்கள். தூய்மையானது திரண்டு உருண்டு பிரணவம் கூறும் குருக்கள் ஆயிற்று.

இதில் மனத்தூய்மையே ஒருவனுக்கு இறைவனை அடைய வழிகாட்டும் குரு என்கிறார் சிவவாக்கியர்.

**"சொற்கு ருக்கள் ஆனதும்**

**சோதி மேனி ஆனதும்**

**மெய்க்கு ருக்கள் ஆனதும்**

**வேண பூசை செய்வதும்**

**சற்கு ருக்கள் ஆனதும்**

**சாத்தி ரங்கள் சொல்வதும்**

**செய்க்கு ருக்கள் ஆனதும்**

**திரண்டு ருண்டதூமையே" -57.**

நல்வழி காட்டும் குருக்கள் ஆவதும், ஒளி பொருந்திய உடலாக ஆவதும், மெய்யான குருக்கள் ஆவதும், மிகுதியான பூசை செய்வதும், நல்ல குருக்கள் ஆவதும் வேதங்கள் கூறுவதும், நன்மை செய்யும் குருக்கள் ஆவதும் திரண்டு உருண்ட தூய்மைத் தன்மையே.

இதில் மனத்தூய்மையின் பெருமையைப் புலப்படுத்துகிறார் சிவவாக்கியர்.

இப்பாடல்களின் மூலம் வேதம் ஒதுவதால் ஒரு பயனும் இல்லை. ஒருவனுக்கு மனத்தூய்மையே இறைவனை அடைய வழிகாட்டும் என்றும் மனத்தூய்மையின் பெருமையையும் சிவவாக்கியர் கூறியுள்ளார்.

**இறைவனை அடையும் வழி:**

இறைவனை அடைய நான்கு மார்க்கங்களைச் சொல்கிறார். சிவவாக்கியர்.

‘‘சரியை வழிநிற்பவர் சாலோகம் பெறுவர். கிரியை வழி நிற்பவர் சாமீபம் பெறுவர். யோகத்தில் இருப்பவர் சாரூபம் பெறுவர். ஞானத்தின் பயனாய் சாயுச்யம் பெறுவர் என்று கூறுகிறார்.

**“தெளிந்தநற் சரியை தன்னில் சென்று சாலோகம் பெறும்**

**தெளிந்தநற் கிரியை பூசை சேரலாஞ் சாமீபமே**

**தெளிந்த நல் யோகம் தன்னில் சேரலாகும் சாரூபம்**

**தெளிந்த ஞானம் நான்கினும் சேரலாம் சாயுச்யமே”-58.**

என்று பாடுகிறார்.

**சரியை-** தினமும் வீட்டில் நிகழ்த்த வேண்டிய ஆன்மார்த்த பூசை பற்றியும், திருக்கோயில் வழிபாடு, மெழுகுதல், மலர் கொய்து மாலை தொடுத்தல், துதித்தல் பற்றியும் கூறுவது.

**கிரியை:** விபூதி முதலிய சிவசாதனங்கள் அணிந்து சிவவேடம் தாங்கிய அடியார் கிரியை வழி நிற்பர். இறைவனுக்கு அடிமைப்பணி செய்பவர்.

**யோகம்**: பல வகையான யோக நெறிகளால் உடல் மனம் இரண்டையும் தூய்மை செய்தல்.

**ஞானம்:** பதி, பசு, பாசம் எனும் முப்பொருள் உண்மை அறிதல். பசு, பாசம் நீங்கி பதியினை அடையும் வழியும், அவற்றால் பெறும் முத்தியினையும் பற்றியது.

பசு- உயிர், பாசம் -ஆணவம், கன்மம், மாயை என்கிற மும்மலங்களைக் கொண்டது.

**சாலோகம்:** கடவுளுக்கு அருகில் உள்ள உலகம். சரியை வழி நிற்போருக்கானது. சாலோக முத்தி பாசத் தன்மை கெடாது நின்று பிறவியைத் தரும்.

**சாமீபம்:** கடவுளின் மிக அருகில் இருத்தல். இதில் பாசம் பந்தப்படுத்துவதில்லை. இது கிரியை வழி நிற்போருக்கானது.

**சாரூபம்:** கடவுளின் உருவமே பெறுதல். அட்டாங்க யோகத்தின் பயனாய் சிவனுரு அடைதல். இது ஞானம் பெற்றவர்க்கன்றி வாய்ப்பதில்லை. இது யோக நெறியாளர்க்குரியது.

**சாயுச்சியம்:** யாவர்க்கும் மேலாய் கடவுளின் இயல்பில் இருத்தல். இறைவனோடு கலத்தல். சிவத்துடன் பொருந்தி உலகைவிட்டுச் சமாதியில் நிலைப்பது. இது ஞானியர்க்குரியது''. -59.

இவ்விதம் நால் வகை முத்திகளையும் அவற்றை அடைவதற்கான உத்திகளையும் சிவவாக்கியர் கூறுகிறார்.

### 5.5 பட்டினத்தார் பாடல்களில் இறைமை:

சிவபெருமானின் திருவருளே சிவனடியார்களைத் தாங்கிச்சென்று நன்னெறியிலுய்க்கும் என்பதை.

மர்க்கட நியாயம், மார்ச்சால நியாயம் மூலம் விளக்குகிறார் பட்டினத்தடிகள்.

**''மந்திக் குருளையொத் தேனில்லை நாயேன் வழக்கறிந்துஞ்**

**சித்திக்குந் சிந்தையை யானென்செய் வேனெனைத் தீதகற்றிப்**

**புந்திப் பரிவிற் குருளையை யேந்திய பூசையைப்போல்**

**எந்தைக் குரியவன் காணத்த னேகயி லாயத்தனே'' -60.**

திருக்கயிலாயத்திலுள்ள சிவபெருமானே! அடியேன் குரங்குக்குட்டியைப் போன்றவனல்லன். சிறியேனது வழக்கத்தையுணர்ந்திருந்தும் பிரவிர்த்தி மார்க்கத்துக் கேதுவான காரியங்களை எண்ணும் மனத்தை யான் என்ன செய்வேன்? அடியேனைத் தீமையினின்றும் விலக்கி உள்ளத்தெழும் அன்பால் குட்டியைத் தானே கல்விக் கொண்டு செல்கின்ற பூனையைப்போல ஆட்கொண்டருளத் தந்தையாகிய தேவரீருக்கு உரிமை பூண்டிருக்கிறேன்.

தாய்க்குரங்கு தான் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லுங்காலத்துத் தன் குட்டியைத் தானே தூக்கிச் செல்லாது. குட்டியே தாய்க்குரங்கை உறுதியாகப் பற்றிக்கொள்ளும். இதனை மர்க்கட நியாய மென்பர். இவ்வுவமானத்தால் சீவர்கள்

தம் முயற்சியால் சிவத்தைப் பற்றுதலில்லை என்பதை விளக்கியவாறாம். தாய்ப்பூனை ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லுங்காலத்துத் தன் குட்டியைத் தானே கவ்விச் செல்லும். இதனை மார்ச்சல நியாய மென்பர். இவ்வுவமையாற் சிவபெருமான் திருவருளே சீவர்களைத் தாங்கிச் சென்று நன்னெறியிலுய்க்கவேண்டும் என்பதை அறிவுறுத்தகிறார்.

**"என்னை யேதும் அறிந்திலேன் எம்பிரான்**

**தன்னை யானுமுன் ஏதும் அறிந்திலேன்**

**என்னைத் தன்னடி யானென் றறிதலும்**

**தன்னை யானும் பிரானென் றறிந்தனே"** -61

என்று அப்பர் சுவாமிகளும் அருளிச் செய்துள்ளார்.

**"உடைகோ வணமுண் டுறங்கப் புறந்திண்ணை யுண்டுணவிங்**

**கடைகா யிலையுண் டருந்தத்தண் ணீருண் டருந்துணைக்கே**

**விடையேறு மீசர் திருநாம முண்டிந்த மேதினியில்**

**வடகோ டுயர்ந்தென்ன, தென்கோடு சாய்ந்தென்ன வான் பிறைக்கே"-62.**

இந்த உலகத்தில் உடுப்பதற்கு கௌபீனம் உண்டு. தூங்குவதற்குத் திண்ணைப்புறம் உண்டு. ஆகாரத்திற்குக் கிடைக்கும் காயும் இலையும் உண்டு. குடிப்பதற்குத் தண்ணீர் உண்டு. நீங்காத துணைக்கு இடபவாகனத்தின்மேல் ஆரோகணித்தருளுஞ் சிவபெருமானுடைய திருநாமம் உண்டு. அதனால் ஆகாயத்திலுள்ள சந்திரனுக்கு வடமுனை உயர்ந்தாலென்ன, தென்முனை தாழ்ந்தாலென்ன என்கிறார் பட்டினத்தார்.

மானாபிமானம் விடுத்த துறவிகளுக்கு நன்மை, தீமை புண்ணியம், பாவம் எதைப்பற்றியும் கவலையில்லை. சந்திரனின் வடமுனை உயர்ந்திருந்தால் ஊருக்கு நன்மை விளையும் என்றும் தென்முனை சாய்ந்திருந்தால் ஊருக்குத் தீமை விளையும் என்றும் நூல்கள் கூறுகின்றன. இது விருப்பு வெறுப்பு உடைய

இல்லறத்தை ஆளுபவர்க்கேயன்றி அவையில்லாத துறவறத்தார்க்குப் பொருந்தாது என்கிறார் பட்டினத்தார்.

**அடியார் பசி தீர்த்தல்:**

சிவனடியார் பசியால் வருந்தின் சிவபெருமான் தாமே நேராய் வந்தாவது வேறு சில உயிர்களின் மூலமாகவாவது வந்து அன்னமளிப்பார் என்கிறார் பட்டினத்தடிகள்.

**“உடுக்கக் கவிக்கக் குளிர்காற்று வெய்யி லொடுங்கி வந்தால்**

**தடுக்கப் பழைய வொருவேட்டி யுண்டு சகமுழுவதும்**

**படுக்கப் புறந்திண்ணை யெங்கெங்கு முண்டு பசித்து வந்தால்**

**கொடுக்கச் சிவனுண்டு நெஞ்சே நமக்குக் குறைவில்லையே”-63**

பட்டினத்தடிகள் கூறுகிறார். குளிர்காற்றிலும், வெயிலிலும் வாடி வருந்தி வந்தால் அவ்வெப்பங்களைத் தடுக்கும் பொருட்டு உடுத்திக்கொள்வதற்கும், போர்த்திக் கொள்வதற்கும் உலக முழுவதும் திண்ணைப்புறம் எவ்விடத்திலும் உண்டு. ஆகையால் நமக்கு ஒரு குறையுமில்லை.

எல்லாம் அவன் செயல் என்று எண்ணாத அறிவில்லாதவர்கள் அன்னத்தைக் கருதி இடர்ப்படுவார்கள். ஆனால் துறவிகள் எல்லாம் அவன் பார்த்துக் கொள்வான் என்று அமைதியாய் இருப்பார்கள்.

**இறைவன் ஒருவனே:**

இறைவன் ஒருவனே. அவன் எக்காலத்தும் எவ்விடத்தும் இருக்கக்கூடியவன் என்கிறார் பட்டினத்தடிகள்.

**“ஒன்றென் றிருதெய்வ முண்டென் றிருவுயர் செல்வமெல்லாம்**

**அன்றென் றிருபசித் தோர்முகம் பார்நல் லறமுநட்பும்**

**நன்றென் றிருநடு நீங்காம லேநமக் கிட்டபடி**

**என்றென் றிருமன மேயுனக் கேயுப தேசமிதே" -64.**

பட்டினத்தார் மனத்திற்குக் கூறுகிறார்.

தெய்வம் ஒன்று என்று, இரு; அத்தெய்வம் என்றும் உண்டு என்று நம்பியிரு. உலகத்தில் உள்ள உயர்ந்த செல்வங்கள் யாவும் நிலையில்லாதது என்று இரு பசித்தவர்களின் முகத்தை எப்பொழுதும் இரக்கத்தோடு பார். அவர்களுக்கு மனமிரங்கி அன்னமிடு. நல்ல தருமமும், நல்ல நட்பும் நல்லன என்று உறுதிகொண்டிரு. நடுநிலை குன்றாமல் இறைவன் தன்னுடைய வினைக்குத் தக்கவாறு விதைத்தது இதுதான் என்று திருப்தியாயிரு; இதுவே உனக்கு யான் செய்ய வேண்டிய உபதேசம் ஆகும் என்கிறார் பட்டினத்துப் பிள்ளையார்.

கிடைத்த மட்டும் திருப்தியடைவதே அருள்வழி நிற்பதாகும். பிராரத்த வினையளவாக இறைவனானை ஆன்மாக்களுக்கு வேண்டுவ உதவலான் பெற்ற மட்டும் திருப்தியடையது. மேலும் பெற விழைவோர் அறவழி ஒழுகுவாரல்லர்.

**தீவினைப் பயன்:**

**"என்செய லாவதி யாதொன்று மில்லை யினித்தெய்வமே**

**உன்செய லேயென் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த**

**பின்செய்த தீவினை யாதொன்று மில்லைப் பறிப்பதற்கு**

**முன்செய்த தீவினை யோவிங்ங னேவந்து மூண்டதுவே" -65.**

என்கிறார் பட்டினத்தார்.

இறைவனுக்கு யான் அடிமைப்பட்டபின்னர் எனது செய்கையிலே ஆகுங்காரியம் ஒன்றுமில்லை. எல்லாம் இறைவன் திருவருட் செயலேயென்று அறியப்பெற்றேன். இந்த தேகந்தாங்கிய பின்னர் யான் செய்த தீவினை ஒன்றேனும் இல்லை. முற்பிறவியில் செய்த தீவினைதான் என்னை வந்து சேர்ந்ததோ? என்று பாடுகிறார்.

இச்செய்யுள் பட்டினத்தார் கழுமரத்தை நோக்கிப் பாடியதாகும்.

“பட்டினத்தடிகள் கொங்கு நாட்டிலிருந்து நீங்கி துளுவ நாட்டை அடைந்து, பல திவ்ய ஷேத்திரங்களை வணங்கி உஞ்சேனைமாகாளஞ் சென்று, கடவுளைத் தொழுது ஒரு விநாயகராலயத்தில் நிஷ்டையிலமா்ந்திருந்தனா்.

அமா்ந்திருக்குநாளில் ஒரு நாளிரவு சில திருடா்கள் அக்கணபதி ஆலயத்தில் நுழைந்து, தும்பி முகக்கடவுளை வணங்கி, அவ்வூரை ஆளும் பத்திரகிரி மன்னருடைய மாளிகையிற் புகுந்து, பட்டாடைகளையும், அணிகலன்களையும், பிற பொருள்களையும் திருடிக்கொண்டு திரும்புகையில் மீண்டும் அவ்விநாயகராலயமடைந்து, யானை முகத்தண்ணலுக்கு ஒரு மணிப்பதக்க மணிய வேண்டுமெனக் கருதி ஒரு விலையுயா்ந்த பதக்கத்தை எடுத்து, இருட்டில் மயங்கி, அங்கே சிவஞான நிஷ்டையில் கூடியிருந்த பட்டினத்துப் பிள்ளையாரைப் பிள்ளையாரெனக் கொண்டு அப்பதக்கத்தை அவா் கழுத்திலணிந்து சென்றாா்கள். மறுநாள் காவலாளா் சோதனை செய்து வருங்கால் சுவாமிகள் திருக்கழுத்தில் மன்னரது மாணிக்கப்பதக்கம் மிளிா்வது கண்டு, எம்பெருமானைப் பலவாறு துன்புறுத்தினா். அதனால் திருவெண்காடா் நிஷ்டை கலையப் பெற்றாா். காவலாளா் ஞான மூா்த்தியை அரசமன்றமேற்றினாா். மன்னன் உண்மை தேராது பிள்ளையாரைக் கழுமரத்திலேற்றுமாறு ஆணை தந்தான். தண்ட வினைஞா்கள் சிவஞானச் செல்வரைக் கழுமரத்தருகே அழைத்துச் சென்றாா்கள். திருவருள்வழியே ஒழுகும் பெருமான்.

**“என்செய லாவது யாதொன்று மில்லை என்னும் இத்திருப்**

**பாடல் ஓத, உடனே கழுமரம் தீப்பற்றி எரிந்து சாம்பலாயிற்று**

**அதுகேட்ட பத்திரகிரியாா் விரைந்து ஓடிக் குருநாதன்**

**திருவடிகளில் விழுந்து வணங்கியெழுந்து நின்றாா்” -66.**

நிலையான பொருள்களிலும், இயங்கும் தன்மையுடைய பொருள்களிலும் இறைவன் நீக்கமற நிறைந்து அவைகளை வழிநடத்துகிறான். “அவனன்றி ஓரணுவும் அசையாது” என்பது ஆன்றோா் வாக்கு. எல்லாம் அவன் செயலாக இருக்க அச்செயலைத் தம் செயலாக கொள்வதே அறியாமை. அறியாமை நீங்கிய பெரியோா் எல்லாம் சிவன்செயலாய்க் காண்டலால் என் செயலாவது யாதொன்று

மில்லை என்றார். அவர் பிராரத்தி வினையை நுகர்ந்து வரும் பொழுது ஆகாமிய வினையேறக் கூடிய செயல் ஒன்றும் செய்யவில்லை என்கிறார். இந்தப் பிறவியெடுத்தபின் செய்த தீவினை யாதொன்றுமில்லை. இப்பொழுது அரசனால் தண்டனை விதிக்கப்பெற்று கழுவேற்றப்படுவதற்குக் காரணம் முற்பிறப்பில் தீவினை செய்திருக்க வேண்டும் என்று பாடுகிறார். எனவே பட்டினத்தடிகள் அடைந்த துன்பத்திற்குக் காரணம் முன்செய்த தீவினையேயாகும். எல்லாம் சிவன் செயல் என்பவர்க்கு ஆகாமிய கர்மம் இல்லை என்பார்கள்.

**பெருமானுக்கு உகந்த செயல்:**

விபூதி தரித்துக் கொண்டு தெருத்திண்ணையிலுறங்கிப் பிச்சையேற்றுண்டு உலக எண்ணமின்றியிருப்பதே சிவபெருமானுக்கு உகந்த செயலாகும் என்கிறார் பட்டினத்தார்.

**"ஊரீ ருமக்கோ ருபதேசங் கேளு முடம்படங்கப்**

**போரீர் சமணைக் கழுவேற்று நீற்றைப் புறந்திண்ணையிற்**

**சாரீ ரனந்தலைச் சுற்றத்தை நிக்கிச் சகநகைக்க**

**ஏரீ ருமக்கவர் தாமே தருவ ரிணையடியே" -67.**

பட்டினத்தடிகள் ஊர் மக்களைப் பார்த்துக் கூறுகிறார். ஊர் மக்களே! உங்களுக்கு ஒரு உபதேசம் சொல்லுகிறேன் கேளுங்கள்; உடல் முழுவதும் சமணர்களைக் கழுவிலேற்றிய விபூதியைப் பூசிக்கொள்ளுங்கள்; திண்ணையில் நித்திரை செய்யுங்கள், சுற்றத்தினரை விட்டு நீங்கி உலகம் சிரிக்கப் பிச்சையெடுங்கள். இங்ஙனம் செய்தால் சிவபெருமான் வலியவந்து தமது திருவடிகளை உங்களுக்கு உதவுவார்.

திருஞானசம்பந்தர் திருநீற்றால் கூன்பாண்டியனின் சுரநோயைத் தணித்தார். சமணர்களைக் கழுவிலேற்றினார் என்கிறது பெரியபுராணம்.

**"உளியிட்ட கல்லையு மொப்பிட்ட சாந்தையு மூற்றையறப்**

**புளியிட்ட செம்பையும் போற்றுகி லேனுயர் பொன்னெனவே**

**ஒளியிட்ட தாளிரண் டுள்ளே யிருத்துவ துண்மையென்று**

**வெளியிட் டடைத்துவைத் தேனினி மேலொன்றும் வேண்டிலனே" -68.**

உளியினாற் செதுக்கப்பட்ட கல்லுருவையும், அழகமையச் செய்யப்பட்ட சாந்துருவையும், அழுக்கு நீங்கப் புளியிட்டுத் துலக்கிய செம்புருவையும் வணங்கமாட்டேன். பொன்போலப் பொலிகின்ற இறைவன் திருவடி இரண்டையும் நெஞ்சினுள்ளே பதிய வைப்பது உறுதியென்று புறத்தே சொல்லி அத்திருவடிகளை உள்ளே நிறுத்தி வைத்தேன். இனிமேல் ஒன்றையும் விரும்புவனல்லேன்.

**சிவதரிசனம்:**

ஆலயங்களில் கல்லினாலுஞ் சாந்தினாலுஞ் செம்பினாலுஞ் செய்யப்பட்ட உருவங்களையே பொருளாய்க் கொண்டு வழிபடுவோர் அஞ்ஞானிகள். அவர்கள் பிறவிப் பெருங்கடலை நீந்திக் கடக்க முயலாதவர்கள். அவ்வுருவங்களில் அமர்ந்துள்ள மூர்த்தியை வழிபடுவதே அறிவுடைய செயலாகும். கல், மண், சாந்து, செம்பு என்னும் எண்ணமுடையார்க்குக் கடவுளெண்ணந் தோன்றாது. கடவுளெண்ணம் உடையார்க்குக் கல், மண், சாந்து, செம்பு என்னும் எண்ணம் தோன்றாது.

**"மரத்தை மறைத்தது மாமத யானை**

**மரத்தில் மறைந்தது மாமத யானை**

**பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்**

**பரத்தில் மறைந்தது பார்முதல் பூதமே" -69.**

என்கிறார் திருமூலர்.

மரத்தால் செய்யப்பெற்ற யானைப் பதுமையைப் பார்க்கும்போது, மரத்தைப் பற்றிய காட்சியில்லை.

வர்ணங்களை அகற்றிப் புறநிலையை மாற்றிப் பாக்கும் போது யானையின் காட்சி மரத்தில் மறைந்தது.

அதுபோல பரத்தால் விளங்கப் பெற்ற பார் முதலிய பூதங்களைப் பார்க்கும்போது பரமனது காட்சிக்கு ஆவதில்லை.

குருவருளால் பாாக்கும்போது பரமே காட்சி அளித்துப் பார் முதல் பூதங்கள் பரத்தில் மறைந்தன.

இப்பாடல்களின் மூலம் சிவதரிசனம் செய்வது பற்றி விளக்கியுள்ளார்கள் சித்தர்கள்.

**5.6 குதம்பைச் சித்தர் பாடல்களில் இறைமை:**

**சிந்தையில் விளங்கும் சோதி**

'அணு' என்பது நுட்பமானது, ஆற்றல் மிக்கது, நாம் அறிந்ததுதான். பிரபஞ்சம் நம் கற்பனைக் கெட்டாத அளவு விரிந்து பரந்தது. அதுவும் நமக்குத் தெரியும். ஆனால் மிகச்சிறியதோ, மிகப்பெரியதோ எதிலும் இறைவன் இருக்கிறான். தன்னுடைய ஒளியில் சிறு துளியையேனும் அவன் உயிர்களுக்கு வழங்கியிருக்கிறான். நம்முடைய சிந்தையிலும் அவன் சுடரொளியாய் விளங்கி நிற்கிறான்.

'உன் சித்தத்தில் விளங்கும் சோதியைப் போற்றித் துதித்திடு' என்கிறார் குதம்பைச் சித்தர்.

**'அணுவாய்பல் அண்டமாய் ஆனசிற் சோதியைத்**

**துணிவாய் நீ போற்றடியோ குதம்பாய்**

**துணிவாய் நீ போற்றடியோ'** -70.

என்று பாடுகிறார் குதம்பைச் சித்தர்.

உலகில் சூரியன் முதலாக ஒளி தரக்கூடிய பொருள்கள் பல உண்டு. அத்தனை ஒளிகளுக்கும் மூலமானவன் இறைவன். மாணிக்கமே ஒரு குன்றாக இருந்தாலும் அதைவிட பெரிய சோதியாய் நிற்பவன் இறைவன். அவனுடைய மாசற்ற பேரொளிக்கு நிகராய் எதையும் சொல்வதற்கில்லை. அவனுடைய

கருணைக்குச் சமமாய் எந்தப் பொருளும் இல்லை. அவனது அருளுக்கு ஈடாய் பிரதியாய் நாம் நம் மனத்தைத் தவிர வேறு எதையும் தரமுடியாது.

**“மாணிக்கக் குன்றிக்கு மாசற்ற சோதிக்கு**

**காணிக்கை நன்மனமே குதம்பாய்**

**காணிக்கை நன் மனமே” -71**

என்று கூறுகிறார் குதம்பைச்சித்தர்.

இறைவன் ஒருவனே எங்கும் நிரம்பியிருக்கிற ஒருபொருள். அனைத்து உயிர்களின் சிந்தையிலும் நிற்பதுவும், அசைவன அசையாதனவாகிய சகலத்துக்கும் மூலமாயிருப்பதும் அதே இறைவன்தான். உயிர்ப்பொருளிலும் சடப்பொருளிலும் உள்ள இறைவனை அறிய வேண்டும் என்கிறார் குதம்பைச் சித்தர்.

ஐம்பெரும் பூதங்களான நிலம், நீர், நெருப்பு, காற்று ஆகாயம் ஆகியவற்றை மூலப்பொருள்களாகக் கொண்டு உருவானது நம்முடைய உடல். அதனால் தான் அண்டத்தில் இருப்பது பிண்டத்திலும் இருக்கிறது என்றார்கள். எனவே, இவ்வுலகம் முழுவதும் நிறைந்து காணப்படுகிற இறைவன் நம் உடலிலும் இருக்கிறான் என்பதை உணர வேண்டும்.

**“நீரும் நெருப்பும் நெடுங்காற்று வானமும்**

**பாருமாய் நின்றதைக் காண் குதம்பாய்**

**பாருமாய் நின்றதைக் காண்”**

**“எங்கும் வியாபகம் ஈகை விவேகங்கள்**

**பொங்கமாய் உள்ளானடி குதம்பாய்**

**பொங்கமாய் உள்ளானடி” -72.**

என்று பாடுகிறார்.

நிலத்திலும், அகண்ட நீர்ப்பரப்பிலும், ஓங்கி யெழும் தீயிலும், வீசுகின்ற காற்றிலும், விரிந்துபரந்த வானிலும் பஞ்ச பூதங்களாய் இறைவன் விளங்கி நிற்கிறான் என்று கூறுகிறார் குதம்பைச் சித்தர்.

**5.7 அழுகணிச் சித்தர் பாடலில் இறைமை:**

இறைவன் எப்பொழுதும் மாயையாக உள்ளான் என்கிறார் அழுகணிச் சித்தர்.

**மாயை:**

இச்சை, செயல், அறிவு என்னும் மூன்றும் தனித்தனியாகத் தோன்றாமல் மயக்கநிலையை உயிருக்குத் தருவது மாயை எனப்படும.

மாயாதத்துவம் என்பது ஆன்மாவை மறைத்து நிலையற்ற பொருளை நிலையானது எனக் காட்டிடும்.

பரமாத்மாவை ஆதாரமாய்க் கொண்ட சக்தி மாயை அது உலகத்தைப் படைத்து, காத்து, அழிக்கிறது. மாயை அஞ்ஞானம். ஞானத்தில் மாயை நீங்கும். தெளிவு ஏற்படும்.

மாயையாகிய திரை மனிதர்களை மறைக்க மறைந்துள்ளான் இறைவன். பாருக்குள் மாயையானது மோருக்குள் வெண்ணெய் போல் கலந்திருக்கிறது என்கிறார் அழுகணிச் சித்தர்.

**“பாருக்குள் மாயையடி பார்க்க வெள்ளை பூத்ததடி**

**மோருக்குள் வெண்ணெயைப் போல் - என் ஆத்தாளே**

**முழங்கிக் கலந்திடவே” -73.**

என்று பாடுகிறார்.

வானத்தில் உள்ள நிலவைப் பார்த்தால் நாம் நடந்தால் நம்மோடு நடக்கும். நாம் நின்றால் தாமும் நிற்கும், ஓடினால் நம்மோடு ஓடவும் செய்யும் ஆனால் அந்நிலவு கைக்கு வராது. நிலவுக்கும் நமக்கும் இடையே நடப்பது போலவே ஒரு கண்ணா மூச்சி ஆட்டம் இறைவனுக்கும் நமக்குமிடையே நடக்கிறது.

எங்கும் காணக்கிடைக்கிற உண்மைப்பொருள்தான் இறைவன். ஆனால், அவனைத் தொடர்ந்து ஓடுவோருக்கு அகப்படாமல் விண்ணில் மறைந்துவிடுகிறான். இது நிறைய பேருடைய அனுபவம் என்கிறார். அழுகணிச்சித்தர்.

**“உண்மைப் பொருளடியோ ஓடுகின்ற பேர்களுக்கு**

**விண்ணிலே போச்சுதடி – என் ஆத்தாளே**

**வெகுபேரைப் பார்த்திருந்தேன்”** -74.

என்பது அப்பாடல்.

கொல்லன் உலைக்களத்தில் இரும்பைக் காய்ச்சுவதை நாம் பார்த்திருக்கிறோம். காய்ச்சிய இரும்பின் மீது நீரைத் தெளித்தால் நீர் காணாமல் போய்விடும். நீர் ஆவியானதா, இரும்பு உறிஞ்சிக் கொண்டதா என்று நமக்குத் தெரியாது.

பூவானது மொட்டு நிலையில் இருக்கும்போது வாசத்தை வெளிப்படுத்தாது. இதழ் விரிந்தபின் எங்கும் வாசத்தைப் பரப்பும். மொட்டு நிலையிலிருக்கும் பொழுது வாசம் இருந்ததா இல்லையா என்று தெரியாது. வாசம் முன்னமே உள்ளிருந்து வந்ததா, வெளியிலிருந்து வந்ததா என்றும் தெரியாது. இறைவன் நம் அறிவை மயங்கச் செய்யும் மாயையில் உள்ளான். மயக்கத்திலிருந்து வெளிப்பட்டு தெளிவு பெறுகிறபோது அந்த அறிவிலும் இருக்கிறான் என்கிறார்.

**“இரும்பில் உறைநீர் போல் எனை விழுங்கிக் கொண்டாண்டி**

**அரும்பில் உறைவாசமும் போல் - என் ஆத்தாளே**

**அன்றே இருந்தாண்டி”** -75.

என்று பாடுகிறார் சித்தர்.

கடல் மிகப் பெரியது. நம் கற்பனையையும் தாண்டியதாய் உள்ளது. ஆனாலும் அந்தக் கடலுக்கும் கரை உண்டு. கடலில் விளிம்பைக் காட்டி நிற்கிறது கரை. இறைவனோ, கரையற்ற கடலாய் இருக்கிறான். நடுக்கடலில் உள்ள கப்பலைக் கரையில் உள்ளவரால் காண முடியாது. கரையற்ற கடலும் இறைவனே,

நடுக்கடலில் நிற்கும் கப்பலும் அவனே. இறைவன் எங்கும் பரவி நின்றாலும் அவனுடைய கருணையில்லாமல் அவனை நாம் காண முடியாது.

**"கங்கு கரை இல்லாண்டி கரைகாணாக் கப்பலடி**

**எங்கும் அளவில்லாண்டி – என் ஆத்தாளே**

**ஏகமாய் நின்றாண்டி" -76.**

என்று பாடுகிறார் அழுகணிச்சித்தர்.

**5.8 கல்லுளிச்சித்தர் பாடலில் இறைமை:**

யோகப் பயிற்சியைப் பற்றி கல்லுளிச் சித்தர் பாடுகிறார்.

யோகம் பழகுகிறவர் பௌர்ணமி நாளில் பயிற்சியைத் தொடங்கவேண்டும். குருவிடமிருந்து தீட்சைப் பெற்று தொடங்க வேண்டும். பாசிப்பயிறு கலந்த அன்னத்தைப் புசிப்பதுடன் உணவுக்கட்டுப்பாட்டை மேற்கொள்ள வேண்டும்.

மண்மீதும் பொன்மீதும் ஆசை வைக்கக் கூடாது. மாயைகளில் சிக்கினால் துன்பம்தான் ஏற்படும்.

எட்டுவகையோகங்களையும் செய்ய வேண்டும். பிரணாயாமத்தை தொடர்ந்து செய்யவேண்டும். ஏக சிந்தையாய் இருக்கவேண்டும் என்கிறார் கல்லுளிச்சித்தர்.

**"பெண்போகத்து ஆசை வையாதே- நல்ல**

**பிரணவ சொரூபத்தை நழுவ விடாதே**

**மண்பொன்மேல் இச்சை கொள்ளாதே – பொல்லா**

**மாயையில் அகப்பட்டு நீயுழலாதே" -77.**

என்கிறார்.

**"அட்டாங்க யோகமது செய்வாய் ஆதி**

**ஆனந்த நிலைகண்டு மோனத்தில் உய்வாய்**

**கட்டாக ஓர் நிலையில் நில்லு அந்தக்**

**கரணம் அடக்கியே மேலேறிச் செல்லு" -78.**

என்று யோகத்தின்பலன்கள் பற்றியும் கல்லுளிச்சித்தர் பாடியிருக்கிறார்.

**"அஞ்ஞானம் என்பதும் போச்சு பர**

**மானந்தம் என்பது அது நிசப்பேச்சு**

**மெய்ஞ்ஞானம் என்பது பொய்யோ- இந்த**

**மேதினியொர்கள் அறியார்கள் ஐயோ**

**இல்லறம் உள்ளதும் தாயே ஆதி**

**ஏற்கையிருந்தோர்க்குச் சாதனமாமே**

**நல்லறம் தேடி அலையாதே மேலாம்**

**நாதாந்த வெட்ட வெளியாயிருக்கும் போதே"**

**மோன நிலை கண்டு தேறு- பர**

**முக்திக்கு வித்தான கருத்தில் நின்றேறு**

**ஞானநிலையதுவும் கிட்டும் பூவில்**

**நாடி இருக்கலாம் வெகு காலமட்டும்"-79.**

என்று பாடுகிறார்.

என்னுடைய அறியாமை நீங்கிற்று. பேரின்பம் கிட்டும் என்பது உண்மையாயிற்று. இல்லறத்தானும் மேற்கொள்ளக் கூடிய சாதனம் இது. வேறு அறம் எதுவும் வேண்டாம். ஞான நிலை வாய்க்கும். நெடுங்காலம் நீடித்து வாழலாம் என்று யோகத்தின் பலன்களைப் பாடுகிறார் கல்லுளிச் சித்தர்.

## 5.9 திருமூலர் கூறும் அட்டாங்க யோகம்:

இறைவனை அடைவதற்கு எந்த வழியைத் தேர்ந்தெடுப்பது என்று தடுமாறவேண்டாம். அட்டாங்க யோக நெறியில் நின்று சமாதியை அடையுங்கள். அவ்வாறு அந்நெறியில் பொருந்தி ஞானம் பெறுங்கள். உங்களுக்குச் சிவப்பேறு வாய்க்கும் என்கிறார் திருமூலர்.

“யோகம் எட்டு நெறிகளைக் கொண்டதன் காரணமாகவே அட்டாங்க யோகம் என்று அறியப்படுகிறது. அவை, இயமம் நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆகும்.

- இயமம் - புலனடக்கம்
- நியமம் - ஒழுக்கத்தில் நிற்றல்
- ஆசனம் - இருக்கை
- பிராணாயாமம் - மூச்சைக்கட்டுப்படுத்துவது.
- பிரத்தியாகாரம் - மனத்தை உள்ளே நிறுத்திப் பழகுதல்
- தாரணை – உள்ளே நிறுத்திய மனத்தை நிலைப்படுத்துதல்
- தியானம் - இடைவிடாமல் நினைந்திருத்தல்
- சமாதி - உயிரும் இறைவனும் ஒன்றி நிற்றல்’’ -80.

**1. இயமம்:**

இயமத்தில் நிற்பவன் தீயனவற்றைச் செய்யக் கூடாது. கொல்லுதல், பொய் கூறுதல், களவுசெய்தல் கள்ளுண்ணல், காமுறுதல் இவற்றைத் தவிர்க்க வேண்டும் நல்லவனாய், பணிவுடையவனாய், நீதி தவறாதவனாய் இருந்து கொண்டு பகிர்ந்து கொடுக்கிற பண்பும், குற்றமற்ற தன்மையும் கொண்டவன் இயம ஒழுக்கங்களில் நிற்பவனாவான்.

**2. நியமம்:**

பராசக்தியைத் தன்னுள் பாதியாய்க் கொண்டவன் சிவன். சிவசக்தி தத்துவத்தை உணர்ந்து முறைப்படி வணங்குவோன் நியமத்திருப்பவனாவான். நியமத்தில் நிற்பவனுக்குரிய குணங்கள் உள்ளும் புறமும் தூய்மையாயிருத்தல், அருளுடைமை, நேர்மை, உண்மை, மானம், காமம், களவு, கொலை இவற்றைத் தீமையென்று ஒதுக்குதல் ஆகும்.

**"ஆதியை வேதத்தின் அப்பொரு ளானைச்**
**சோதியை அங்கே சுடுகின்ற அங்கியைப்**
**பாதியுள் மன்னும் பராசக்தி யோடுடன்**
**நீதி யுணர்ந்து நியமத்தன் ஆமே!"** -81.

என்கிறது திருமந்திரம்.

நியமத்தை மேற்கொண்டவன் தவம், செபம், மகிழ்ச்சி, தெய்வநம்பிக்கை, கொடை, சிவ விரதம், முப்பொருளுண்மை கேட்டல், வேள்வி, சிவபூசை, பேரொளிதரிசனம் என்கிற பத்தினையும் கடைப்பிடிக்க வேண்டும்.

3. **ஆதனம்:**

**"பங்கய மாதி பரந்தபல் ஆதனம்**
**அங்குள வாம்இரு நாசம் அவற்றினுள்**
**சொங்கில்லை யாகச் சுவத்திக மெனமிகத்**
**தங்க இருப்பத் தலைவணு மாமே!" -82.**

ஆதனம் என்கிற ஆசனம் பலவகை. அவற்றுள் குறிப்பிடத்தக்கவை – சுகாசனம் (சுவாத்தினம்) பத்மாசனம், பத்திராசனம், குக்குட ஆசனம், சிங்காதனம் ஆகும்.

**சுகாசனம்:** சுகாசனத்தில் பொருந்தியிருப்பவன் தலைவணாகலாம்.

**பத்மாசனம்:**

பத்மாசனம் என்பது வலப்பக்கத் தொடையின் மீது இடக்காலையும், இடப்பக்கம் தொடையின் மீது வலக் காலையும் இழுத்து வைத்து, கைகளிரண்டையும் ஒன்றன் மீது ஒன்றாக மலர்ந்த பாவனையில் வைத்து, நன்றாக நிமிர்ந்த நிலையில் கண்கள் அசைவற நேர்முகமாய் நோக்குதல் ஆகும்.

**பத்திராசனம்:**

பத்திராசனம் என்பது வலக்காலை இடப்பக்கத் தொடையின் மீது விளங்கும்படி வைத்து, முழந்தாள்களில் இரு கைகளையும் நீட்டி உடம்பை நேராக நிமிர்த்தி இருத்தல்.

**குக்குட ஆசனம்:**

குக்குட ஆசனம் என்பது பாதங்கள் இரண்டினையும் தொடை மீது ஏற்றி, உடம்பின் பளுவை முழங்கை தாங்குமாறு அமைத்து அசைவின்றி இருத்தல்.

**சிங்காதனம்:**

சிங்காதனம் என்பது பாதநுனிகளைப் பூமியிலூன்றி முழங்காலில் கைகளை நீட்டி, விருப்புடன் மேல்நோக்கி குற்றமற்ற கண்கள் மூக்கின் நுனியை நோக்கியிருக்குமாறு செய்வது.

4. **பிராணாயாமம்:**

'ஐவர் வாழும் ஊருக்கு ஒரு தலைவன். அவன் குதிரை மீது ஊர்ந்து செல்பவன்' என்று புதிர்போடுவது போல் பிராணாயாமம் பற்றிச் சொல்கிறார் திருமூலர்.

**"ஐவர்க்கும் நாயகன் அவ்வூர்த் தலைமகன்**
**உய்யக் கொண்டு ஏறும் குதிரை மற்ற ஒன்று உண்டு**
**மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்கும் கெடாது போய்ப்**
**பொய்யரைத் துள்ளி விழுந்திடும் தானே"** -83.

என்று பாடுகிறார்.

'ஐவர் வாழும் ஊர்' என்று குறிப்பிடுவது ஐம்பொறிகளையும் உறுப்பாய்க் கொண்ட உடலேயாகும். ஆன்மா அதன் தலைவன். அத்தலைவன் மனத்துடன் ஊர்ந்து செல்ல பிராணன் என்கிற குதிரை ஒன்று உள்ளது. பிரபஞ்ச உணர்வுடையவர்க்கே பிராணனாகிய குதிரை கட்டுப்படும். பிராணனைக் கட்டுப்படுத்த இயன்றவர்க்கே மனம் கட்டுக்குள் நிற்கும்.

'பிராண வாயுவைக் கட்டுப்படுத்தும் வகையறியாது மக்கள் மயங்குவர். நன்னெறி ஒழுகுவாரை சிவகுரு எழுந்தருளி வந்து ஆட்கொள்வான். அவனுடைய திருவருளைப் பெற்றால் பிராணனை வயப்படுத்துதல் எளிது' என்கிறார் திருமூலர்.

**“ஆரியன் நல்ல குதிரை இரண்டு உள**

**வீசிப் பிடிக்கும் விரகு அறிவார் இல்லை” -84.**

என்கிறார் திருமூலர்.

ஆரியன் என்பது மனத்தைக் குறிக்கிறது. குதிரை இரண்டு என்பது அபானன், பிராணன் என்கிற இரண்டு வாயுக்கள்.

**அபானன் - உச்சத்தலத்தில் நிற்பது. தசவாயுக்களிலொன்று**

**பிராணன் - இதயத்தியங்குவது, உயிர்க்காற்று**

‘பறவையைவிட வேகம் கொண்டது பிராணன். அதன்வழி சிரசை நோக்கிச் செல்வதாயின் கள்ளுண்ணாமலே சாதகனுக்கு மகிழ்ச்சியுண்டாகும்’. என்கிறார் திருமூலர். பிராணாயாமப் பயிற்சியில் சாதகன் சோம்பல் நீங்கி, சுறுசுறுப்பை அடைகிறான்.

‘பிராணனாகிய உயிர்ப்பு மனத்துடன் பொருந்தி, அடங்கி இருக்குமாயின் பிறப்பு இறப்பு இல்லை.

பிராணாயாமம் என்பது வெளியே இருக்கும் காற்றை இடது மூக்குத்துவாரத்தின் வழியாக உள்ளே இழுத்துக் கொண்டு பதினாறு மாத்திரை கால அளவு சுழிமுனை நடுவில் அதாவது நடுமூச்சில் நிறுத்தி, பிறகு முப்பத்திரண்டு மாத்திரையளவு பிங்கலை நாடி வழியே விடுவதாகும். (பிங்கலை என்பது வலது மூக்கில் நிற்பது).

பிராணாயாமம் செய்யும் முறைபற்றி திருமூலரின் திருமந்திரப் பாடல்

**“ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்**

**ஆறுதல் கும்பம் அறுபத்து நாலதில்**

**ஊறுதல் முப்பத்திரண்ட திரேசகம்**

**மாறுதல் ஒன்றின்கண் வஞ்சகமாமே” -85**

- பூரகம் - உள்ளிழுத்தல்
- கும்பகம் - அடக்குதல்.
- இரேசகம் வெளிவிடுதல்.

பதினாறு மாத்திரை கால அளவு இடப்பக்கமுள்ள நாசித்துவாரத்தில் காற்றை உள்ளிழுத்தல் பூரகம். அறுபத்து நான்கு மாத்திரையளவு இழுத்த காற்றை உள்ளே நிறுத்தல் கும்பகம் முப்பத்திரண்டு மாத்திரை கால அளவு வலப்பக்க நாசி வழியே காற்றை மெல்ல விடுதல் இரேசகம். இது பிராணாயாமம் செய்யும் முறையாகும்.

மேற்சொன்ன முறைக்கு மாறாக வலப்பக்க நாசித்துவாரத்தில் காற்றை இழுத்து நிறுத்தி, இடப்பக்க நாசித் துவாரத்தில் விடுதல் வஞ்சனை.

மூச்சைத் தனது கட்டுப்பாட்டில் வைக்கக் கற்றவனின் உடல் பளிங்குபோல் மாசற்றதாய், தூய்மையுடன் இருக்கும். அவன் முதுமையடைந்தாலும் தொடர்ந்து இளமைத்தோற்றத்தில் காணப்படுவான். அவன் உடம்பு காற்றை விட மென்மை உடையதாகும். அவனுக்கு எங்கும் செல்கிற ஆற்றல் உண்டாகும்.

இடது நாசியின் வழியே பிராணவாயுவை உள்ளே வாங்க உடம்புக்கு அழிவில்லை.

காற்றை கும்பகம் செய்யும் முறையை அறிந்தவர் எமனைக் கடக்கும் இலட்சியத்தை உடையவராவார்.

உடலின் மேல், கீழ், நடு எனும் பகுதிகள் நிறையுமாறு உள்வாங்கிய காற்றை அளவோடு வெளியிட்டு, வயிற்றில் கும்பகம் செய்ய சிவனார் திருவருள்கிட்டும்.

(உடலின் 'மேல்' என்றது தலை, கண், காது, 'கீழ்' என்றது கால் பெருவிரல். 'நடு' என்றது நெஞ்சகம் தொப்புள் இவற்றைக் குறிக்கும்).

உடல் வளர்ச்சியுறும்படி அளவாகப் பிராணனை வெளியிட்டு, உடலுக்குச் செழுமையும் கொழுமையும் உண்டாக பத்துவகை நாடிகளும் விம்மும்படிகாற்றை

உள்ளிழுத்து நிரப்பி, பிராணன், அபானன் என்பவை சேரப்பெற்று நேராய் நிமிர்ந்திருக்க எம பயம் இல்லை.

உள்ளிருந்து புறப்பட்டு வெளியாகி, மீண்டும் உட்புகுந்து திரியும் பிராணவாயுவை முறைப்படி தடுத்து உள் நிறுத்தித் தூய்மை செய்வார் உடம்பு பொன்னாய் சிவக்கும். தலைமுடி கறுத்துத் தோன்றும்.

'பிராணனின் இயல்பை அறிந்து கொண்டால் இராப்பகலற்ற துரியவெளியில் இருக்கும் வாய்ப்பு சாதகனுக்கு அமையும்' என்கிறார் திருமூலர்.

பிராணாயாமம் என்பது வெறும் மூச்சுப் பயிற்சியல்ல. அது பிராணனைக் கட்டுப்படுத்துவது. பிராணன் அறிந்து கட்டுப்படுத்தியவன் உலகிலுள்ள எதையும் கட்டுப்படுத்தக் கூடியவனாகிறான். யோகியிடம் இந்தத் திறன் உண்டு.

பிராணனை வசப்படுத்துகிறவன் தன்னுடைய மனத்தைப் போலவே பிறருடைய மனங்களையும் அடக்கியாள்கிறான். தனது உடலைப்போலவே மற்றவர்களுடைய உடல்களையும் தனது ஆணைக்குக் கட்டுப்படச் செய்கிறான்.

**5. பிரத்தியாகாரம்:**

மனத்தை வெளியே செல்லவிடாமல் உள்ளே நிறுத்திப் பழகுவதால் இதனை அகத் தவப்பயிற்சி எனலாம்.

'எந்தப் பொருளை வேதங்கள் தேடிக்கொண்டிருக்கிறதோ அந்தப் பொருளை நீங்கள் அகத்தே கண்டு இன்புற முடியும்' என்கிறார் திருமூலர்.

**"கண்டு கண்டு உள்ளே கருத்துற வாங்கிடில்**
**கொண்டு கொண்டு உள்ளே குணம் பல காணலாம்**
**பண்டு உகந்து எங்கும் பழமறை தேடியை**
**இன்று கண்டு இங்கே இருக்கனும் ஆமே"- 86**

என்கிறது திருமந்திரம்

வெளியே செல்லும் இயல்புடைய மனத்தை உள்ளே பொருந்தும்படி செய்துவிட்டால் ஒளிபெறல் சாத்தியம்.

மூலாதாரத்தைத் தூண்டி தொழிற்படுத்தும் மந்திரம் ‘ஓம்’ ஆகும். அதுசிவனை அழைப்பதுடன் மனத்தை உள்ளிழுத்து நிலைநிறுத்துவது ஆகும்.

கொப்பூழுக்குப் பன்னிரண்டு அங்குலம் கீழே உள்ளது மூலாதாரம்.

மூலாதாரத்துக்கு இரண்டு விரற்கடை மேலும், குறிக்கு இரண்டு விரற்கடை கீழும் உள்ளது வட்டக்குண்டலி.

இது அழகும் ஆற்றலும் கூடிய செஞ்சுடர். ஊணர்வினுள் எழுவது.

‘நாசிக்குக் கீழ் பன்னிரண்டு அங்குல அளவில் உள்ளது. இதயம் அவ்விடத்தே செஞ்சுடரை நினைத்து, மனத்தை இழுத்து வைக்க பெருஞ்சித்திகள் கைகூடம். ராஜயோகம் வாய்க்கும் என்கிறார் திருமூலர்.

உயிரை மாயையினின்று பிரித்து சிவத்துடன் சேர்ப்பதற்காய் அகத் தவத்தால் கரைதலும், உணர்வினுள் நோக்கலும் பிரத்தியாகாரமாகும். இது சாதகனுக்கு ஆனந்த பரவசத்தை உண்டு பண்ணும், அவனுடைய உள்ளம் வலுவடையும்.

**6. தாரணை:**

‘மனம் புலன்களைப் பற்றிக் கொள்ளும் தன்மையுடையது. அதனைக் கண்டபடி அலையவிடாமல் அடக்க வேண்டும். அவ்வாறு அடக்கியபின் உணர்வுக் கண் கொண்டு, நடுநாடி வழியே திருவருள் வெளியை உற்றுநோக்குதல் வேண்டும். அப்போது கண், காது முதலிய கருவிகளின்றியே காண்பதும், கேட்பதும் சாத்தியமாகும். அது வாழ்நாள் கெடாமல் இருக்கச் செய்யும் வழி’ என்கிறார் திருமூலர்.

**“கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்காட்டி**

**வீணாத் தண்டு ஊடே வெளியுறத்தான் நோக்கி**

**காணாக்கண், கேளாச் செவி என்று இருப்பார்க்கு**

**வாழ்நாள் அடைக்கும் வழி அதுவாமே” -87.**

என்கிறது திருமந்திரம்.

இங்கு வீணாத்தண்டு என்பது முதுகுத்தண்டைக் குறிக்கிறது.

மனத்தை ஒரு வழி நிறுத்திய நிலையில் சிரசின் மேல் விளங்கும் சிற்சபையில் ஒலியோடு கூடிய சோதியைக் காணலாம்.

மூலாதாரத்தில் இருக்கும் சிவனை. சிரசில் உள்ள சிற்சத்தியுடன் இணையச் செய்தால் முதுமை மறைந்து இளமை ஏற்படும்.

பிராணனின் இயக்கத்தைப் பொறுத்தே உடம்பில் உயிர் பொருந்தி நிற்கிறது. உயிரில் பிராணனது இயக்கத்தைக் கட்டி நிறுத்திவிட்டால் உடலின்கண் நெடுநாள் நிற்கும் மனத்தை ஒரு வழி நிறுத்தும் பயிற்சியால் பிராணனைக் கட்டி நிறுத்தலாம்.

மனத்தினின்றும் இறங்கி ஆங்காரத்தால் வெளியேறும் வாயுவை வெளியே செல்லாதபடி, நடு நாடியில் செலுத்த ஏழு சாளரங்களையும் இரண்டு பெரிய வாயில்களையும் கொண்ட பெரும்பள்ளி அறையிலே பலகாலம் வாழலாம்' என்கிறார் சித்தர்.

**"வாழலுமாம் பலகாலம் மனத்திடை**

**போழ்கின்ற வாயுப் புறம்படாப் பாய்ச் சுறில்**

**ஏழு சாலேகம் இரண்டு பெருவாய்தல்**

**பாழி பெரியது ஒரு பள்ளி அறையிலே"-88.**

என்கிறார் திருமூலர்.

ஏழு சாலேகம் என்பது இரண்டு கண், இரண்டு காது, இரண்டு நாசி, வாய் என ஏழு துவாரங்கள்.

இரண்டு பெருவாய் - எருவாய், கருவாய் மனத்தை அடக்கும் உபாயம் பொறிகளின் எல்லையைத் தாண்டி நிற்பதுதான்.

7. **தியானம்:**

இடைவிடாது நினைந்திருத்தல் புருவ நடுவினை உற்றுப்பார்த்திட மெய்யுணர்வு ஒளி வெளிப்படும் இரு கண்களைச் சேர்த்து மனத்தைப் பொருத்திட அது சாத்தியமாகும்.

தியானம் என்பது சிவனைச் சிந்தையில் வைப்பதன்றி வேறென்ன என்று கேட்கிறார் திருமூலர்.

'மனத்தில் விளங்கும் சோதியை மேலெழுப்பி, சினம் என்கிற தீ நீங்குமாறு செய்ய வேண்டும். எல்லாவற்றையும் விளக்கி நிற்கும் சிவ ஒளியே சுழுமுனை என்கிற திரியைத் தூண்டி நடத்த சிவமானது மங்காத தீபமாய் மனத்தில் ஒளிவிடும் என்கிறார் அவர்.

**"மனத்து விளக்கினை மாண்பட ஏற்றிச்**
**சினத்து விளக்கினை செல்ல நெருக்கி**
**அனைத்து விளக்குந் திரியொக்கத் தூண்ட**
**மனத்து விளக்கது மாயா விளக்கே"-89.**

என்று பாடுகிறார் திருமூலர்.

தியானத்தில் முக்குணங்களாகிய இருள் நீங்கி உச்சியில் ஒளி தோன்றும்.

8. **சமாதி:**

உண்மையைத் தொடர்ந்துவிடாது பற்றி நிற்றலே சமாதிஆகும். பகுத்தறிவுக்குப் பொருத்தமான, விழிப்புணர்வுடன் கூடிய அமைதியான மனநிலையே சமாதி.

சமாதி நிலைக்கு முயல்கிறவர் சில நியதிகளைக் கடைப்பிடிக்க வேண்டியிருக்கும்.

அவை:

- அமைதியாயிருத்தல்
- சுயக்கட்டுப்பாடு
- பொருள்களில் பற்று, உணர்வெழுச்சி இல்லாதிருத்தல்
- இடர்ப்பாடுகளை எவ்வித எதிர்ப்புமின்றி ஏற்றுக் கொள்ளல்
- இருப்பதைக் கொண்டு திருப்தி அடைதல்.

'தீமைகளகற்றி நன்மைகள் செய்யும் இயம, நியம முறைகளால் சமாதிநிலை வாய்க்கும்! என்கிறார் திருமூலர்.

‘விந்து’ என்கிற ஒளியும் ‘நாதம்’ என்கிற ஒளியும் சஹஸ்ரதளத்தில் (உச்சி) மிகுந்து விளங்கினால் யோகமான சமாதியின் சீவன் பொருந்தியிருக்கும் அப்போது ஞான வடிவான சிவன் அழகிய சோதியாய் வெளிப்படுவான்.

மனம் எங்குள்ளதோ அங்கே பிராண இயக்கமும் உண்டு. மனம் நினைக்கவில்லையெனில் பிராணவாயுவின் அசைவும் ஏற்படாது. நினைப்பதை விட்ட மனம் அகப் பொருளைக் கண்டு மகிழும்.

**“மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு**
**மன்மனம் எங்கில்லைவாயுவும் அங்கில்லை**
**மன்மனத்துள்ளே மகிழ்ந்திருப்பார்க்கு**
**மன்மனத்துள்ளே மனோலயமாமே”-90.**

என்று பாடுகிறார் திருமூலர்.

யோகியர் தேடுதலற்ற விழிப்பு நிலையில் இருப்பவர்கள். அவர்கள் பிராணனை புறஞ்செல்ல வொட்டாது அகமுப்படுத்திவிடுவர்.

‘வீணான எண்ணங்களை விட்டு மூலக்கனல் வழியே சென்று, சிவத்தைத் தேடி மதிமண்டலத்தில் பொருந்துங்கள் தான் என்றும் சிவன் என்றும் பேதமின்றிப் பொருந்தி நிற்பதே சமாதி ஆகும்’. என்கிறார் திருமூலர்:”

**அட்டாங்க யோகத்தால் அடையக்கூடிய நன்மைகளை திருமூலர் பட்டியலிடுகிறார்.**

- ‘‘சஹஸ்ர தளத்தில் ஒளியாய் நிற்கும் திருவடியை நயந்தவர்க்கு வேண்டியது வேண்டியவாறு அமையும் இயமம்.
- சிவனார் திருவடி பற்றி நின்று, அன்புடன் சிவத்தினை அறிந்து சிந்தித்திருப்பவர்க்கு, முனிவர்களும் எதிர்கொண்டு அழைக்கத்தக்க சிவபதம் கிடைக்கும் - நியமம்.
- சிவத்தை நோக்கிச் செய்கிற தவத்தின் சிறப்பு இம்மையிலேயே இன்பம் பெறுவதாகும்.
- சிவனும் தானும் வேறல்ல என்று உணரும் பக்குவ நிலையில் சிவபதம் கிட்டும் - பிரத்தியாகாரம்.
- பிரணவத்தை உபதேசிக்கிறவர் எங்கும் செல்லவல்ல சித்தராவர் - தாரணை
- சமாதியின் பயனை இப்படி விவரிக்கிறது திருமந்திரம்.

**“காரியமான உபாதியைத் தான் கடந்**

**தாரிய காரணம் ஏழுந்தன் பாலுற**

**ஆரிய காரணமாய தவத்திடைத்**

**தாரியல் தற்பரஞ் சேர்தல் சமாதியே”-91.**

ஆன்மாக்களுக்கு ஆணவமல மறைப்பால் உண்டாகும் உபாதைகள் ஏழு. அவை:

- இறையின்மை
- அற்ப அறிவுடைமை
- அளவு பட்ட தன்மை,
- மாயையோடு கூடிய தன்மை
- குறைந்த அளவிலான ஆற்றல்
- சுதந்திரமின்மை
- கண்டறியும் திறனின்மை

என்பனவாகும்.

**சிவத்தினது செயல்கள் ஏழு**

அவை:

- இறைமை
- முற்றறிவு
- எங்குந்தானாதல்
- மாயையின்மை
- அளவு கடந்த ஆற்றல்
- தன்வயப்படுதல்
- ஒன்றியுணர்தல்

என்பனவாகும்.

ஆன்ம உபாதைகள் ஏழும் நீங்கி, சிவனின் உபாதி ஏழும் பொருந்தி தவத்தில் இயங்கும் தன்மையுடைய பொருளைச் சேர்வதே சமாதியின் பயன்” -92.

இவையெல்லாம் அட்டாங்கயோகத்தால் அடையக்கூடிய நன்மைகள் என்கிறார் திருமூலர்.

## தொகுப்புரை:

### 5.1 இறைமை:

இறைவனை அன்பினால் ஆட்கொள்ளலாம். கடவுளை சமயங்களால் பிரித்தல், கடவுள் நம்பிக்கையில்லாத நாத்திகர்கள் இறைவனை உணரும் நேரம் உலகில் இறைவனைத் தவிர வேறெதுவும் நிலையானது இல்லை.

### 5.2இறைமைப் பற்றி சித்தர்களின் கருத்து:

இறைமை என்பது இளமையில் பின்பற்றப்பட வெண்டிய கொள்கை . இது சித்தர்களின் வாதம். கடவுளை தரிசிக்கும் வழி- கடவுளின் உருவம் பற்றி வியாசரின் கூற்று.

### 5.3 திருமூலர் பார்வையில் இறைமை:

கணபதியின் பெருமை – விநாயகர் புரியும் ஐந்தொழில்கள் இறைவனது பெருமை, இறைவனின் இயல்பு, இறைவனின் அருள், எல்லார்க்கும் இறைவனே அருள் வழங்குவான் - மனிதர்களின் பாவ புண்ணியங்களை களிம்பறுத்தல் மனிதர்களின் பாவ புண்ணியங்களை களிம்பறுத்தல் - இறைவனே குருவாக வந்து ஞானத்தை ஊட்டுகிறான். திருக்கோயிலை இழிவு செய்வதால் ஏற்படும் தீமைகள் உள்ளமே இறைவன் வீற்றிருந்து அருளும் பெருங்கோயில் - சிவாயநம என்னும் ஐந்தெழுத்தினை ஓதுவாராயின் செய்த தீவினைகள் கெட்டு ஒழியும்.

### 5.4 சிவவாக்கியர் காட்டும் இறைமை:

கோயிலும் குளங்களும் மனத்தின் உள்ளே இருக்கின்றன. இறைவன் யாராலும் அறியமுடியாத தன்மையுடையவன். இராம இராமத்தின் பெருமை எல்லாம் இறைவன் செயல். இலிங்க வடிவமான இறைவனை மனத்துள் வைத்து தியானித்தால் பிறவிப்பிணி நீங்கும். எல்லாம் ஆனவன் இறைவன் . ஐந்தெழுத்து மந்திரம் - ஐந்தெழுத்தின் பெருமை – சிவபெருமானின் சிறப்பியல்புகளில் - வேதம் ஓதுவதால் ஒரு பயனும் இல்லை. இறைவனை அடைய சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்குவழிகளை சிவவாக்கியர் கூறுகிறார்.

## 5.5 பட்டினத்தார் பாடல்களில் இறைமை:

பட்டினத்தார் கூறும் மர்க்கட நியாயம், மார்ச்சால நியாயம் - அடியார்களின் பசிபோக்க இறைவனே வருதல் - இறைவன் ஒருவனே – தீவினையின் பயன் - பெருமானுக்கு உகந்த செயல் - சிவ தரிசனம் செய்தல்.

## 5.6 குதம்பைச் சித்தர் பாடல்களில் இறைமை:

சிந்தையில் விளங்கும் சோதிதான் இறைவன். உலகில் சூரியன் முதலாக ஒளி தரக்கூடிய அத்தனைப் பொருள்களுக்கும் மூலமானவன் - ஐம்பெரும் பூதங்களாகவும் இருப்பவன் இறைவன்.

## 5.7 அழுகணிச்சித்தர் பாடல்களின் இறைமை:

இறைவன் எப்பொழுதும் மாயையாக உள்ளான். மோருக்குள் வெண்ணெய்போல் இப்பாருக்குள் இறைவன் உள்ளான். எங்கும் காணக் கிடைக்கிற உண்மைப்பொருள் இறைவன்

## 5.8 கல்லுளிச் சித்தர் பாடல்களில் இறைமை:

யோகப் பயிற்சியைப் பற்றிக் கூறல் - எட்டுவகையோகங்களின் பலன்கள் பற்றி பாடுகிறார் கல்லுளிச்சித்தர்.

## 5.9 திருமூலர் கூறும் அட்டாங்கயோகம்.

இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி, போன்ற எட்டு வகை யோகங்கள் பற்றி திருமூலர் கருத்து அட்டாங்க யோகத்தால் அடையக்கூடிய நன்மைகள்.

## அடிக் குறிப்புகள்

1. திருஅருட்பிரகாச வள்ளலா் - திருஅருட்பா – பக்-6
2. சுகிசிவம் - ஞானமலா்கள் - பக்-62
3. சி.எஸ். முருகேசன் - சித்தா்கள் கண்ட இறைமை பக்-35
4. திருமூலா் - திருமந்திரம் - ஸ்ரீகணபதி துதிப்பாடல்
5. திருமூலா் - திருமந்திரம் - பொதுப்பாயிரம் -1
6. திரு.சம்பந்தம் - திருமூலரின் திருமந்திர விருந்து –பக்65
7. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண் 5
8. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண் 8
9. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண் 17
10. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண் 36
11. திருநாவுக்கரசா் - தேவாரம் - திருமுறை பதிகம் எ- திருமுறை (ரு) பதிகம் (க ங எ)
12. திருமூலா் - திருமந்திர விருந்து பக் -82
13. திருமூலா் - திருமந்திர விருந்து பக் -83
14. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண் -113
15. திருக்குறள் - குறள் எண் 1000
16. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண் -114
17. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண-139
18. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண-515
19. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண் -518
20. திருமூலா் - திருமந்திரம் - பாடல் எண் -519
21. திருக்குறள் - குறள் எண் 30
22. திருமூலா் - திருமந்திர விருந்து பக் -494
23. திருமூலா் - திருமந்திர விருந்து பக் -489
24. திருமூலா் - திருமந்திர விருந்து பக் -644
25. சிவவாக்கியா் - பதினெண் சித்தா் பாடல்கள் - பாடல் எண் -497
26. சிவவாக்கியா் - பதினெண் சித்தா் பாடல்கள் - பாடல் எண் -33
27. சிவவாக்கியா் - பதினெண் சித்தா் பாடல்கள் - பாடல் எண் -14
28. சிவவாக்கியா் - பதினெண் சித்தா் பாடல்கள் - பாடல் எண் -180

29. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - ஞானநிலை பக் -6
30. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்-82
31. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -8
32. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -9
33. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -32
34. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -10
35. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -11
36. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -12
37. மாணிக்கவாசகர் - திருவாசகம் - திருக்கோத்தும்பி பாடல் எண் -2
38. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்-48
39. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -35
40. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்-156
41. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்-157
42. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்-124
43. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்-125
44. சிவவாக்கியர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்-91
45. திருமூலர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்-91
46. திருமூலர் - சிவவாக்கியர் சிந்தனை – பக்-91
47. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -22
48. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -23
49. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -2
50. திருநாவுக்கரசர் -தேவாரம் - பதிகம் கக
51. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - காப்பு -1
52. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -18
53. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -19
54. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -39
55. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -40
56. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -48
57. சிவவாக்கியர் - பதினெண் சித்தர் பாடல்கள் - பாடல் எண் -49

